








# லைப்பாய் சோப்

தினசரித் தொல்லையான
அழுக்கிலிருக்கும் கிருமிகளி
லிருந்து உங்களைப்
பாதுகாக்கிறது.




இந்தியாவில் தயாரித்தது.

L. 251-50 TM

மலர் 15 இதழ் 5

# கல்கி

மன்மத ஆவணி 19

## பொருளடக்கம்

1955 செப்டம்பர் 4



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



உன்னத நடிப்பு
உணர்ச்சி செறிந்த கட்டங்கள்
உயர்தர ஹாஸ்யம்
எல்லாம் நிறைந்த
இணையற்ற சித்திரம்
A.C.பிள்ளை அளிக்கும்
வைத்தியா பிலிம்ஸ்
மங்கையர் திலகம்
டைரக்‌ஷன்·பிரசாத்
தயாரிப்பு: ஸ்ரீபாத சங்கர்........
RKF
WORLD RIGHTS CONTROLLED BY........
ராதாகிருஷ்ண பிலிம்ஸ் லிட்,
சேர்மன்-C.குமாரஸ்வாமி ரெட்டியார். (M.O. ஆலப்புழை)
34, தியாகராயா ரோடு..... மதராஸ்-17.
சென்னை........
சித்ரா
பிரபாத்
ஸரஸ்வதி
மற்றும் தமிழ்நாடெங்கும்
E.P.
BAKTHA.




மலர் 15 | இதழ் 5

தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

மன்மத ௵ | ஆவணி 19


# அரபு நாடுகளில் சுதந்திரப் போர்

**வ**ட ஆப்பிரிக்காவில் உள்ள மொராக்கோவிலும் அல்ஜீரியாவிலும் சில தினங்களுக்கு முன் ஏற்பட்ட கலகங்களுக்கு ஆயிரம் பேர் வரையில் பலியாயினர்.

இன்று, உலகிலேயே எட்டுத் திசைகளிலும் ஜனநாயக மந்திரம் ஒலித்து வரும் இக் காலத்தில், தங்கள் தங்கள் நாட்டுக்குச் சுதந்திரம் வேண்டும், அந்நிய ஆட்சி ஒழிய வேண்டும் என்று கோரியதற்காக மொராக்கோ அல்ஜீரிய நாட்டு மக்கள் பலியாக நேர்ந்தது கோரமான நிகழ்ச்சி அல்லவா?

சென்ற மகாயுத்தத்துக்குப் பிறகு பல நாடுகள் சுதந்திரம் பெற்றுள்ளன; ஆனால், மொராக்கோவும் அல்ஜீரியாவும் இன்றும் சுதந்திரமின்றி பிரஞ்சு சர்க்காரின் ஆட்சிக்கு உட்பட்ட காலனிகளாகவே இருந்து வருகின்றன.

மொராக்கோவுக்குச் சுயாட்சி உரிமை அளிக்க வேண்டும் என்று கோரிய மொராக்கோ சுல்தானை பிரஞ்சு சர்க்கார் இரண்டு வருஷங்களுக்கு முன் நாடு கடத்தி விட்டு, அந்த ஸ்தானத்தில் தாங்கள் சொன்னபடி ஆடக் கூடிய ஒரு பொம்மை சுல்தானை பிரஞ்சு சர்க்கார் நியமித்தார்கள். தேசபக்தி கொண்ட சுல்தானை நாடு கடத்தி விட்டால், மொராக்கோ பிரச்னை தீர்ந்து விடும் என்று பிரஞ்சு சர்க்கார் கனவு கண்டனர். அந்தக் கனவு பலிக்காது என்பது பின்னர் சந்தேகத்துக்கு இடமின்றித் தெரிந்து விட்டது. தங்கள் அன்புக்கும் மதிப்புக்கும் பாத்திரரான சுல்தானை பிரஞ்சு சர்க்கார் நாடு கடத்தியதைக் கண்டு மொராக்கோ மக்கள் கொதிப்பு அடைந்தனர். அவர்களின் கொதிப்பு இப்போது உச்ச நிலையை அடைந்திருக்கிறது.

மொராக்கோ தேசபக்தர்களின் எழுச்சியைத் துப்பாக்கிகளில் சமாளித்து விடலாம் என்ற எண்ணம் பிரஞ்சு அதிகாரிகளுக்கு இனி இருந்துவர இடமில்லை.

காலனிகள் ஒவ்வொன்றாக மறைந்து வருகின்றன. பாரத நாட்டிலிருந்தும் பர்மாவிலிருந்தும் பிரிட்டிஷ் ஆட்சி மறைந்து சில ஆண்டுகள் சென்று விட்டன. இந்தோனேஷ்யாவிலிருந்து டச்சு ஆட்சி போய் விட்டது. இந்தோ சீனாவிலிருந்து பிரஞ்சு ஆட்சி அநேகமாக அஸ்தமித்து விட்டது எனலாம். பாரத நாட்டிலிருந்தும் பிரஞ்சு அதிகாரிகள் மூட்டை கட்டிக் கொண்டு போய் விட்டார்கள். எகிப்து, சிரியா போன்ற அரபு நாடுகளும் அன்னிய ஆதிக்கத்திலிருந்து சுதந்திரம் பெற்று விட்டன.

சகோதர நாடுகளான அரபு நாடுகள் சுதந்திரம் பெற்ற பின்னரும்கூட மொராக்கோ மக்கள் அன்னிய ஆட்சியின்கீழ் அமைதியாக இருக்க முற்படுவார்கள் என்று பிரஞ்சு அதிகாரிகள் எண்ணுவதற்கில்லை.

மொராக்கோ தேசபக்தர்களின் எழுச்சி நியாயமானது என்பதை இப்போது சில பிரஞ்சு அதிகாரிகளே மறைமுகமாக ஒப்புக் கொள்ளத் தொடங்கியிருக்கின்றார்கள்.

மொராக்கோவுக்குச் சுயாட்சி அளிக்கும் நகல் திட்டம் பிரஞ்சு அதிகாரிகளின் ஆலோசனையில் இருந்து வருவதாகத் தெரிகிறது.

பிரஞ்சு மந்திரிகள் மொராக்கோ தலைவர்களுடன் கலந்து பேசியதன் பலனாக மொராக்கோ பிரச்னை திருப்திகரமாகத் தீரலாம் என்ற நம்பிக்கையும் சமீபத்தில் உண்டாகி யிருக்கிறது. எனினும், அதே சமயத்தில் மொராக்கோ நகரங்களில் பிரஞ்சுத் துருப்புகளின் அட்டகாசம் கடுமையாக இருந்து வருவதாய்ப் பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன.

மொராக்கோ, அல்ஜீரியா போன்ற நாடுகளில் ஏற்பட்டுள்ள கொந்தளிப்பு அடங்கி, அப் பிரச்னைகள் நிரந்தரமாகத் தீருவதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. மக்களின் விடுதலை உணர்ச்சியை உணர்ந்து மக்களிடம் மக்களாட்சியை ஒப்புவித்து விட்டு, பிரஞ்சு அதிகாரிகளும் துருப்புகளும் அங்கிருந்து வெளியேறுவது ஒன்றே வழியாகும்.

# அரசியல் மொழி

ஜனங்கள் தங்கள் தாய்மொழியில் காதல் கொண்டு மொழியை வளம் படுத்திப் பெருமையளிக்க விரும்புவது நியாயம். ஆனால் அதை வைத்துக் கொண்டு, நஷ்டம் அடையும் காரியங்களைச் செய்வது பிசகு. இந்த உண்மைக்கு மாறாக இப்பொழுது பல நடவடிக்கைகள் நடைபெற்று வருகின்றன. தேசத்தைச் சின்னாபின்னமாகப் பிரித்து நிர்வாகத்தைச் சிக்கலில் புகுத்தி விடும் பயமான நிலைமை இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது. பஸல் அலி கமிட்டியார் என்ன சிபார்சு செய்யப் போகிறார்களோ; அந்த சிபார்சுகளை இந்திய அரசாங்கமும் மக்கள் சபையும் என்ன செய்யப் போகிறார்களோ, இது தெய்வம் விட்ட வழி! நம்முடைய ராஜ்யம் இன்னும் குறுகிப் போக வேண்டிய தலையெழுத்து இருந்தால் அப்படியே நடக்கும். ஆனால் ராஜ்யம் குறுகினாலும் மக்களுடைய மனம் குறுகாமல் இருக்க வேண்டும்.

இது ஒருபுறம் இருக்க, ஹிந்தி மொழிப் பிரச்னை அப்படியே எதிரில் நிற்கிறது. 'வேண்டாதவர்கள்பேரில் ஹிந்தியைத் திணிப்பதில்லை' என்று பொறுப்பான மத்திய அரசாங்கத் தலைவர்கள் பல தடவை சொல்லி வருகிறார்கள். ஆயினும் நன்றாக யாரும் விளக்கிச் சொன்னது இதுவரையில் இல்லை. ஹிந்தியைத் திணிக்கவில்லை என்று சொல்லிக் கொண்டே, அரசியல் நிர்ணயச் சட்டத்தை விடாமல் கட்டிக் காட்டி வருகிறார்கள்! இதன் பொருள் என்ன என்பதை ஆராய வேண்டும். நம்முடைய மந்திரிகளும் ஹிந்தி கற்றுக் கொள்ள ஆரம்பிப்பதாகச் சொல்லி வருகிறார்கள். இது வெறும் வேடிக்கை வார்த்தையல்ல. ஆங்கிலம் போய் அந்த ஸ்தானத்தில் ஹிந்தி இருக்க வேண்டும் என்று ஹிந்தி பேசுபவர்கள் ஆசை. இது நிறைவேற அவர்கள் வழி தேடுகிறார்கள்; அவசரப்படுகிறார்கள்.

தமிழ் நாட்டினர் எல்லா அரசாங்க நடவடிக்கையும் தமிழிலேயே இருக்க வேண்டும் என்று விரும்புவதும் கோருவதும் சகஜமே. ஆயினும், ஆங்கிலத்தை அப்புறப்படுத்திய அதே நிமிஷம் ஹிந்திக்கு வரவேற்புக் கொடுக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டு விடும். இது தவிர்க்க முடியாத விஷயமாகும் என்பதை அனைவரும் கவனத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். அரசியல் என்பது ராஜ்ய மக்களை மட்டும் பொறுத்ததல்ல. வேரும் விழுதும் இன்னும் ஆலமரத்துக்கு இல்லாத பல அம்சங்களும் கொண்ட ஒரு அமைப்பு அது. ராஜ்யத்திலிருந்து வெளிச் செல்லும் ஒவ்வொரு நிருபமும், அறிக்கையும், வேண்டுகோளும், நியாய ஸ்தல அபீல் நடவடிக்கைகளும் ஹிந்தியில் இருக்க வேண்டியதாக ஏற்பட்டு விடும். நிலைமை படிப்படியாக மாறி, தானாக இப்படி முடிந்தால், யாருக்கும் அது துன்பம் தராது. திடீரென்றோ பலாத்காரமாகவோ வற்புறுத்தப் பட்டால் மிகவும் கஷ்டமாக இருக்கும்.

ஆங்கிலம் நமக்கு வேண்டாத ஒரு பொருளாக இருந்த போதிலும், தற்போது நடைமுறையில் சில சௌகரியங்களுக்கு ஓரளவு காப்பாக இருந்து வருகிறது அது. ஹிந்தியின் திடும் பிரவேசத்துக்குத் தடையாக அது இருந்து வருகிறது. இதைக் கவனத்தில் வைத்துக் கொண்டு நம்முடைய தமிழ் ஆர்வத்தை ஓரளவு அடக்கி, சாமர்த்தியமாக நம்முடைய காரியங்களில் வெற்றி காண வேண்டும். ஒரு போர் நடக்கும் போது பல கட்டங்களைச் சமாளிக்க வேண்டியதாகும். ஒரு கட்டத்தில் துரித வெற்றி சம்பாதிப்பதற்காக, முழுப் போரில் பெரு நஷ்டம் உண்டாகும் ஒரு முறையைக் கையாளுவது கூடாது.

திடீரென்றோ அல்லது சூறாவளி வேகத்திலோ இந்த மாறுதல் வந்தால், உடனே ஆயிரக் கணக்கான ஹிந்தி உத்தியோகஸ்தர்களை இந்த ராஜ்யத்தில் நியமித்துக் கொள்ள வேண்டியதாகும். அவர்களுக்கு வேறு படிப்போ பரீட்சையோ எதுவும் வேண்டியதில்லை. ஹிந்தி பாஷை ஒன்றே அவர்களுக்கு வேண்டிய படிப்பாக முடியும். அதன் பிறகு வட நாட்டிலிருந்து வந்து உத்தியோகங்களைப் பிடித்து விட்டார்கள் என்று வெற்று ஆட்சேபனை சொல்லி ஒன்றும் சாதிக்க முடியாது. ஒரு பாஷையைக் கற்றுக் கொடுக்க வேண்டுமானால், அல்லது அந்த பாஷையில் எழுத வேண்டுமானால், அதைத் தாய்மொழியாகக் கொண்டவர்களுக்குத்தான் முடியும் என்கிற வாதத்தைத் தடுக்க முடியாது போய்விடும். கற்பனைக் கண்கொண்டு கூர்ந்து பார்த்தால் ஹிந்தியின் திடும்பிரவேசத்தினால் உண்டாகும் நிலைமையைத் தெளிவாக நாம் காணலாம். தமிழன்பர்கள் நன்றாக யோசிக்க வேண்டிய விஷயம் இது. ஒரு நல்ல பயனைக் கருதி அதில் தீவிர பற்று ஏற்பட்டால், அந்தப் பற்றே சில சமயம் நம் விவேகத்தைக் குழப்பி விடும். பிழையைத் தவிர்த்துப் பயனைத் தேடுவதே சாமர்த்தியமாகும்.

# எல்லைத் தகராறு தீர முயற்சி

தலைவர்கள் விவேகத்துடன் நடந்து கொண்டால் எத்தகைய தர்ம சங்கடமான நிலைமையையும் வெற்றிகரமாகச் சமாளிக்கலாம் என்பதைச் சென்ற வாரம் சென்னையில் நிகழ்ந்த முக்கிய சம்பவம் நிரூபணம் செய்திருக்கிறது.

சென்னை—ஆந்திர ராஜ்ய எல்லைத் தகராறைத் தீர்ப்பதற்குற்ற நடவடிக்கைகள் எடுத்

துக் கொள்ளப்பட வில்லை என்று கண்டித்துச் சென்ற மாதம் 24-ந் தேதி சென்னை சட்டசபைக்கு எதிரில் பல தொண்டர்கள் தங்களுடைய அதிருப்தி உணர்ச்சியைக் காட்டி விட வேண்டும் என்று தீர்மானித்திருந்தனர். தமிழ் நாடு வட எல்லைப் பாதுகாப்புக் கமிட்டியின் ஆதரவில் நடப்பதாக இருந்தது. ஆனால் எல்லைத் தகராறு விஷயமாகச் சென்னை நிதி மந்திரி அளித்த வாக்குறுதி காரணமாக ஒத்தி வைக்கப்பட்டுள்ளது.

"சித்தூர் ஜில்லாவில் உள்ள காளஹஸ்தி, திருத்தணி, புத்தூர், சந்திரகிரி, சித்தூர், பழமனேரி முதலிய தாலூக்காக்கள் பற்றியும் நெல்லூர் ஜில்லாவைச் சேர்ந்த சூளூர்ப்பேட்டை தாலூக்கா பற்றியும் சமரசப் பேச்சு நடத்த விரும்புவதாக ஆந்திர சர்க்காருக்கு முன்பே அறிவிக்கப்பட்டிருக்கிறது. இவ் வருஷம் டிசம்பர் மாதத்துக்குள் சம்பாஷணைகளைத் திருப்திகரமாக முடிக்கச் சென்னை சர்க்கார் பெரு முயற்சி செய்வார்கள். இவ் விஷயமாகச் சகலருக்கும் தங்கள் கருத்துக்களைத் தெரிவிக்கச் சந்தர்ப்பம் அளிக்கப்படும்."

இது நிதிமந்திரி கூறியதன் சாரம். இந்த உறுதி காரணமாக, இவ் வருஷக் கடைசி வரையில் சத்தியாக்கிரக திட்டத்தை ஒத்தி வைத்திருப்பதாகத் தமிழரசுக் கழகத் தலைவர் திரு ம. பொ. சி. அறிவித்துள்ளார்.

சென்னை—ஆந்திர எல்லையில் வாழும் மக்களின் உணர்ச்சிப் பெருக்கை அலட்சியம் செய்யாது, அவ் விஷயமாக ஆந்திர சர்க்காருடன் நேரடியாகப் பேசித் தீர்க்கச் சென்னை சர்க்கார் முன் வந்ததும் மந்திரியின் வாக்குறுதியில் பூரண நம்பிக்கை வைத்து சத்தியாக்கிரகத்தை ஒத்தி வைக்கத் தமிழரசுக் கழகத் தலைவர் தீர்மானித்ததும் பாராட்ட வேண்டிய காரியமாகும்.

இது விஷயமாக விரைவில் நியாயமான முடிவு சமரசமான விதத்தில் ஏற்பட வேண்டும் என்பதே நமது விருப்பம்.

# பர்மா இந்தியர்களுக்குப் புதிய உத்தரவு

சில தினங்களுக்கு முன் பர்மாவிலிருந்து வந்த ஒரு செய்தி பலரையும் திகைக்க வைத்திருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

"பர்மாவில் உள்ள இந்தியர்கள் இனிமேல் இந்தியாவில் உள்ள தங்கள் மனைவி மக்களுக்கு மாதம் ரூபாய் முப்பதுதான் அனுப்பலாம் என்று பர்மா தபால் இலாக்கா அறிவிக்கிறது. இதுவரை இந்தியர்கள் மாதம் நாற்பது ரூபாய் விகிதம் அனுப்புவதற்கு அனுமதிக்கப்பட்டிருந்தது"—இதுதான் அந்தச் செய்தியாகும்.

சிறு தொகை அனுப்பும் விஷயமாகக் கூட இந்தியர்களுக்குச் சலுகை காட்ட விரும்பாத பர்மா சர்க்கார் அங்குள்ள இந்தியர்களுக்கு வேறு என்ன வாழ்க்கைச் சவுகரியம் அளிக்கப் போகிறார்கள் என்று பர்மா இந்தியர்களிடையே கலக்கம் ஏற்பட்டிருப்பது இயல்பே. சென்ற வாரம் ரங்கூனில் நடந்த அகில பர்மா இந்தியர் காங்கிரசிலும் அவ் விஷயமாகப் பிரஸ்தாபித்திருக்கிறார்கள்.

மாதம் நாற்பது ரூபாயைக் கொண்டு ஒரு குடும்பத்தில் எத்தனை பேர் ஜீவனம் நடத்த முடியும்! அந்த அற்பத் தொகையைக் கூட பர்மா சர்க்கார் முப்பதாகக் குறைத்திருக்கிறார்கள் எனில், அவ் விஷயமாக இந்தியாவில் மனைவி மக்கள் உள்ள லட்சக்கணக்கான பர்மா இந்தியர்களின் மன நிலை எப்படியிருக்கும் என்பதை ஊகித்துக் கொள்ளலாம்.' முப்பது ரூபாயில் ஜீவனம் நடத்த முடியாத அவர்களுடைய குடும்பங்களும் இனி பர்மாவுக்கே செல்ல வேண்டிய அவசியமான நிலைமையும் ஏற்பட்டு விடக்கூடும் என்பதையும் பர்மா அரசாங்கம் நினைவில் கொள்ள வேண்டும்.

இந்தியர்களுக்கு விசேஷச் சலுகை எதுவும் அளிக்காததுடன்,' இருக்கும் அற்ப வசதிகளையும் குறைக்க முற்படுவது இந்தியா—பர்மா நல்லுறவு பலமடைவதற்கு உகந்த காரியமல்ல. ஏற்கெனவே பர்மா நில ஆர்ஜிதச் சட்டத்தினால் அந்த நாட்டில் உள்ள இந்தியர்கள் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளனர். இந்நிலையில் அங்குள்ள இந்தியர்களுக்கு மேற்கொண்டு எவ்வித பாதகமும் ஏற்படாமல் இருப்பதற்கான முறைகளைக் கைக் கொள்ள வேண்டியது அரசாங்கத்தின் முக்கியமான கடமையாகும்.

# கல்கி திரு கிருஷ்ணமூர்த்தி நினைவுச் சிறுகதைப் போட்டி

சிறுகதைப் போட்டியின் முடிவுத் தேதியை ஜூலை 31-ந் தேதி வரை நீடித்தது, பல எழுத்தாள நண்பர்களுக்குச் சௌகரியமாக இருந்தது என்று தெரிந்து மகிழ்கிறோம். இந்தப் போட்டிக்கு என்று நமது காரியாலயத்துக்கு இரண்டாயிரத்து ஐந்நூறு கதைகளுக்குமேல் வந்திருக்கின்றன. சுமார் இரண்டாயிரம் எழுத்தாளர்கள் இதில் கலந்து கொண்டிருக்கிறார்கள் என்பதை மிக்க மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்கிறோம்.

போட்டிக்கு வந்து சேர்ந்துள்ள கதைகள் எல்லாம் வகைப்படுத்திப் பரிசீலனை செய்யப்படுகின்றன. இந்தப் பரிசீலனைக்கு என்று பஞ்சாயத்தார்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். கதைகள் அனைத்தையும் பார்வையிட்டுப் பஞ்சாயத்தார்களின் முடிவு தீர்மானமானதும், விவரம் வெளியிடுகிறோம். இந்தப் போட்டியில் பரிசு பெறும் கதைகளில் முதலாவது கதை காலஞ் சென்ற பேராசிரியர் திரு கிருஷ்ணமூர்த்தி அவர்களின் வருஷத் திதியை யொட்டி டிஸம்பர் நாலாந்தேதி இதழில் வெளியாகும்.

இந்தப் போட்டியில் எழுத்தாள நண்பர்கள் இத்தனை ஊக்கத்தோடு கலந்து கொண்டதற்கு நன்றி.

மந்திரிகள் வகுப்பு!





# குத்திக் கொள்ளாதீர்கள்

ராஜாஜி

பி.ஸி.ஜி யிலுள்ள பசு க்ஷயக் கிருமிகள் வேறு; மானுட நோய்க் கிருமிகள் வேறு. மாடுகளுக்கு வரும் க்ஷய வியாதிக் கிருமிகளிலிருந்து உற்பத்தி செய்த கிருமிகளே பி. ஸி. ஜி திரவத்திலுள்ள கிருமிகள். அவற்றை வைத்து மனிதனுக்குக் காப்புத் தரலாம் என்பது பி. ஸி. ஜி ஊசி குத்தும் தத்துவம்.

மாடுகளுக்குக் கூட இந்த பி. ஸி. ஜி உதவவில்லையென்று பரீட்சையும் முயற்சியும் செய்து பார்த்து விட்டு, அமெரிக்காவில் மாட்டு டாக்டர்கள் முடிவு செய்து பி. ஸி. ஜி யை விட்டு விட்டார்கள். இது அமெரிக்காவில் பிரதியொரு ஆண்டும் பிரசுரமாகி வரும் 'கரென்ட் தெரபி' என்கிற சிறந்த வைத்திய விஞ்ஞானத் தொகை நூலின் 1952 வருஷத்திய மலரிலிருந்து தெரிய வருகிறது. இதைச் சென்ற ஆகஸ்டு மாதத்தில் ஒரு பிரசங்கத்தில் எடுத்துக் காட்டினேன். எந்த மிருகங்களின் வியாதிக் கிருமிகளிலிருந்து பி. ஸி. ஜி திரவம் செய்யப்பட்டதோ அந்த மிருகங்களுக்கே பயன்படாத ஒரு விஷம் நம்முடைய குழந்தைகளுக்கா பயன் படப் போகிறது?

யானையைக் கொண்டு யானையைத் தடுக்கலாம் என்ற மந்திரத்தை நம்பிச் சில வியாதிகளுக்குத் தடை வைத்தியம் செய்யப்பட்டு வருகிறது. ஆனால் இந்த க்ஷய நோய் யானையைக் கண்டு பயந்து அதைப் பூனையாக்கி அந்தப் பூனையைக் கொண்டு காட்டு யானையைத் தடுத்து விடுவோம் என்று பி. ஸி. ஜிக்காரர்கள் சொல்லுகிறார்கள். பூனை எலியைத்தான் பிடிக்கும். வீட்டில் இருக்கும் பாலைத் திருடித் தின்னும். பி. ஸி. ஜி ஊசி குத்தின் பிரயோஜனம் இதுவே.

பி. ஸி. ஜி ஊசி குத்தினால் உள்ளே செலுத்துவது மாட்டு க்ஷயத்தின் தாயாதியான ஒரு புது வியாதி. அதையும் நம்முடைய உயிர்ச் சக்தி எப்படியோ பெரும்பாலும் பொறுத்துக் கொண்டு தடுத்துச் சமாளித்து வருகிறது. எத்தனையோ நோய்களின் கிருமிகள் நம் சரீரத்தில் பிரவேசித்தாலும் ஆரோக்கிய நிலையில் இருக்கும் தேகம் அவற்றையெல்லாம் சமாளித்துக் கொண்டு தன் பாட்டுக்குச் சுகமாக இருக்கும். இது மேல் நாட்டு வைத்திய சாஸ்திரமே சொல்லும் உண்மை. சில பலவீனர்களும் துரதிர்ஷ்டசாலிகளுமே வியாதிக்கு இரையாகி விடுகிறார்கள். பி. ஸி. ஜி யால் உண்டாகும் வியாதியை — அதாவது நாமே வேண்டுமென்று செய்து கொள்ளும் வியாதியைப் பெரும்பாலோர் சமாளித்துக் கொண்டு தான் விடுகிறார்கள். ஆனால் சிலர் அதற்கு இரையாகிறார்கள். என்னுடைய கேள்வி யாதெனில் ஒரு பயனுமில்லாத பி. ஸி. ஜி வியாதியை ஏன் வேண்டுமென்று குரங்குச் சேஷ்டை செய்து உள்ளே செலுத்திக் கொள்ள வேண்டும்? பிறகு அதற்காக ஏன் டாக்டர்களிடம் போக வேண்டும்? அவர்கள் இது பி. ஸி. ஜி யினால் அல்ல, வேறு தொத்து, என்றெல்லாம் பி. ஸி. ஜி யின் பெயரைக் காப்பாற்றுவதற்காகச் சமாதானம் சொல்வதும் இதெல்லாம் என்னத்திற்கு? வியாதிகள் இல்லாத குழந்தைகளைச் சும்மா விட்டு விடுவது தான் விவேகம்.

விஷத்தைச் சுத்தி செய்தேன் என்கிறார் பி. ஸி. ஜி வாதி. பல மேல் நாட்டு நிபுணர்கள் அந்தச் சுத்தியை நம்பலாகாது என்கிறார்கள். நான் பிரசுரித்திருக்கும் புத்தகத்தில் அந்த விஷயங்களை ஆதாரத்துடன் எடுத்துக் காட்டியிருக்கிறேன். சர்க்கார் வைத்தியர்கள் நான் சொல்லுவதை ஏற்றுக் கொள்ளாமல் தாங்கள் பிடித்த வாதமே வாதம் என்று ஊசி குத்திக் கொண்டே போனால் நான் என்ன செய்ய முடியும்? நம்முடைய குழந்தைகளை ஆண்டவன் காப்பாற்றுவானாக!

சட்டப்படி கட்டாயப்படுத்த உரிமையில்லை. ஆயினும் நம்முடைய மக்கள் சிலர் அறியாமையாலும் தாட்சண்யத்துக்கு உட்பட்டும் அதிகாரிகளைக் கண்டு பயப்பட்டும் அவர்களுடைய ஆரவாரத்துக்கும் உபத்திரவத்துக்கும் இணங்கிக் குழந்தைகளைக் குத்திக் கொள்ளச் செய்கிறார்கள். நம்முடைய குழந்தைகளின் பேரில் உரிமை நம்முடையது. பயமின்றி வேண்டாம் என்று நம்முடைய கருத்தைக் கண்டிப்பாகவும் தைரியமாகவும் சொல்லி விடலாம். இதற்கு நமக்கு முழு உரிமை உண்டு.

1952-ம் வருஷம் மே மாதம் 22-ம் தேதி தில்லி ஆரோக்கிய மந்திரி அவர்களுக்கு இந்த பி. ஸி. ஜி சமுதாய திட்டத்தை நான் இந்த ராஜ்யத்தில் செலுத்த ஒப்புக் கொள்ள முடியாது. வேண்டாம் என்று எழுதினேன். அதுமுதல் இதுவரையிலும், இப்போதும், அதுவே என்னுடைய உறுதியான அபிப்பிராயம். வேண்டாம் என்று சொல்லுவதற்குப் பயப்படாதீர்கள்.

# என்ன சேதி?

## மாணவர் ஒழுக்கம்

திருவனந்தபுரத்திலிருந்து ஒரு நல்ல செய்தி வந்திருக்கிறது. உலகத்திலுள்ள எந்த நாட்டு மாணவர்களுக்கும் இந்திய மாணவர்கள் சோடை போனவர்களல்ல என்பதைத் திருவனந்தபுரம் மாணவர்கள் நிரூபித்திருக்கிறார்கள். அவர்களை நாம் மனமாரப் பாராட்டுகிறோம். இந்த உண்மையை உலகறியச் செய்த கல்லூரிப் பிரின்ஸிபல் டாக்டர் ஸி. எஸ். வெங்கடேசுவரன் அவர்களும் நமது பாராட்டுக்கு உரியவர்.

இப்படியெல்லாம் பாராட்டும்படி அவர்கள் என்ன காரியம் சாதித்து விட்டார்கள்? ஒன்றுமில்லை. பிரின்ஸிபல் மாணவர்களைப் பார்த்து, "நீங்கள் நல்லவர்கள்; யோக்கியமானவர்கள் என்று நான் பரிபூரணமாக நம்புகிறேன்" என்றார்.

"உங்கள் நம்பிக்கை ரொம்பவும் சரியானதே!" என்று மாணவர்கள் காரியத்தில் பதிலளித்தார்கள். இதுகூடப் புதிராகத்தான் இருக்கிறதல்லவா?

சமீபத்தில் அங்கு நடைபெற்ற கால் வருடப் பரீட்சையில் மாணவர்கள் காப்பியடிப்பதைத் தடுக்கவும், வேறு எவ்வித சேஷ்டைகள் புரியாமலிருப்பதற்காகவும் மேற்பார்வையாளர் யாரும் நியமிக்கப்படவில்லை. மாணவர்கள் விடைத் தாளில், "நான் பிறருக்கு உதவவுமில்லை; யாரிடமிருந்து உதவி பெறவும் இல்லை என்று என் சுயகௌரவத்தின் மீது ஆணையிட்டுச் சொல்லுகிறேன்" என்று வாக்குமூலம் எழுதிக் கொடுத்திருக்கிறார்கள். அவ்வளவுதான்.

இம்முறை வெகு வெற்றிகரமாக நடந்திருக்கிறது.

பரீட்சை எழுதப் போகும் மாணவர்களைத் திருடர்களாகவும், அவர்களை மேல் பார்க்க ஒரு ஆசிரியரைப் போலீஸ்காரராகவும் நியமித்திடும் காரியம் திருவனந்தபுரத்தில் நின்றிருப்பது அறிந்து மகிழ்கிறோம்.

அமெரிக்காவில் இப்படி "கௌரவ முறைப் பரீட்சை" நடத்தப்பட்டு வருகிறதாம். அதைத்தான் இங்கும் கையாண்டிருக்கிறார்கள் என்று அறிகிறோம்.



டாக்டர்:—கோகலே ஹாலில் ராஜாஜி பேசியபோது ஏராளமான கூட்டமாமே—ஊசி போட இடம் இல்லையாமே!

ரிப்போர்ட்டர்:—கூட்டமே ஊசிபோடக் கூடாது என்பதற்குத்தானே!

## காப்பியடிக்க வேண்டாம்!

மாணவர்கள் பரீட்சைகளில் காப்பியடிப்பதைத் தவிர்க்க அமெரிக்க முறையைக் காப்பி யடித்தோம்! இப்படி நல்லதை மட்டும் அமெரிக்காவிலிருந்து காப்பி யடித்தால் நல்லது. ஆனால்......

ஹாலிவுட்டிலிருந்து வரும் படங்களிலுள்ள நடனத்தைப் போலவும், சங்கீதத்தைப் போலவும், நமது படங்களில் நமது படாதிபதிகள் சிறிது காலமாகப் புகுத்தி வருவது நாம் அறிந்ததே.

இப்படிப்பட்ட சமயத்தில் ஹாலிவுட்டிலிருந்து இந்தியாவுக்கு வந்துள்ள பிரபல பட முதலாளி டாக்டர் அலெக்ஸாண்டர் மார்க்கே, "எல்லா விஷயங்களிலும் மேற்கத்தி நாடுகளை இந்தியா காப்பி யடிக்கக் கூடாது. இந்தியாவில் பிரும்மாண்டமான ஆத்மஞானச் சுரங்கம் இருக்கிறது. மக்களை விழிப்படையச் செய்து, இந்தப் பொக்கிஷங்களை உலக மக்களுக்குக் கிடைக்கும்படி செய்யும் பொறுப்பு இந்தியர்களது" என்றார்.

இந்த விஷயத்தை நமது அதிபதிகள் மனத்தில் நன்றாய்ப் பதித்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறோம்.

### விவசாயிகள் மன்றம்

நாட்டின் முதுகெலும்பாக விளங்குபவர்கள் விவசாய சமுதாயத்தினர் தான் என்றால் ஏதோ உபசார வாக்கு என்று நினைக்கக் கூடும். ஆனால் சர்க்காரின் வருமானத்தில் 60 சதவிகிதம் நிலத்தில் பாடுபடும் விவசாயிகளிடமிருந்தே வருகிறது என்று சொன்னால் 'முதுகெலும்பு' என்பதின் பொருள் விளங்கி விடும். நிலத்தில் நின்று பாடுபடும் மக்கள் பெரும்பாலும் பழைய சம்பிரதாயங்களை விடாப்பிடியாகக் கொண்டிருப்பவர்கள். நவீன முறைகளைக் கையாளத் தயங்குபவர்கள். படிப்பு வாசனை அற்றவர்கள். இவர்கள் கஷ்ட சுகங்களை அறியவும் புது முறைகளைப் புகுத்தவும் விவசாய மன்றம் ஒன்று சென்ற ஆகஸ்டு மாதம் 18-ந் தேதி மத்திய சர்க்கார் உதவி மந்திரி ஸ்ரீ ஏ. பி. ஜெயின் அவர்களால் ஆரம்பித்து வைக்கப்பட்டது. மன்றம் சர்ச்சை அரங்காகத் தொழிற்படும். அரசியல் நோக்கம் ஒன்றுமே கிடையாது. நாட்டின் விவசாய அபிவிருத்தியே அதன் நோக்கம். அதற்காவன புரிவதே அதன் லட்சியம்.




ஆகஸ்டு 23-ந் தேதி சென்னை கோகலே ஹாலில் பி. ஸி. ஜி குறித்துத் தமது கருத்துக்களை விரிவாகவும், தெளிவாகவும் பல உதாரணங்களுடன் நகைச்சுவையோடு எடுத்துக் கூறினார் ராஜாஜி. சுமார் இரண்டரை மணி நேரம் நடந்த இந்த ஆங்கிலச் சொற்பொழிவை ஹாலில் கூடியிருந்த அத்தனை மக்களும் மிகவும் கவனத்தோடு கேட்டு அனுபவித்த காட்சியை மேலே காணலாம்.

இதை நடத்த முன்வந்திருப்பவர் விவசாயக் குடும்பத்தில் தோன்றி விவசாயக் கல்லூரியில் பயின்று பட்டமும் பெற்ற இளைஞர் திரு எஸ். கே. சாமி. சமீபத்தில் அமெரிக்காவில் ஆறுமாதம் பல விவசாயப் பண்ணைகளில், விவசாயம் நடத்தும் குடும்பத்தாருடன் வசித்து அங்கு கையாளப்படும் நவீன முறைகளையும் நேர்முகமாக அறிந்து வந்திருக்கிறார். நம் நாட்டிலும் விவசாயம் முன்னேற வேண்டும் என்று துடியாய்த் துடிக்கிறார். அவர் தென்காசியிலிருந்து பத்து மைல் தூரத்திலுள்ள இடகால் என்ற கிராமத்தைச் சேர்ந்தவர். அங்கு அவர் நடத்தும் விவசாயப் பண்ணையைப் பார்க்கவும், இந்திய விவசாய முறையை அறியவும் அமெரிக்காவிலிருந்து வரப் போகும் மாணவர் கோஷ்டியில் ஒரு விவசாய மாணவரும் விவசாய மாணவியும் அவரது ஊரில் தங்கிப் பண்ணையைப் பார்க்கப் போகிறார்கள் என்று அறிகிறோம்!

இந்த இளைஞரின் ஊக்கத்தின் பயனாக விவசாய மன்றத்தில் பல விவசாயிகள் சேர்ந்து நாட்டின் நிலச் செல்வத்தைப் பெருக்குவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

### பிரகாஷ் மண்டபம்

சென்ற ஞாயிற்றுக் கிழமை தாசப் பிரகாஷ் ஹோட்டலில் புதிதாக அமைத்துள்ள சிறந்த வெளி நாடக மேடையை நிதி மந்திரி ஸ்ரீ ஸி. சுப்பிரமணியம்



சுதந்திர தினத்தன்று பிருந்தி வைன் ஆர்ட்ஸ் சொஸைட்டியின் ஆதரவில் குமாரி மாலதியும், குமாரி வனமாலாவும் சென்னை 'மெமோரியல் ஹாலில் நடனமாடிச் சபையோரை மகிழ்வித்தார்கள். ஸ்ரீமதி ராஜலக்ஷ்மி சந்தானம் பின்னணி சங்கீதம் பாடினர்.

திறந்து வைத்தார். இந்த வைபவத்துக்குச் செட்டி நாட்டு அரசர் முத்தைய செட்டியார் தலைமை வகித்தார்.

திறந்த வெளியில் புல்தரையில் சுமார் ஆயிரம் பேர் அமர்ந்திருந்து பார்க்கலாம். நாடக மேடை எல்லா நவீன வசதிகளும் பெற்று அழகாகத் துலங்குகிறது. அந்த மேடையில் அன்று, "விதியை வென்றது!" என்ற ஹாஸ்ய நாடகத்தை யுனைடெட் அமெச்சூர்ஸ் நடித்து, வந்திருந்த விருந்தினரை ஹாஸ்ய வெள்ளத்தில் அமிழ்த்தினர். ஸ்ரீ ஒய். ஜி. பார்த்தசாரதி யமதர்மராஜனாக நடித்தார். சத்தியமூர்த்திகளாக நடித்தவர்களும் நன்றாக நடித்தனர். விரைவில் பிரகாஷ் மண்டபத்தில் பல நாடகங்கள் நடிக்கப்பட்டு, என்றும் பிரகாசமாக விளங்கும் என்று எதிர்பார்க்கிறோம்.

## சென்னையில் கம்பர் திருநாள்

'கல்வி சிறந்த தமிழ்நாடு — புகழ்க் கம்பன் பிறந்த தமிழ் நாடு' என்று கம்பன் பிறந்த தமிழ் நாட்டுக்கு ஏற்றம் கொடுத்தார் பாரதியார். சென்னைக் கம்பர் கழகத்தார் இவ்வருடம் நவம்பர் மாத இரண்டாவது வாரத்தில் எட்டாவது கம்பர் மகாநாட்டை வெகு சிறப்பாகக் கொண்டாட முடிவு செய்துள்ளனர். இந்த வருஷ முடிவுக்குள் கம்ப ராமாயணத்திலிருந்து சில பாடல்களைத் திரட்டி ஒரு சிறு புஸ்தகம் வெளியிடப் போகிறார்கள். இதற்காக அறிஞர்களடங்கிய ஒரு கமிட்டியும் அமைத்திருக்கிறார்கள்.

கவிச் சக்கரவர்த்தி கம்பரது திருநாளைக் கோலாகலமாகக் கொண்டாட முன் வந்துள்ள கம்பர் கழகத்தாருக்குத் தமிழ் மக்களின் ஒத்துழைப்பு பூரணமாகக் கிடைக்கும் என்று எதிர்பார்க்கிறோம்.






## 84. யுத்தம் ஆரம்பித்தது

மால்யவான் என்ற விருத்தனை ராக்ஷசன் ராவணனுக்கு எவ்வளவோ சொல்லிப் பார்த்தான்.

"உன்னுடைய நல்ல காலம் முடிந்தது. நீ செய்து வந்த பாப காரியங்களால் உன் தேஜஸ் குறைந்து போயிற்று. நீ பெற்றிருக்கும் வரங்களை இனி நம்பாதே! சமாதானம் செய்து கொள். இப்போது வந்திருக்கும் சேனையைப் பார். மானுடர்களும் வானரங்களும் கரடிகளுமான சேனை பயங்கரமாக வந்து நிற்கிறது. சேதுபந்தன அற்புதத்தைப் பார். மகா விஷ்ணுவே மனித சரீரத்தில் வந்து விட்டான் என்று எண்ணுகிறேன்." இவ்வாறு கிழவன் சொன்னான்.

இதையெல்லாம் கேட்க ராவணன் விரும்பவில்லை. "நீர் சொல்லும் சொற்கள் எனக்கு கர்ண கடோரமாக இருக்கின்றன. நீர் சத்துருவோடு சேர்ந்து விட்டீர் போலிருக்கிறது. மனித ஜாதிக்கு பலம் ஏது? தகப்பனால் காட்டுக்குத் துரத்தப்பட்ட ஒரு அற்ப மனிதனைக் கண்டு எல்லாரும் பயப்படுகிறீர்கள். குரங்குகளையும் கரடிகளையும் நம்பி ஒரு மனிதன் வந்திருக்கிறான். இவன் உங்களுக்குப் பெரும் பயத்தைத் தருகிறான். உங்களைப் பார்த்து எனக்கு வெட்கமாக இருக்கிறது.

"என்மேல் உங்களுக்குப் பொறுமையா? ஏன் இப்படி என்னிடம் பேசுகிறீர்கள்? நான் ராமனுக்கு வணங்க முடியாது. நீதி சாஸ்திரத்தில் இது குற்றமாயிருந்தால் அது என் சுபாவத்தில் ஏற்பட்ட குற்றம். அதை என்னால் மாற்ற முடியாது என்று வைத்துக் கொள்ளுங்கள். யுத்தம் செய்து மடிந்தாலும் மடிவேன், ராமனிடம் சமாதானம் கேட்க மாட்டேன்" என்றான்.

"யோசித்துச் செய்ய வேண்டியதைச் செய். லங்கேசன் வெல்க! ராவணன் வெல்க!!" என்று சொல்லி விட்டு மால்யவான் வருத்தத்தோடு தன் வீடு திரும்பினான். இவன் ராவணனுக்குத் தாய் வழியில் பாட்டன்.

* * *

ராவணன் தன்னுடைய வீரர்களை அந்த அந்த இடத்துக்கு இவர் இவர் பொறுப்பு என்று அமைத்து விட்டான். பிரஹஸ்தனைக் கிழக்கு வாயிலுக்கும், மகா பார்சுவனையும் மகோதரனையும் தெற்கு வாயிலுக்கும், தன் மகனும் மாயங்கள் கற்ற மகாவீரனு

மான இந்திரஜித்தை மேற்குவாயிலுக்கும் காப்புப் பொறுப்பாக அமைத்து விட்டு வடக்கு வாயிலைத் தானே காப்பது என்று முடிவு செய்தான். மகா வீர பராக்கிரமனான விரூபாக்ஷனை நகரத்துக்குள்ளிருக்கும் சேனைக்குத் தலைவனாக நியமித்தான்.

இவ்வாறு தன் சேனையையும் வீரர்களையும் விதானப்படுத்தி விட்டுக் காரியங்கள் வெற்றிகரமாக முடியும் என்று திருப்தி யடைந்தான். விநாச காலம் நெருங்கியபடியால் யார் சொல்லியும் கேட்காமல் இவ்வாறு ஏமாந்தான். மந்திரிகள் ஸ்துதியும் ஜெய கோஷமும் செய்து அரசனைச் சந்தோஷப் படுத்தி விட்டுக் கலைந்தார்கள்.

• • •

ராமனும் சுக்ரீவனும் விபீஷணனும் மற்றவர்களும் யுத்தக் கிரமத்தைப் பற்றி யோசிக்கக் கூடினார்கள். விபீஷணன் ராவணனுடைய ஏற்பாடுகளைப் பற்றிச் சாரர்கள் போய்ப் பார்த்து விட்டு வந்ததை யெல்லாம் எடுத்துச் சொன்னான்.

"இப்போது ராவணன் திரட்டி யிருக்கும் சேனையானது கணக்கிலும் பலத்திலும் வீரத்திலும் குபேரனை எதிர்த்த சேனையைவிடப் பெரிது என்பதை அறிவீர்களாக. ஆயினும், எனக்குச் சந்தேகமில்லை, ராமசந்திரனுடைய வெற்றி நிச்சயம்" என்றான் விபீஷணன்.

ராமனும் வீரர்களை ராக்ஷசச் சேனையை எதிர்ப்பதற்குப் பிரித்து விட்டான். "நீலன் கிழக்குக்கோட்டை வாயிலில் பிரஹஸ்தனை எதிர்க்க வேண்டியது. தெற்கே மகோதரனையும் மகா பார்சுவனையும் அங்கதன் எதிர்க்க வேண்டியது. மேற்கு வாயிலைக் காத்து வரும் மாயாவியான இந்திரஜித்தை ஹனுமானே எதிர்க்க வேண்டியது. உலகத்தை உபத்திரவம் செய்யும் ராவணனை நானும் லக்ஷ்மணனும் எதிர்த்து லங்கையில் பிரவேசிப்போம். சுக்ரீவனும் ஜாம்புவானும் விபீஷணனும் நம்முடைய சேனையுடன் இருக்கலாம்" என்று அணிவகுத்தான்.

ராமன் அன்று ராத்திரி சுவேல மலைமேல் சேனையுடன் தங்கினான். மறுநாள் காலை எழுந்து அங்கிருந்து பார்த்தார்கள். திரிகூட மலைமேல் மனத்தைக் கவரும்அழகுடன் ஜொலிக்கும் லங்கா நகரம் ஆகாயத்திலிருந்து தொங்குவதுபோல் காட்சி தந்தது. கோட்டை மதிலைக் காத்து நின்ற ராக்ஷச சேனையின் வரிசை மற்றொரு மதிலைப் போல் காணப்பட்டது.

லங்கா நகரத்தின் மாட மாளிகைகளின் அழகையும் ஐசுவரியத்தையும் ராமன் பார்த்து, "ஐயோ, கால பாசத்தால் தூண்டப்பட்ட ஒருவனுடைய மகா பாப காரியத்தின் பயனாக இவ்வளவு ஐசுவரியமும் இந்த ராக்ஷசக் குலமும் அழிய வேண்டியதாயிற்று. நற்குலத்தில் பிறந்த இவன் தன் ஜன்மத்தின் பெருமையை அறிந்தும் இப்படி மூர்க்கனாகப் போய்த் தன் மரணத்தைக் கூப்பிட்டழைத்துத் தன்னைச் சேர்ந்தவர்களையும் அழிக்கிறானே!" என்று இரங்கினான்.

"நடத்த வேண்டிய யுத்தத்தைச் சரியாக நடத்தி இந்த துஷ்டனை அழிப்பதில் மனத்தைச் செலுத்துவோம். போரில் பெரும் குழப்பமுண்டாகும். ராக்ஷசர்கள் பல மாய வேஷம் போடுவார்கள். நம்முடைய சேனையிலுள்ள வானரர்களும் கரடிகளும் தம் சொந்த வடிவத்திலேயே நின்று யுத்தம் செய்யட்டும். ராக்ஷச ராஜன் தம்பியும் அவன் நண்பர்கள் மட்டும் என்னோடும் லக்ஷ்மணனோடும் மானிட உருவத்தில் இருக்கலாம். அரக்கர்கள் எந்த



வேஷம் போட்டாலும் மனித உருவத்தையாவது வானர உருவத்தையாவது எடுக்க மாட்டார்கள். அவர்களுடைய கர்வம் அதற்கு இடந் தராது. ஒழுங்காக எதிர்த்து நின்றோமானால் வதம் செய்ய வேண்டியவர்களை வதம் செய்யலாம். துணை செய்ய வேண்டியவர்களுக்குத் துணை செய்யலாம்" என்று ராமன் சொல்லி முடித்தான்.

• • •

சேனையுடன் சுவேலா மலையிலிருந்து இறங்கி லங்கா நகரத்தை அடுத்த வனத்தில் பிரவேசித்தார்கள். கடலைப் போன்ற வானர சேனை வனத்தில் இறங்கியதும் அவ்விடம் வசித்து வந்த நானாவித மிருகங்களும், பட்சிகளும் பயந்து இங்கு மங்குமாய்ச் சென்றன. வனத்தின் அழகை முனிவர் தம் தனிப் பாணியில் வர்ணிக்கிறார். மேலே மலைச் சிகரத்தில் மிக பத்திரமாகக் காக்கப்பட்டு வந்த லங்கா நகரத்தையும் வர்ணிக்கிறார். மலைக் கோட்டையையும் விசுவகர்மாவினால் நிர்மாணிக்கப் பட்ட திவ்விய சௌந்தர்யமான நகரத்தையும் கிழிருந்து பார்த்து ராமன் 'என்ன அழகு! என்ன செல்வம்!' என்று வியப்பில் மூழ்கினான். ராக்ஷச வீரர்களின் பலத்தையும் யுத்தப் பரியையும் கோட்டை வாயிலையும் மதிலையும் யந்திரங்களையும் பார்க்கப் பார்க்க வானரங்களின் உற்சாக வேகம் மேலும் மேலும் பொங்கிற்று.

யாரும் எதிர்பார்க்காத சமயத்தில் சுக்ரீவன் திடீர் என்று ஒரு பாய்ச்சல் பாய்ந்து லங்கா நகரத்தின் ஒரு கோபுர மேடையில் இறங்கினான். அங்கே ராவணன் தன் பரிவாரத்துடன் திவ்விய ஆசனத்தில் உட்கார்ந்திருந்ததைக் கண்டு இவ்வாறு குதித்துப் பாய்ந்தான். கருத்த மேகக் கூட்டத்தைப் போலவும் சந்தியா கால செவ்வானம் போலவும் ராவணன் சிவந்த வஸ்திரம் போர்த்துக்கொண்டு அமர்ந்திருந்தான். ஐராவதத்தின் தந்தங்களால் குத்திக் காயப் படுத்தப் பட்ட வடு அவனுடைய அகன்ற மார்பில் சந்திர பிம்பத்தைப் போல் பிரகாசித்துக் கொண்டிருந்தது.

"ராவணா! சிக்கினாய்! ராமனுடைய தோழனும் அடிமையுமான சுக்ரீவன்



நான். இன்று நீ முடிந்தாய்!" என்று அவன் மேல் பாய்ந்து அவன் கிரீடத்தைக் கீழே தள்ளி ஒரு அறை அறைந்தான். பிறகு இருவருக்கும் பெரு மல் யுத்தம் நடந்தது.

* * *

இருவரும் மல் யுத்தத்தில் நிபுணர்கள். அந்த சாஸ்திரத்தில்கண்ட எல்லா வித்தைகளையும் ஒருவர் மேல் ஒருவர் காட்டினார்கள். ராவணன் வெகு கஷ்டப்பட்டுப் போனான். அதனால் அவன் மாய வித்தைகளில் இறங்கினான். அப்போது சுக்ரீவன் அவனை விட்டு விட்டு ஒரே பாய்ச்சலாக ராமன் இருந்த இடம் மறுபடி வந்து குதித்தான்.

இவ்வாறு சூரிய புத்திரன் அற்புத காரியம் செய்து விட்டு வந்ததைக் கண்ட வானரத் தலைவர்கள் தங்கள் அரசனைப் புகழ்ந்து பெரும் ஆரவாரம் செய்தார்கள்.

சுக்ரீவன் க்ஷேமமாகத் திரும்பி வந்ததைப் பார்த்த ராமன் சந்தோஷமடைந்தான். வானரராஜாவின் உடம்பின் பேரில் காயங்களையும் ரத்தத்தையும் பார்த்து ராமன் சொன்னான்:

"சுக்ரீவனே! உன் வீரத்தைப் பார்த்து வியப்பும் மகிழ்ச்சியும்அடைந்தோம்என்பது உண்மை.ஆயினும் இது சரியான காரியமல்ல. அரசனானவன் இப்படிச் சாகசம் செய்யக் கூடாது. யாருடனும் யோசிக்காமல் இப்படிப் பட்ட அபாய காரியத்தில் திடீர் என்று புகுந்து விட்டது சரியல்ல."

இவ்வாறு கண்டித்ததை சுக்ரீவன் கேட்டு, "உண்மை, உங்களைக் கேட்காமல் நான் பாய்ந்து யுத்தம் செய்தது முறை தவறே. சீதைக்கும் தங்களுக்கும் அபராதம் செய்த அந்தப் பாவியைப் பார்த்ததும் எனக்குப் பொங்கிய கோபத்தால் மெய்மறந்து போனேன். அதனால் இப்படிச் செய்தேன்!" என்றான்.

பிறகு வானர சேனை ராமன் கட்டளையிட்ட முறையில் லங்கையை நான்கு பக்கங்களிலும் சூழ்ந்து கொண்டது.

அங்கதனை அழைத்து, ராமன், "ராவணனிடம் தூது போய் அவனுக்குச் சொல்லுவாய்: 'மகா பாபியே! உன் காலம் நெருங்கி விட்டது. கோட்டை வாயிலில் ராமன் யுத்தத்துக்குக் காத்திருக்கிறான். தேவர்களிடம் பெற்ற வரத்தைக் கொண்டு கர்வங் கொண்டு துஷ்டனாகிப் போனாய். உலகத்தை ஹிம்சை செய்து வந்தாய். பெரும் பாப காரியங்களைச் செய்து வந்தாய். உலகம் க்ஷேம மடையும் காலம் இப்போது வந்தது. வெளியில் வந்து யுத்தம் செய்து கொல்லப் பட்டாயானால் பாபங்களினின்று பிராயச் சித்தம் அடைந்து வீரர்களுக்குரிய சுவர்க்கம் அடைவாய். உயிரின் மேல் ஆசை யிருந்தால் அக்கிரமமாகத் தூக்கிப் போன சீதையைத் திரும்பி ராமனிடம் சமர்ப்பித்துவிட்டு சரணம் அடைவாய். உயிருடன் பிழைத்துப் போகலாம். எவ்வாறாயினும் பாபியான நீ இனி அரசனாக இருக்கத் தகுந்தவனல்ல. லங்கா ராஜ்யம் இனி விபீஷணனுடையதாகும். அரசனாக இருப்பதற்கும் ஜனங்களை ரக்ஷிப்பதற்கும் அவன் தகுதி பெற்றவன். சரணமடைந்து உயிர் தப்பும் எண்ணமில்லாவிட்டால், உடனே உத்தரகிரியைகளை முன்னதாகச் செய்வித்துக் கொண்டு உன் அருமைச் சொத்தாயிருந்த லங்கையைக் கடைசித் தடவையாக நன்றாகப் பார்த்து விட்டு விடைபெற்றுக் கொண்டு மரணத்துக்குத் தயாராக வெளியே வந்து ராமனோடு யுத்தம் செய்வாயாக!' இவ்வாறு அரக்கனுக்குச் சொல்வாய் அங்கதனே!" என்றான்.

உடனே அங்கதன், "அப்படியே!" என்று குதித்துக் கிளம்பி மந்திரி

அட்டைப் படம்

ரங்கதுரையையே எண்ணி எண்ணிக் கனவு காண்கிறாள் நடிக நட்சத்திரம் இந்துமதி. அவள் கனவு நனவாகியதும் அவளுக்கு ஏற்பட்ட உள்ளத் தவிப்பை இந்த இதழ் மூவர்ண அட்டைச் சித்திரமாக வழங்கி யிருக்கிறார் ஓவியர் மணியம்.

களால் சூழப்பட்டு உட்கார்ந்திருந்த ராவணன் முன்னிலையில் இறங்கினான்.

* * *

ராமன் சொன்ன வண்ணம் கம்பீரமாக, "வாலி யார் என்பது உமக்குத் தெரிந்திருக்கலாம். நான் வாலியின் புத்திரன், ராமனுடைய தூதனாக வந்திருக்கிறேன். உம்முடைய பாபங்களுக்கு விமோசன காலம் நெருங்கி விட்டது. யுத்தம் செய்து வீர சுவர்க்கம் அடைவீர். ராமனும் வானர சேனையும் கோட்டை வாயிலில் காத்திருக்கிறார்கள். செய்த பாபங்களையெல்லாம் தீர்த்துக் கழுவிக் கொள்ளலாம். அப்படி யில்லை, உயிரின்மேல் ஆசை யிருந்தால் ராமனிடம் சரணாகதி யடைவீர். இல்லையேல் யுத்தத்துக்கு எழுந்து செல்வீர். யமனிடம் போய்ச் சேரத் தயாராகப் புறப்படுவீர். பந்துக்களிடம் விடைபெற்று உத்தரகிரியைகளையும் முடித்துக் கொள்வீராக. குலத்தோடு அழிந்து போகும் காலம் நெருங்கி விட்டது. லங்கையைக் கடைசியாகக் கண்ணால் பார்த்து அனுபவித்துத் திருப்தி யடைவீர்!" என்றான்.

ராவணனுக்கு நெருப்பைப்போல் பொங்கியது கோபம். "பிடி! கொல், துஷ்டனை!" என்றான்.

உடனே இரண்டு ராக்ஷசர்கள் அங்கதனை இரு பக்கத்திலும் பிடித்துக் கொண்டார்கள். அவன் அந்த இரண்டு பெரும் பூதாகாரமான அரக்கர்களுடன் உயரக் கிளம்பி இருவரையும் உதறித் தள்ளி, அதற்கும் மேலே கிளம்பி மாளிகையின் விமானத்தை ஒரு உதை உதைத்து உடைத்து விட்டு ராமன் இருந்த இடத்தை ஒரே தாவாகத் தாவி வந்தடைந்தான்.

அங்கதனுடைய காரியத்தைக் கண்டு ராக்ஷசக் கூட்டத்துக்குப் பெருந் திகில் உண்டாயிற்று. ஆனால் தங்களுடைய பயத்தை மறைத்துக் கொண்டார்கள். விமானம் உடைந்ததைக் கண்டு ராவணன் பெருமூச்சு விட்டான். அதை ஒரு துர்நிமித்தமாகக் கண்டான்.

அங்கதன் திரும்பி வந்ததும் ராமசந்திரன் சேனைக்கு உத்தரவு கொடுத்து விட்டான். யுத்தம் ஆரம்பித்தது.

## டி.கே.சி.யின் கடிதங்கள்

திருக்குற்றாலம்
8—10—45

உன்னுடைய அழகான கடிதம் கிடைத்தது. இரவில் படுக்கையில் படுத்திருக்கும் போதுதான் வாசித்தேன். ஒரே சிரிப்பாய்ப் போய் விட்டது. 'ஸ்பிரிங்' கட்டிலாய் இருந்திருந்தால் கீழே தூக்கிப் போட்டிருக்கும். ஓசையைத் தொலைப்பதற்கு உபாயம் கண்டு பிடித்து விட்டார் பத்திரிகாசிரியர்!

சமீபத்தில் ஒரு சாக்ஷாத் "கவிஞரே" இங்கு வந்து விட்டார். மூன்று நாள் தங்கினார். போதும் போதும், என்று ஆய் விட்டது. பாடாய்ப் படுத்தி விட்டார். அவர் பாடிய பாடல்களைக் கொட்டிக் கொண்டே இருந்தார். தூங்கவே விடமாட்டார். கேமத்தான் பட்டியிலிருந்தும் நண்பர்கள் வந்திருக்கிறார்கள். அவர்கள் பாடும் பெரும்பாடாகத்தான் போய் விட்டது. என்னையும் வேண்டிய மட்டும் விளாசினார். தெரியாத்தனமாக 'தேசிக விநாயகம் பிள்ளை! தேசிகவிநாயகம் பிள்ளை!!' என்று சொல்லிக் கொண்டிருக்கும் நிர்அக்ஷரகுக்ஷி நான் என்பது அவருடைய ஆய்ந்து தெளிந்த அபிப்பிராயம். அதனால் அவருக்குக் கோபம்: கோபத்தைவிட இகழ்ச்சி. எல்லாவற்றையும் சரளமாய் என்னிடமே காட்டி விடுவார்.

நாலைந்து வருஷத்துக்கு முன் "வித்வான்" ஆனவர். வித்வான் ஆன உடனே தமிழ்ப் பண்டிதராக இரண்டு வருஷம் இருந்தாராம். பள்ளிக்கூடமும் மாணவர்களும் செய்த பூர்வ புண்ணியத்தால் ஆசிரியர் வேலையைத் துறந்து வியாபாரத் துறையில் இறங்கி இருக்கிறார்.

'ஆயிரம் வருஷத்துக்கொரு தடவை கவிஞன் பிறக்கிறான்' என்று அடிக்கடி நான் சொல்லுவேன் அல்லவா. அப்படிப் பிறந்தவர்தான், தான் என்று எண்ணிக் கொண்டிருக்கிறார். அவர் இப்போது வியாபாரம் செய்து வருகிறார். என்ன வியாபாரம் செய்கிறாரோ தெரியாது. சொல்லவும் இல்லை. லக்ஷ்மி கடாக்ஷம் கிடைக்க வேண்டும். சரஸ்வதி தப்பட்டுமே!

இங்ஙனம்
டி. கே. சிதம்பரநாதன்




# சங்கீத விழா

★★★

சென்னை நகரத்தில் உள்ள சங்கீத சபையின் திருவிழாக்கள் பொதுவாக டிஸம்பர் மாதக் கடைசியில் நடக்கும். ரசிகர்கள் எந்த விழாவுக்குப் போவது என்று தெரியாமல் திணறுவார்கள்.

அப்படித் திணறித் திண்டாடுவதற்கு இடம் இல்லாமல் திருவட்டீச்வரர் சபையார் தங்கள் ஆண்டு விழாவை இந்த மாதத்திலேயே கொண்டாடினார்கள். ஆகஸ்டு மாதம் 12-ந் தேதி முதல் 16-ந் தேதி வரை திருவல்லிக்கேணி அறுபீனியம் தொழிற்சாலை மைதானத்தில் விசேஷ அலங்காரங்களுடன் அமைக்கப் பட்டிருந்த சிங்காரப் பந்தலில் சிறப்பாக நடைபெற்றது.

விழா நடந்த ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பிரமுகர் தலைமை தாங்கிச் சிறப்பித்தார். மந்திரிமார்களும், நீதிபதிகளும், பத்திரிகாசிரியர்களுமாகத் தலைமை தாங்கிச் சொற்பொழி வாற்றும்படி செய்து திருவட்டீச்வரர் சபை நிர்வாகிகள் இவ் விழாவைக் கோலாகலமாகக் கொண்டாடினார்கள்.

இன்னிசை விருந்தும், பரதநாட்டியக் கச்சேரியும், சரித்திர நாடகமும், சமூக நாடகமுமாகப் பிரமாதமாக நடத்தி ரசிகர்களின் நல் ஆதரவைப் பெற்று விட்டார்கள்.

இந்த சங்கீத விழாவின் காட்சிகள் சிலவற்றை இந்தப் பக்கத்தில் உள்ள படங்களில் காணலாம்.

1. விழாவுக்குத் தலைமை வகித்துத் தொடக்க உரை நிகழ்த்துகிறார் நீதிபதி ஸ்ரீ ஏ.எஸ்.பி. ஐயர். அவருக்கு அருகில் அமர்ந்திருப்பவர் திருவட்டீச்வரர் சபைத் தலைவர் திரு பி. எம். தெளலத்ராம்.

2. ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலட்சுமி அவர்களின் இன்னிசை விருந்துக்குத் தலைமை வகித்துக் கௌரவப்படுத்திய ஹைகோர்ட் நீதிபதி ஸ்ரீ டி. எல். வெங்கட்ராமய்யர் அவர்கள் ஸ்ரீமதி எம். எஸ். அவர்களின் சங்கீதத்தைப் பரவசத்தோடு பாராட்டிப் பேசுகிறார்.

3. ஸ்ரீமதி எம். எஸ். அவர்களின் கச்சேரியின் போது சபையில் கூடியிருந்த ரசிக மகாசபையின் ஒரு தோற்றம்.

4. ஸ்ரீ தேவனின் 'துப்பறியும் சாம்பு' நாடகத்துக்குப் பிறகு சபைக் காரியதரிசி ஸ்ரீ நாகசுப்ரமணியம் கைகூப்பி வணங்கி நன்றி தெரிவித்துக் கொள்கிறார்.

5. தமிழ் நாட்டின் பொற்காலத்தை மகோன்னதமாகச் சித்திரிக்கும் ஸ்ரீ டி. கே. எஸ். சகோதரர்களின் 'ராஜ ராஜ சோழன்' என்னும் சரித்திர நாடகத்தில் ஒரு ரஸமான காட்சி.


Remy
SNOW
MADE IN INDIA
Remy
BORATED
TALCUM POWDER

# வட இந்திய யாத்திரை 6



# கங்கையைக்

நீல முடிதரித்த பலமலைசேர்நாடு!
நீரமுதமெனப் பாய்ந்து நிரம்புநாடு! —பாரதியார்

சூரியன் வானத்தின் மேலெழுந்து, குது குதுப்பான தன் பொன் கிரணங்களை அள்ளிச் சொரிந்து கொண்டிருந்தான். சூரிய வெளிச்சம் எல்லாவற்றையும் பரிசுத்தம் ஆக்குவது போல் இருந்தது. எங்கும் எல்லாப் பொருள்களும் இன்பகரமாகத் தோன்றின. கங்கைக் கால்வாய்க் கரையோரமாக அமைந்துள்ள அதிசயமான சாலையில் எங்கள் பஸ் ஹரித்வாரத்தை நோக்கி ஓடிக் கொண்டிருந்தது. பஸ்ஸில் இருந்தபடி அந்தப் பிராந்தியத்தைப் பார்த்தேன். ஆகா! அந்தப் பசுமையைத்தான் என்னவென்று சொல்வது! பார்த்த இடமெல்லாம் ஒரே பசுமைதான்! பெரும்பாலும் வயல் வெளிகள், வயல் வெளிகள் இல்லாத இடத்தில் தோப்புகள். இன்னும் சில இடங்களில் கரும்புத் தோட்டம், சோளக் கொல்லை. இடையிடையே இமய மலையின் கம்பீரமான தோற்றங்கள். இதைத் தவிர வேறு காட்சியே கிடையாது.

இந்தப் பசுமைக் காட்சிகளைப் பார்த்துக் கொண்டே ஹரித்வாரத்துக்கு வந்தோம். நாங்கள் தங்குவதற்கு ஏற்பாடு செய்திருந்த மாயாபூர் ரெஸ்ட் ஹவுஸிலிருந்து ஹரித்வாரம் ஒன்றரை மைல் தூரம் இருக்கும். அங்கிருந்து ஹரித்வாரத்துக்குப் போவதற்குள்ளாகவே ஒருவாறு ஹரித்வாரத்தைப் பற்றித் தெரிந்து கொள்வது சாத்யமாயிருந்தது. ஹரித்வாரம் சென்னையைப் போல் பெரிய நகரமில்லை. ஆனால் சென்னையைவிட முக்கியத்துவம் வாய்ந்தது. கங்கைக் கரையில் அமைந்திருப்பதால் எங்கே பார்த்தாலும் லக்ஷ்மி விலாசம் நிறைந்திருக்கிறது. ஏதாவது ஒரு ஊரைப் பற்றிச் சொன்னால் "அந்த ஊரில் அந்தப் பொருள் கிடைக்கும், இந்தப் பொருள் மலிவாகக் கிடைக்கும்" என்று கூறுவது வழக்கம். ஹரித்வாரத்தில் அப்படி விசேஷமாகக் கிடைக்கும் பொருள் எல்லாருக்கும் தெரிந்த பொருள்தான். இந்துக்களுக்கு மிக நன்றாகத் தெரியும். இந்துக்களுக்கு விசேஷ புண்ணிய ஸ்தலம். ராமேஸ்வரமும், காசியும் எப்படியோ அப்படியேதான் ஹரித்வாரத்தைப் பற்றியும் சொல்ல வேண்டும். பாபம் தொலைந்து புண்ணியம் கிடைக்கும் புனித ஸ்தலம் ஹரித்வாரம்.

இவ்வளவு பெருமையும் அதற்கு வந்தது எதனால் என்று கேட்டால், ஏன்! கங்கை அங்கு வந்துதான் சமவெளியில் ஓட ஆரம்பிக்கிறாள். கங்கை நதியின் வலது கரையிலே ஹரித்வாரம் நகரம் அமைந்திருக்கிறது. சமுத்திர மட்டத்துக்கு ஆயிரம் அடி உயரத்தில் இருக்கும் ஹரித்வாரத்தை கங்காத்வாரம் என்றும் சொல்கிறார்கள்.

கங்கையில் ஸ்நானம் செய்வதற்காக எத்தனை பேர்கள் எத்தனை ஆயிரம் மைல்களைக் கடந்து அங்கு வருகிறார்கள் என்பதைக் கவனிக்க வேண்டும். கங்கை ஜலத்தைச் சிறு சிறு செம்பிலிருந்து பெரிய பெரிய குடம் வரையில் எத்



தனையோ ஆயிரம் பேர்கள் தங்கள் கையுடன் எடுத்துக் கொண்டு போகிறார்கள். ஒருமுறை ஹரித்வாரம் வந்து கங்கையில் ஸ்நானம் செய்தது போதாது என்று மீண்டும் மீண்டும் வந்து ஸ்நானம் செய்து விட்டுப் போகிறவர்கள் எத்தனையோ பேர். எத்தனையோ வருஷங்களாக நடந்து வரும் இந்தப் புனித யாத்திரை ஸ்தலத்துக்குப் போனதும் என்னுடைய நீண்ட நெடுங்காலத்து மனோரதம் நிறைவேறி விட்டதுபோல் திருப்தி ஏற்பட்டது. புனிதமான கங்கையைப் பற்றியும், அதன் தண்ணீரின் அதிசயத்தைப் பற்றியும், அதனால் பயன் பெறும் லட்சக்கணக்கான உழவர்களைப் பற்றியும், ஆயிரக்கணக்கான தொழிலாளர்களைப் பற்றியும் அங்குள்ளவர்கள் சொல்லக் கேட்டேன். இதனாலெல்லாம் என் மனத்தில் பொங்கிப் பெருகிக் கொண்டிருந்த விருப்பம் நிறைவேறியதை நினைத்து மகிழ்ந்தேன்.

இத்தகைய புனிதமான கங்கை நதி இமய மலையிலிருந்து இறங்கி ஓடி வரும் ஹரித்வா-



# கண்டோம்!

ரத்தில் உள்ள ஒரு இடத்தில் சிவபாதம் இருக்கிறது. சித்தர்கள் நைவேத்தியங்களுடன் பூஜை செய்து கொண்டிருக்கிறார்கள். மனித உலகில் பிறந்த எவனும் பக்தியுடன் யாத்திரை செய்து அப் பாதத்தைத் தரிசித்து விட்டால் அவன் கைலாச பதவியை அடைந்து விடுவான். அப் புனித பாதத்தை வணங்கி வலம் வருவது போல கங்கை நதி அங்கு வருகிறாள். அவள் வணங்கி வலம் வரும் இடத்துக்குத்தான் சிவபாதம் பிரம்மகுண்டம் என்று பெயர் என்பதாக ஸ்தல புராண ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.

ஹரித்வாரத்தில் உள்ள சிவபாதம் பிரம்ம குண்டத்தில் கங்கா ஸ்நானம் செய்வதற்காகப் பதினாயிரக்கணக்கான யாத்ரீகர்கள் அங்கு வந்து கொண்டிருக்கின்றனர். கங்கா ஸ்நானத்துடன் ஹரித்வாரத்தில் கோயில் கொண்டிருக்கும் கங்காதரனை வணங்குவதற்கும், ஸிவாலிக் மலையில் எழுந்தருளியிருக்கும் மானஸ தேவியைத் தரிசிப்பதற்கும் கோடை காலத்தில் வரும் யாத்ரீகர்களின் கூட்டம் சொல்லி முடியாது. ஹரித்வாரம் நகர சபையின் வருமானத்தில் பெரும் பகுதியே யாத்ரீகர்களிடம் வசூலிக்கும் வரிதான் என்றால் எவ்வளவு யாத்ரீகர்கள் வருகிறார்கள் என்பதைக் கற்பனை செய்துகொள்ளுங்கள். அஸ்தமித்ததும் கங்கைக் கரையில் உள்ள அம்மனுக்கு விசேஷ அலங்காரம் செய்து தீபாராதனை செய்கிறார்கள். அப்பொழுது கோயிலில் இருந்து தெரியும் தீப ஒளி ''வாருங்கள்! வாருங்கள்!'' என்று நம்மைக் கண் காட்டி அழைக்கின்றது. அந்தத் தீபாராதனை அந்தக் கோவிலுக்கே தனியாக உரியது. அதில் விசேஷமான காம்பீர்யமே இருக்கிறது. இப்பொழுது அங்குள்ள பண்டாக்கள் என்னும் குருக்கள்மார்கள் பழைய ஸநாதன வைதிக மதத்தின் உண்மைத் தத்துவத்தை நன்கு போற்றாமல் வெறும் சம்பிரதாயங்களுக்கும், சடங்குகளுக்கும் அதிக முக்கியத்துவம் கொடுத்து வெறும் வயிற்றுப் பிழைப்பாகக் கொண்டிருக்கிறார்கள் என்று சிலர் குறை கூறினார்கள்.

அது எப்படியோ இருந்து விட்டுப் போகட்டும். வாருங்கள் நாம் புனித கங்கை நதியில் ஸ்நானம் செய்து வருவோம்.

கங்கை நதியின் கரையிலே வந்து நின்றவுடன் மனக்கண் முன்னே கங்கை நதி பிறந்து வளர்ந்த கதை காட்சிப் படம் போலச் சுருள் சுருளாக விரிய ஆரம்பித்து விட்டது.

## கங்கை பிறந்த கதை

அயோத்தியை ஆண்ட சகர மன்னரின் குமாரர்கள் கபில முனிவரின் சாபத்தால் சாம்பலானார்கள். சகர மன்னருக்குப் பின்னால் அவன் குலத்தில் வந்த பகீரதன் அயோத்தியை ஆண்டான். அவன் தன் மூதாதையர்களைச் சுவர்க்கத்துக்கு அழைத்துப் போவதற்காகக் கடுந் தவம் செய்தான். அவன் தவத்தின் பயனாய் கங்கை வானுலகத்தில் இருந்து பூவுலகுக்கு வந்தாள். வரும்போது பூவுலகையே அழித்து விடவேண்டும் என்ற கர்வத்துடன் வந்தாள். அவளுடைய கர்வத்தை அடக்க வேண்டி பூவுலகத்துக்கு வந்த கங்கையைத் தன் சடையிலேயே தாங்கிக் கொண்டார் சிவபெருமான். மீண்டும் பகீரதன் சிவபெருமானைக் குறித்துத் தவம் செய்தான். சிவபெருமான் தன்







பகீரதன்

சடையிலிருந்து கங்கையைப் பூமியில் விட்டார். அக் கங்கையை ஜன்னுமகரிஷி பருகி விட்டார். பகீரதனின் பிரார்த்தனையால் கங்கை மீண்டும் ஜன்னுவின் மகளாகப் புனர் ஜன்மம் எடுத்தாள். பகீரதனின் தளராத முயற்சியால் வானுலகில் இருந்து பூமிக்கு வந்த புண்ணிய நதியான கங்கைக்குப் பாகீரதி என்றும் பெயர் உண்டு. இவ்வாறு கங்கை பிறந்து வளர்ந்த கதையை நமது புராண இதிகாசங்கள் கூறுகின்றன.

சிவபெருமான் திருமுடியிலிருந்து வந்ததனால் தானோ என்னவோ கங்கை நதியைப் பார்க்கும் போதெல்லாம் மனத்திலே எல்லை காணாத ஒரு ஆனந்தம் ஏற்படுகிறது. அடடா! கங்கையைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம். பார்க்கப் பார்க்க ஒவ்வொரு விநாடியும் ஒரு புது உருவத்தில் கங்கை நதி துள்ளிக் குதித்துப் பொங்கிப் பெருகி வரும் அழகைக் காணலாம். அது என்ன விந்தையோ!

உலகிலேயே மிகப் பெரிய மலையான இமய மலையிலிருந்து கங்கை உற்பத்தியாகிறது. 13,800 அடி உயரத்தில் உள்ள கங்கோத்ரி என்னும் இடத்தில் கங்கை நதி பிறக்கிறது. இமயமலைப் பிரதேசத்திலேயே சுமார் நூற்று அறுபது மைல்கள் மலைப் பாறைகளிலும் காடுகளிலுமாக கங்கை ஓடி வருகிறாள். உத்தரப் பிரதேசத்தில் உள்ள பிரசித்தி பெற்ற சகரான்பூர் ஜில்லாவில் ஹிமாலயத்தின் தெற்குப் பகுதியான ஷிவாலிக் மலைகளுக்கு இடையில் புகுந்து வந்து சமவெளிப் பிரதேசத்தில் கம்பீரமாகப் பரவிப் பாய்ந்து வருகிறாள் கங்கை.

அதன் கரையிலே முதலில் அமைந்திருக்கும் பெருமை ஹரித்வாரம் நகரத்துக்குக் கிடைத்திருக்கிறது. ஹரித்வாரத்தைச் சுற்றிலும் புகழ் பெற்ற ஆச்ரமங்கள் பல இருக்கின்றன. அங்கிருந்து சுமார் பதினேழு மைல் தூரத்தில் ரிஷிகேசம் இருக்கிறது. சுமார் இருநூறு மைல் தூரத்தில் பிரசித்தமான பத்ரி ஆஸ்ரமம் அமைந்திருக்கிறது. இன்னும் சின்னச் சின்ன ஆச்ரமங்கள் சில அங்கு இருக்கின்றன. ஹரித்வாரத்துக்குச் சற்றுத் தூரத்துக்கு அப்பால் சுவாமி சிரத்தானந்தர் ஸ்தாபித்த "குருகுல காங்கிரி விச்வ வித்யாலயம்" இருக்கிறது. கங்கைக் கால்வாய்க் கரையில் செக்கச் செவேல் என்று அமைந்துள்ள அதன் உயரமான கட்டடங்கள் உள்ளத்தைக் கவரும் முறையில் காட்சி தருகின்றன. அமைதியான சூழ்நிலையில் பிள்ளைகள் ஓய்வின்றி ஓடி விளையாடும் காட்சி ஏதோ கனவு உலகம் போல் தோன்றி மகிழ்விக்கிறது.

ஹரித்வாரம் கங்கைக் கரையில் உள்ள கட்டடங்களைப் பார்த்தால் ஹரித்வாரம் மிகப் பெரிய நகரம் என்று நினைக்கத் தோன்றும். ஜனத் தொகை என்னமோ 25,000 தான். கங்கைக் கரையில் வானளாவத் தோன்றும் நாலு மாடி, ஐந்து மாடி உள்ள கட்டடங்கள் எல்லாம் தர்மசத்திரங்கள். அந்தச் சத்திரத்துக்குள்ளே கங்கை புகுந்து போகிறாள். கங்கை நதி ஹரித்வாரத்தைக் காதலோடு தழுவிக் கொண்டு போவது போல இருக்கிறது.

அப்படி கங்கை காதலோடு ஓடும் இடங்களில் எல்லாம் கங்கைக் கரையில் கருங்கல்லினால் அழகான படித்துறைகள் அமைத்திருக்கிறார்கள். அந்தச் சத்திரத்துக்கு எதிர்க் கரையில் இருந்து ஹரித்வாரத்தைப் பார்த்தால் கங்கை நதியிலிருந்து முளைத்தெழுந்த விசித்திரக் கட்டடங்களோ என்று வியக்கத் தோன்றும். கங்கைத் தண்ணீருக்கு அடியில் கம்பீரமான அந்தக் கட்டடத்தின் நிழல்கள், ஆடி அசைந்து தோன்றும் காட்சி நம்மைத் திகைக்கச் செய்து விடும். கங்கை நதிக்கு உள்ளேயும் இன்னொரு பெரிய நகரம் அமைந்திருப்பது போல் அதிசயமாக விளங்கும். பார்க்க வேண்டிய அழகான காட்சி!

## பிரம்ம குண்ட தீர்த்தம்

ஜூன் பத்தொன்பதாந் தேதி நாங்கள் ஹரித்வாரம் நகருக்குச் சென்றிருந்தோம். அன்றைய தினம் விசேஷமான தினம். அதற்கு மறுநாள் சூரியகிரகணம். ஹரித்வாரத்தில் ஏராளமான யாத்ரீகர்கள் இந்தியாவின் பல பாகங்களில் இருந்தும் வந்திருந்தனர். பகல் பன்னிரண்டு மணிக்கு கங்கா ஸ்நானம் செய்ய பிரம்ம குண்டத்துக்குச் சென்றோம்.

கங்கையின் பிரம்ம குண்டம் என்ற புண்ணிய ஸ்தலத்தில் நதிக்கு மத்தியில் சிமின்டினால் பெரிய மேடை கட்டியிருக்கிறார்கள். மேடையின் மத்தியிலே மணிக் கூண்டு ஒன்று கம்பீரமாக வானோங்கி நிற்கிறது. மணிக் கூண்டுக்கு இரண்டு பக்கங்களிலும் வரிசை வரிசையாகத் துணிக் குடைகள் இருக்கின்றன. ஒவ்வொரு துணிக் குடைக்கும் அடியில் பண்டாக்கள் என்ற குருக்கள்மார்கள் ஒய்யாரமாக உட்கார்ந்திருக்கின்றனர். நெற்றியில் சந்தனமும் குங்குமம் அணிந்து கொண்டு கங்கை நதியையும் அதில் ஸ்நானம் செய்ய வரும் யாத்ரீகர்களையும் கூர்ந்து பார்த்த வண்ணம் அமர்ந்திருக்கின்றனர். அவர்கள் யாத்ரீகர்களிடம் ரூபாய் வாங்கிக் கொண்டு பிரசாதம் வழங்குகிறார்கள். நெற்றியில் சந்தனம் பூசிக் குங்குமத் திலகம் இட்டு ஆசீர்வதிக்கிறார்கள்.

சிமின்ட் மேடையின் ஓரத்தில்–கங்கைக்கரையோரமாக – அழகான படித்துறைகள் கட்டியிருக்கின்றனர். அந்தத் துறைகளில் இரண்டடிக்கு ஒரு சங்கிலி வீதம் பொருத்தியிருக்கிறார்கள். அதன் முனையில் கையை விட்டுப் பிடித்துக் கொள்ளுவதற்கு வசதியாக வளையங்கள் இருக்கின்றன. அந்த வளையத்தில் கையைக் கோத்துக் கொண்டுதான் கங்கையில் ஸ்நானம் செய்ய வேணும். ஏன் தெரியுமா! கங்கையின் நீர் அவ்வளவு வேகமுடையது. கால் தரையிலேயே பாவவொட்டாமல் தண்ணீர் அசுர வேகத்துடன் போகிறது!

நல்ல வெயில் வேளையில்தான் கங்கையில் இறங்கிக் குளித்தோம். குளித்த உடனேயே நாங்கள் செய்த பாவம் தொலைந்து போன உணர்ச்சியை அடைந்தோம். அரை மணி நேரம் வரையில் யாருக்குமே உணர்ச்சியில்லை. மெய்ம் மறந்து போனோம். காரணம் வேறு ஒன்றும் இல்லை. தண்ணீர் 'ஐஸ்'ஸை விட அதிகக் குளிர்ச்சியாக இருக்கிறது. கங்கை நீரில் கால் வைத்ததுதான் தாமதம், 'ஜில்'லென்று குளிர் காலில் இருந்து விறு விறு என்று ஏறி உடலில் ஒரு புது உணர்ச்சி, இது வரையில் அனுபவித்து அறிய முடியாத ஒரு உணர்ச்சியை உண்டாக்குகிறது. அடுத்த கணம் என்ன நேர்ந்தது என்ற உணர்வே



# வெண்ணெய் நெய்

வாங்கச் சிறந்த இடம்

## திரௌபதி ஸ்டோர்ஸ்

105, ராயப்பேட்டை
ஹைரோடு
மைலாப்பூர், மதராஸ்.
போன் : 85264
பிராஞ்சுகள் :
121, பெரிய தெரு,
திருவல்லிக்கேணி
7/23, பாண்டி பஜார்,
தி. நகர்.

கடை விலைக்கே வீட்டில்
கொண்டுவந்து சப்ளை செய்யலாம்.

EP




# ஆனந்தாஸ் காப்பி

பச்சையாக, வறுத்ததாக, தூளாக கிடைக்கும்.

**ஆனந்தா மானுபாக்சரிங் கம்பெனி**

ஸ்தாபிதம் : 1940

தலைமை ஆபீஸ் : காரைக்குடி.
போன் : 60



பிராஞ்சுகள் :
105 ராயப்பேட்டை ஹைரோடு
மைலாப்பூர், மதராஸ்-4. போன் : 85264
51, மேலக் கோபுர வீதி
141, கீழ மாசி வீதி } மதுரை. போன் : 460
189, மெயின் ரோடு, திண்டுக்கல்.
2/24, S. N. ஹைரோடு, திருநெல்வேலி ஜங்ஷன்.
435, காந்தி ரோடு, சிவகங்கை.

பெரும்பாலான ஹோட்டல்கள், சிற்றுண்டிச்
சாலைகளுக்கு காப்பி & டீ சப்ளை செய்பவர்கள்.

EP

# இந்தியன் பாங்க், லிமிடெட்

(ஸ்தாபிதம் : 1907)



தலைமை ஆபீஸ் : "இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்", வடக்கு பீச் ரோடு, மதராஸ்-1

தென் இந்தியாவில் எல்லா முக்கிய இடங்களிலும், பம்பாய், கல்கத்தா, புது டில்லி முதலிய இடங்களிலும் சப் ஆபீஸ்கள், கிளைகள் இருக்கின்றன.

### மூலதனம்

| | | | |
|---|---|---|---|
| அங்கீகரிக்கப்பட்டது | ... | ரூ. | 1,00,00,000 |
| வழங்கப்பட்டது | ... | ரூ. | 72,00,000 |
| செலுத்தப்பட்டது | ... | ரூ. | 57,80,000 |
| ரிசர்வ் & இதர நிதிகள் | ... | ரூ. | 76,50,000 |
| டெபாஸிட்டுகள் (31-12-54-ல்) | ... | ரூ. | 24·85 கோடிகள் |

எல்லாவிதமான பாங்கிங் அலுவல்களும் செய்யப்படும்

என். கோபால அய்யர், செக்ரடரி

JB. 974

# தூங்கும் சமயம் வருகையில்




இன்றும் சில விநாடிகளில் குழந்தை அயர்ந்து தூங்குவான். அவனுடைய சின்னஞ்சிறு கைகள் கெட்டியாக மூடிக் கொள்ளும். அவனுடைய அழகிய சிறு முகத்தில் புன்முறுவல் பொலியும்.

குழந்தை எவ்வளவு சிறிதாயும் ஆதாரமற்றும் காணப்படுகிறது. அவனுடைய சருமம் மிகவும் மென்மையாயுள்ளது. ஆனால் ஜான்ஸன்ஸ் பேபி பௌடர், கெடுதலான அரிப்பை தவிர்த்து சருமத்தை மெத்தெனவும் மிருதுவாயும் வைக்கும்.

ஜான்ஸன்ஸ் பேபி பௌடரை டாக்டர்கள் 70 ஆண்டுகளுக்கும் மேலாக சிபார்சு செய்து வருகிறார்கள். இன்றே ஒரு டின் வாங்குங்கள்!

## Johnson's BABY POWDER

## ஜான்ஸன்ஸ் பேபி பௌடர்

**சருமத்திற்கு ஹிதமளிப்பதில் உலகிலேயே நிகரற்ற பௌடர்**

# இலவசம்

குழந்தை பராமரிப்பு புத்தகத்தின் இலவச பிரதிக்கு எழுதுங்கள்—குழந்தையை சரியான முறையில் எப்படி பேணி வளர்ப்பது, பல் முளைக்கும்போது என்ன செய்ய வேண்டும், அவனை குளிப்பாட்டும் முறை, எப்படி நல்ல பழக்க வழக்கங்கள் கற்றுக்கொடுப்பது முதலிய, பெற்றோருக்கு இன்றியமையாத அநேக விஷயங்கள் இதில் அடங்கியிருக்கிறது. இவ்விலாசத்திற்கு எழுதவும்:

**ஜான்ஸன் & ஜான்ஸன் (கிரேட் பிரிட்டன்) லிட்.**

டிபார்ட்மெண்டு (21 எப்), த. பெ. 1976, பம்பாய்.

இல்லாமல் தண்ணீரில் மிதக்க வேண்டியதாகி விட்டது. நல்ல வேளையாக நாங்கள் கூட்டமாகச் சென்றதால் ஒருவருக்கு ஒருவர் உதவியாக இருந்துகொள்ள முடிந்தது. இரும்புச் சங்கிலியில் கையைக் கோத்துக் கொண்டிருந்ததால் கங்கையோடு போகாமல் தப்பினோம். அந்த இரும்புச் சங்கிலிகள் செய்த உதவியை மறக்க முடியாது. படித்துறையில் இரும்புச் சங்கிலியைக் கட்டி வைத்த புண்ணியவானை மனதார வாழ்த்தி வணங்கினோம்.

கங்கை நதியில் ஓடிவரும் தண்ணீரின் தாங்க முடியாத குளிரில் 'பாவம்' பறந்தோடிப் போகாமல் வேறு என்ன செய்யும்! படபட



ஹரித்வாரம் பிரம்மகுண்ட தீர்த்தக் கரை. இந்த இடத்தின் உட்புறத்திலேதான் புகைப் படம் எடுக்கக்கூடாது.

வென்று உடலை ஒரு நடுக்கு நடுக்கி விட்டு பாவம் ஆற்றோடு ஓடித் தொலைய வேண்டியது தான்! கங்கைத் தண்ணீரின் ஆச்சரியமான வேகத்தில் அது நம்மைப் பிடித்துக் கொண்டு நிற்கவே முடியாது. நாம்தான் சங்கிலியைப் பிடித்துக் கொண்டு நிற்கிறோம். பாவத்துக்கு யார் சங்கிலி கட்டி வைத்திருக்கிறார்கள்!

அந்தப் பிரம்ம குண்டத் தீர்த்தக் கரையை யாரும் புகைப்படம் எடுக்கக்கூடாது என்று ஹரித்வாரம் நகர சபையார் தடை விதித்திருக்கிறார்கள். அந்தத் தடையை மீறிய எத்தனையோ காமிராக்கள் கங்காஸ்நானம் செய்து மோட்ச வீடு அடைந்திருக்கிறதாம். அப்படிப் புகைப்படம் எடுக்கக் கூடாது என்று ஏன் தடை விதித்திருக்கிறார்கள்!

ஆண்களைப் போலவே ஏராளமான பெண்மணிகளும் பிரம்ம குண்டத்தில் ஸ்நானம் செய்கிறார்கள். ஆனால் அவர்கள் நீராடும் முறை அபூர்வமானது. மதுராபுரியில் கண்ணன் வளர்ந்த காலத்தில் கோபியர்கள் ஸ்நானம் செய்த பழைய முறையை அனுஷ்டிக்கிறார்கள். அதனால்தான் புகைப் படம் எடுப்பதைத் தடை செய்திருக்கிறார்கள் போலும்!

கங்காஸ்நானம் செய்து விட்டுக் கரையேறிய போது உண்மையிலேயே உடம்பில் ஒரு புது உத்ஸாகமும், மனத்தில் இதுவரையில் இல்லாத தெளிவும் இருக்கத்தான் செய்தது. ஆனால் நாங்கள் ஹரித்வாரம் சென்று புனித கங்கையில் ஸ்நானம் செய்து விசேஷ புண்ணியம் பெறுவதற்காகச் செல்லவில்லை. பின் எதற்காகச் சென்றோம்!

மேற்கு உத்தரப் பிரதேசத்தில் ஒன்பது ஜில்லாக்களைப் பொன் கொழிக்கும் பூமியாகச் செய்து வருகிறது புதிய கங்கைக் கால்வாய். அது உலகத்தில் உள்ள மிகப் பெரிய கால்வாய்களில் முக்கியமானது. அந்தக் கால்வாயில் இப்பொழுது ஏராளமான அருவி மின்சார நிலையங்கள் அமைத்திருக்கிறார்கள். அதன் மூலம் உண்டாகும் மின்சாரங்கள் எத்தனையோ அரிய காரியங்களுக்கு உபயோக மாகின்றன. உலகில் உள்ள மிகப் பெரிய அதிசயமான கால்வாய்களில், மனிதன் தன் முயற்சியால் உண்டாக்கிய வியக்கத்தக்க கால்வாய்களில் ஒன்றான அந்தக் கங்கைக் கால்வாயைப் பார்க்கத்தான் சென்றோம்.

ஹரித்வாரத்தைப் போலவே கங்கைக் கால்வாயும் முக்கியமாகப் பார்க்க வேண்டிய புண்ணிய நதி. ஆனால் அதை நாம் பார்க்கா விட்டாலும் அது நம் கண்ணில் படாமல் இருக்காது. அப்படி ஒன்றும் ஒளித்து வைக்கக் கூடிய சின்னப் பொருள் அல்ல அது. ஆகா! அந்தக் கால்வாயின் அழகே அழகு! இயற்கை தான் தெய்வம், அழகுதான் கடவுள் என்று கவிஞர்களும், கலைவாணர்களும் சொல்லக் கேட்டிருக்கலாம். அப்படிப்பட்டவர்கள் இந்தக் கங்கைக் கால்வாயை ஒருதரம் பார்த்து விட்டால் அவர்கள் அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்ள வேண்டியதுதான். கங்கைக் கால்வாய் கவிஞர்களையும் கலைவாணர்களையும் தலையைக் 'கிர்' என்று சுற்றித் திணற அடித்து விட்டுத் தான் மறு வேலை பார்க்கும்.

அந்தக் கால்வாய் நூறு வருஷங்களுக்கு முன் வெட்டிய செயற்கைக் கால்வாய். செயற்கைக் கால்வாயானாலும் இயற்கையான கங்கையின் காம்பீர்யத்துக்குச் சற்றும் குறைவில்லை.

## கங்கைக் கால்வாய்

கங்கை நதி காலப் போக்கில் ஹரித்வாரத்தை விட்டுத் தள்ளி இடது பக்கமாகப் போகத் தொடங்கியது. ஹரித்வாரத்தை யொட்டியுள்ள கங்கையில் தண்ணீர் வருவது நின்று போய்விட்டது. வருஷம் முந்நூற்று அறுபத்தைந்து நாட்களும் கங்காஜலம் ஓடிய ஹரித்வாரத்தில் மணல்தான் ஓடியது. தர்ம சாலையின் படித்துறைகள் வெறும் மணலில் கட்டிய படித் துறைகளாகக் காட்சியளிக்க ஆரம்பித்தன. கங்கை நீர் மோதி விளையாடிய படித்துறைகள் வெறிச்சோடி விட்டன. இக் காட்சியைக் காணச் சகியாத பண்டாக்கள் கங்கை நீரை முன்போலவே ஹரித்வாரத்தை யொட்டி ஓடுவதற்கு என்ன செய்வது என்று

யோசித்தார்கள். பல நாள் தீவிரமாக யோசித்து ஒரு நல்ல முடிவு கண்டார்கள்.

ஹரித்வாரத்துக்கு வடக்கே சுமார் இரண்டரை மைல் தூரத்தில் இருக்கும் சப்த தாரை என்னும் இடத்தில் கங்கையில் சிறிய அணை கட்டி அங்கிருந்து கால்வாய் வெட்டி அதன் மூலம் தண்ணீரை ஹரித்வாரத்துக்குக் கொண்டுவர ஏற்பாடுசெய்து, வெற்றியும் பெற்றார்கள். அந்தக் காலத்திலேயே நூறு வருஷங்களுக்கு முன்பாகவே பண்டாக்கள் கங்கைக் கால்வாய் வெட்டி அதன் மூலம் தண்ணீரை ஹரித்வாரக் கரையோரம் கொண்டு வந்து மீண்டும் அந்தக் கால்வாயை கங்கையில் சேர்த்து விட்டிருந்தார்கள்.

அந்தக் கால்வாயும் நாளடைவில் மேடுற்று வந்தது. கங்கையில் தண்ணீர் குறையும் காலத்தில் கால்வாயில் தண்ணீர் ஏறி வருவதில்லை. அதனால் மீண்டும் ஹரித்வாரத்தில் சில மாதங்கள் தண்ணீர் வருவது தடைப்பட்டு வந்தது. அப்படி இல்லாமல் வருஷம் முழுவதும் ஹரித்வாரத்துக் கரையில் தண்ணீர் வரும்படி பண்டாக்கள் வெட்டிய கால்வாயை மேலும் பலமுள்ள கால்வாயாக மாற்றி அந்தக் கால்வாயை ஹரித்வாரத்துக்குத் தெற்கே மூன்று மைல்களுக்கு அப்பால் உள்ள கனகலம் என்ற இடத்தில் மீண்டும் கங்கையில் சேர்த்து விடும்படியாக அமைக்கத் திட்டமிட்டார்கள். இதுதான் கங்கைக் கால்வாய் வெட்டுவதற்காகப் போட்ட முதல் திட்டம்.

இந்தத் திட்டத்தை பண்டாக்கள் எதிர்த்தனர். கங்கையை அடைத்து அதன் மூலம் வரும் தண்ணீரினால் கங்கையின் புனிதம் கெட்டு விடும் என்று வாதித்தனர். அந்தக் கால்வாய் வெட்டுவதற்கு எவ்வளவு தூரம் தடங்கல் செய்யலாமோ அவ்வளவும் செய்தனர். இரவில் சென்று கங்கையில் கட்டிய அணையை உடைத்து விட்டுக்கூட வந்தார்கள். இப்படியாகப் பல தடங்கல்களைத் தாண்டி கங்கையில் அணை கட்டி கங்கைக் கால்வாயை வெட்டுவதற்கு முயற்சித்தனர்.

பண்டாக்களைத் திருப்திப் படுத்துவதற்காக கங்கையை முழுதும் அடைக்காமல் பாதி தூரம் மட்டும் அடைத்து கங்கையை நேரே செல்வதற்கு விட்டனர். அதேபோல கங்கைக் கால்வாய் முகத்துவாரத்தில் எந்தவிதமான தடுப்பும் செய்யாமல் கங்கை நீர் இயற்கையாகவே ஓடி வரும்படி செய்திருக்கின்றனர்.

கங்கைக்கும் யமுனைக்கும் இடையில் உள்ள பிரதேசங்கள் விவசாயத்துக்குத் தண்ணீர் இல்லாமல் வெறும் நிலமாகக் கிடந்தன. காய்ந்த கட்டாந் தரையாகக் கிடந்தன. அந்த இடங்களை விவசாயத்துக்கு ஏற்ற நிலமாக மாற்றுவதற்காகத்தான் 1836-ம் ஆண்டு கங்கையிலிருந்து ஒரு கால்வாய் வெட்டத்திட்டம் இட்டனர். கால்வாய் வெட்ட ஆரம்பித்த காலத்தில் ஹரித்வாரம் பண்டாக்களின் பலத்த எதிர்ப்பும், அதற்கு ஏற்றாற் போல் அந்தப் பக்கத்தில் கொடிய பஞ்சமும் ஏற்பட்டு விட்டது. கங்கையில் கால்வாய் வெட்ட ஆரம்பித்த முயற்சியினால்தான் இவ்வாறு பஞ்சம் ஏற்பட்டு விட்டதாகப் பிரசாரம் செய்ய ஆரம்பித்து விட்டனர். இது காரணமாக இரண்டு ஆண்டுகள் 1838ம் ஆண்டு வரை கங்கைக் கால்வாய் வெட்டும் வேலை நிறுத்தி வைக்கப்பட்டது. பஞ்சம் எல்லாம் சமாளிக்கப்பட்ட பின் 1839ம் வருஷத்திலிருந்து கங்கைக் கால்வாயை மீண்டும் வெட்டத் தொடங்கினர்.

வானுலகத்திலிருந்து வந்ததும் கங்கை இறைவனிடத்தில் முறையிட்டுக் கொண்டாள். "எத்தனையோ மக்களை நான் புனிதப்படுத்தி மோட்சத்துக்கு அனுப்பி வைக்கிறேனே! எனக்கு மட்டும் மோட்சமே கிடையாதா! சொர்க்கத்துக்கு வராமல் இந்தப் பூமியிலேயே இருக்க வேண்டியதுதானா!" என்றாள்.

அதற்கு இறைவன் திருவாய் மலர்ந்தருளியதாவது :—"கங்கைநதியே! பாகீரதியே! உன் புண்ணியத்துக் கெல்லாம் ஈடாகக் கூடிய சொர்க்க இன்பத்துக்கும் மேலான ஆனந்தத்தை உனக்கு அளிக்கிறேன். உன் கரையிலிருந்து பெரிய பெரிய கால்வாய்கள் வெட்டப் போகிறார்கள். அதில் நீ புகுந்து சென்று விளையாடப் போகிறாய். அதனால் லட்சோப லட்ச மக்கள் பலன் அடைவார்கள். வேண்டிய அளவு உணவு தான்யம் பெறுவார்கள். வயிறாரச் சாப்பிட்ட மக்கள் இணையற்ற நாதம் ததும்பும் பக்திமயமான பாடல்களைப் பாடிக் கொண்டு உன் மடியிலே நீராடுவார்கள். உன்னுடைய இரு கரையும் ததும்பும்படியாக மக்களின் மகிழ்ச்சிப் பிரவாகம் பெருக்கெடுத்து அலை மோதிக் கொண்டு ஓடும். இதைக் காட்டிலும் வேறு என்ன இன்பத்தைச் சொர்க்க லோகத்துக்கு வந்து நீ அடையப் போகிறாய். பூலோகத்திலேயே இருந்து புண்ணியம் செய்து கொண்டு அதன் பலனை அடைந்து ஆனந்தமாக வாழ்வாய்! உன்னிடமிருந்து பிரிந்து சென்ற உன் சேய் நதிகளின் புகழைக் கேட்டுச் சந்தோஷப் படுவாயாக!"

இறைவன் அளித்த இந்தப் பதில் கங்கைக்குப் பூரண திருப்தி அளித்தது! இன்றைக்குத் தேவர்கள் எல்லாம் சேர்ந்து வந்து கங்கையைப் பார்த்து "சொர்க்கத்துக்கு வர வேண்டும்" என்று வருந்தி அழைத்தாலும் "வேண்டாம்! நான் இங்கேயே இருக்கிறேன். இன்னும் பாரத நாடு பூராவும் நான் பரவித் தழைத்துத் தொண்டு செய்யப் போகிறேன். வேண்டுமானால் நீங்களும் பாரத நாட்டுக்கே வந்து விடுங்கள்" என்று கங்காதேவி பதில் சொல்லுவாள் என்பதில் ஐயமில்லை.

** ** **

இந்திய நாடு எவ்வளவோ வளமுள்ள நாடாக மாறுவதற்கு கங்கை இன்னும் எத்தனை எத்தனையோ வகைகளில் உதவி செய்யத்தான் போகிறாள். கங்கைக் கால்வாய் மூலம் அவள் செய்து வரும் உதவி மிக அதிசயமானது. அந்தக் கால்வாயை வெட்டுவதற்குப் பட்ட கஷ்டங்களை நினைத்துப் பார்க்கவே முடியவில்லை. கங்கைக் கால்வாயில் முதல் இருபது மைல் தூரம் வரையில், அதாவது ரூர்க்கி வரையில் எத்தனையோ சொல்ல முடியாத கஷ்டங்களை எல்லாம் தாண்ட வேண்டியிருந்தது. இயற்கையின் கற்பனைக் கெட்டாத திருவிளையாடலுடன் இன்ஜினீயர்கள் போராட வேண்டியிருந்தது. அந்த அபூர்வமான இன்ஜினீயரிங் விந்தைகளை எல்லாம் நேரில் போய்ப் பார்க்கலாம், வாருங்கள். (தொடரும்)




இயற்கை யன்னை தன்னகத்தே எத்தனையோ அதிசயங்களையும் அற்புதங்களையும் மறைத்து வைத்துக் கொண்டிருக்கிறாள். அதைக் கொஞ்சம் கொஞ்சமாகத்தான் காட்டுவது என்று வைத்துக் கொண்டிருக்கிறாள்.

சில நூற்றாண்டுகளுக்கு முன் இந்தியாவின் புகழையும் செல்வத்தையும் கேள்விப்பட்டிருந்த கொலம்பஸ் இந்தியாவைக் கண்டு பிடித்து விடுவது என்று புறப்பட்டார்.

ஆனால் இயற்கை அன்னை அவருடன் கண்ணுமூச்சி விளையாடினாள். அவரை எங்கோ கொண்டுபோய் விட்டாள். அவர் தாம் போய்ச் சேர்ந்த இடமே இந்தியா என்று நினைத்தார். அது இந்தியா அல்ல—அமெரிக்கா! ஒரு புதிய கண்டத்தையே அவருக்கு அன்னை காண்பித்துக் கொடுத்தாள் அன்று!

ஏறத்தாழ இதேமாதிரியானதோர் அதிசயம் சமீபத்தில் திருநெல்வேலி ஜில்லாவில் நடந்துள்ளது என்று கூறினால் நேயர்களுக்கு அளவு கடந்த குதூகலம் ஏற்படும்.

திருநெல்வேலியில் மணிமுத்தாறு அணைகட்டி நீர் தேக்கி, பாசனத்துக்கு வசதி செய்யத் திட்டம் வகுத்துச் சென்னை சர்க்கார் வேலை செய்து வருவது நேயர்கள் அறிவார்கள்.

இந்த மணிமுத்தாறு சிங்கம்பட்டியைச் சேர்ந்த மலைப் பிரதேசத்தில் ஓடி வருகிறது. இந்த மணி முத்தாறு அணை கட்டப்படும் இடத்திலிருந்து மேலே மலையில் நான்கு மைல் போக வேண்டும். அங்கே காடும் மலையும் அடர்த்தியாக உள்ள இடத்திலே ஒரு ஆறு திண்ணென அருவியாகக் குதித்துப் பாய்ந்து ஓடுகிறது! இந்த அழகான சின்னஞ்சிறு அருவியை இயற்கை அன்னை ரகசியமாக வைத்துக் கொண்டிருந்தாள்.



இதைக் கண்டு பிடித்தவர்கள் மணிமுத்தாறு நீர்த்தேக்கத்துக்கு ஸிமெண்ட் சப்ளை புரியும் பணியை மேற்கொண்டிருந்த இந்தியா ஸிமெண்ட்ஸ் கம்பெனியார்தான்.

மனித சஞ்சாரமற்ற அந்த அழகிய வனப் பிரதேசத்தில் அருவி இரண்டு கிளைகளாகப் பிரிந்து விழும் அற்புதக் காட்சியை நாள் எல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாம். அதுவும் அந்த அருவிகள் பன்னிரண்டு அல்லது பதினைந்து அடி உயரத்திலிருந்து விழுவதால், மக்கள் மிகச் சௌகரியமாகத் தலையை நீட்டிக் குளித்து ஆனந்தப்படலாம்.

பொது மக்கள் இந்த இயற்கை வனப்பு மிக்க அருவியைப் பலவிதத்திலும் அனுபவிக்க இந்தியா ஸிமெண்ட் கம்பெனியார் எல்லா வசதிகளும் செய்து கொடுத்திருக்கிறார்கள்.

முதலில் அருவிக் கரைவரை போகக்கூடிய வசதியான பாதை போட்டுக் கொடுத்திருக்கிறார்கள். அருவியில் நின்று நிதானமாக மனத்தில் பயமின்றிக் குளிக்க அருவி விழும் இடத்தில் ஸிமெண்டு தளம், இரும்புக் கம்பிகள், சங்கிலிகள் எல்லாம் அமைத்திருக்கிறார்கள். குளித்த பிற்பாடு உடைகளை மாற்றிக் கொள்ள இரண்டு தனித்தனி அறைகள் வேறு கட்டிவிட்டிருக்கிறார்கள். இந்த அருவி விழும் இடத்தில் ஒரு அருமையான தடாகம் இயற்கையாகவே அமைந்திருக்கிறது. தடாகத்தில் குதித்து, நீந்திக் குளிக்க ஆர்வம் உள்ளவர்களுக்கும் எல்லா வசதிகளும் செய்திருக்கிறார்கள்.

இப்படிப்பட்ட இயற்கை வனப்பு மிக்க பிரதேசங்களில் மேனாட்டினர் எப்படியெல்லாம் விடுமுறை நாட்களில் உல்லாசமாகப் பொழுதைப் போக்குவார்களோ, அப்படியெல்லாம் நம்மவர்களும் இந்த இயற்கையன்னையின் பொக்கிஷத்தை அனுபவிக்கச் சகல நவீன வசதிகளும் செய்திருக்கிறார்கள். இந்தக் கீழ மணிமுத்தாறு அருவியில் செய்துள்ள வசதிகளைச் சென்னை கவர்னர் ஸ்ரீ ஸ்ரீபிரகாசா பொது ஜன உபயோகத்துக்குச் சமீபத்தில் திறந்து வைத்தார்.

வியாபார நோக்கம் மட்டுமின்றி இத்தகைய பொது மக்களின் சௌகரியத்துக் குரிய பணியிலும் ஈடுபட்டு அருந்தொண்டு புரியும் "இந்தியா ஸிமெண்ட்ஸ் கம்பெனி"யார் நமது பாராட்டுக் குரியவர்களாவார்கள்! அவர்கள் பணி நாள்தோறும் சிறந்து ஓங்குக!

# பழைய காதல்

தபால்காரன் கொண்டு வந்து கொடுத்த கடிதத்தை ஆவலுடன் பிரித்துப் பார்த்தேன். பசுபதி எழுதியிருந்தான். அவன் என் பள்ளித் தோழன். இளம் வயதில் ஏற்பட்ட அந்தத் தோழமை, தோன்றிய சில வருஷங்களிலேயே நசித்து விட்டது. அப்புறம் நான் ஊரிலேயே இல்லை. அவனுக்கு நான் இழைத்த பெரும் அநீதி காரணமாக எங்களுக்குள் கடிதப் போக்குவரத்து வைத்துக் கொள்ள இடந் தரவில்லை. அவன் கையெழுத்தைப் பார்த்ததும் இளம் பிராயத்தில் நடந்தது அனைத்தும் என் நினைவுக்கு வந்தது. தன் கல்யாணத்துக்குக் கட்டாயம் வரவேண்டும் என்று ரொம்பவும் அன்போடு எழுதியிருந்தான்.

பத்து வருடங்களுக்கு முன்தான் நானும் பசுபதியும் உற்ற நண்பர்களாய் இணை பிரியாமல் இருந்து வந்தோம்.

பசுபதி அழகாக இருப்பான். சுருட்டை சுருட்டையாக, கருத்த, அவன் தலைமயிர் மோதிர வளையமிட்டு அவன் அழகின் சிகரமாக விளங்கியது. நிறம் நல்ல சிவப்பு. கூரிய மூக்கு, விசாலமான கண்கள்.

அப்பொழுது நானும் பசுபதியும் ஆறும் படிவத்தில் படித்துக் கொண்டிருந்தோம். அந்தச் சமயம் கோடி வீட்டு நீலாவின் குளிர்ந்த பார்வை அவன்மீது விழுந்தது. உடனே நீலாவைச் சுற்றியே அவன் பார்வையும் எண்ணமும் அலைய ஆரம்பித்தன. ஆனால் அவன் மிகவும் சிரமப்பட்டுத் தன் காதலை எனக்குத் தெரியாமல் மறைத்து வைக்க முயன்றான். என்னுடன் பேசுவதை முதலில் நிறுத்தினான்; பிறகு என்னோடு சேர்ந்து பள்ளிக்கூடம் வருவதை நிறுத்தினான். வரவர என்னைக் கண்டாலே பார்க்காதவன்போல் இருக்க முற்பட்டான். நானாக வலியப் போய் அவனுடன் பேசி, அவனது திடீர் மாறுதலுக்குக் காரணம் கேட்க முயன்றும் பலனில்லை. என் மனம் மட்டும் நிம்மதி பெறவில்லை. அருமையாய்ப் பழகிய அந்நண்பனின் அலாதிப் போக்கு என்னுடைய மனத்தைக் குத்தி, கோபத்தையும், பொறாமையையும் ஒருங்கே கிளப்பியது. அவனை மேலும் ஒன்றும் கேட்கவுமில்லை.

இப்படியாக அவனிடம் பதினைந்து நாட்களுக்குள் மிகுந்த மாறுதல்களைக் கண்டேன். காதல் தீயினால் அவன் உள்ளம் வெதும்பியது போலும்! ஆனால் அதுதான் விஷயம் என்பது மட்டும் எனக்கு அப்போது தெரியாது. ஆனால் சந்தேகம் உண்டாகி அதிகரித்தது. துப்பறிய முயன்றேன். பல தடவைகள் அவனறியாமல் அவனைப் பின்தொடர்ந்து கவனித்ததில் வெற்றியும் பெற்றேன்! அடுத்த நிமிடம் ஆத்திரமும், பொறாமையும் என்னைப் புகலடைந்தன. விதி,—இல்லை—ஏதோ ஒரு கெட்ட சக்தி என்னை அன்றையத் தினத்திலிருந்து பசுபதிக்கு விரோதியாக்கியது. எனக்கும் அப்போது பசுபதி போல் பருவ வயதுதானே!

அன்று முதல், என்னையும், பசுபதியையும் அதுவரை ஒருங்கே பிணைத்திருந்த நட்பெனும் கயிறு ஒவ்வொரு பிரியாய்த் தளர்ந்து அறுபட்டது. நான் அவனுடன், அறவே பேசுவதை நிறுத்தி விட்டேன். அவனுக்கு அது மிகவும் அனுகூலமாய் இருந்ததாக அவன் பழக்க வழக்கங்களிலிருந்து நான் கண்டுகொண்டேன். அதனால் இன்னும் அதிகரித்தது என் பொறாமை!

ஒருநாள் நான் பள்ளி முடிந்து சிறிது நேரம் கழித்து வீடு வந்து கொண்டிருந்தேன். அத்தெருவின் மூலையில் வரும்போது, பசுபதி, வேகமாக நீலாவின் வீட்டிலிருந்து வெளிச் செல்வதைக் கண்டேன். என் நெஞ்சம் அளவு கடந்து பதறியதற்குக் காரணம் எனக்கே விளங்கவில்லை. ''நம்முடன் எப்படிப் பழகி வந்த அவன், அப்போது இப்படி மாறி விட்டானே, ஏன்!—அவளுடன் நட்பு, இல்லை-காதல் கொண்டுள்ளதை என்னிடம் கூறினால் என்ன தவறு!'' என்றெல்லாம் நடந்துகொண்டே சிந்தித்தேன். அவ்வளவுதான்! கோபத்தின் சிகரத்தில் நின்று என் மனம் 'விட்டேனா பார்!' என்று கோஷமிட்டது.

நேராக வீடு வந்தேன். கை கால்கள் கழுவிக் காப்பி சாப்பிட்டுவிட்டுச் சிறிது நேரம் அங்குமிங்கும் யோசித்தவாறே நடந்தேன். சட்டென்று அடுத்த வீடு நோக்கி விரைந்து, உள் நுழைந்தேன்—பசுபதி வீட்டுக்குத்தான்.

''வா......,அப்பா...ரங்கநாத்'' என்று பசுபதியின் தகப்பனார் சாய்வு நாற்காலியில் சாய்ந்திருந்தபடியே என்னை வரவேற்றார். அவரும், பசுபதியும்தான் அவ் வீட்டிலிருப்பவர்கள். ஆனால் இப்போது பசுபதி எங்கோ வெளியே சென்றிருந்தான். நானும் அங்கிருந்த நாற்காலியில் உட்கார்ந்தேன்.

''என்ன...சேதி...!'' என்று கேட்டார் மீண்டும்.

''ஒரு விசேஷம்......மாமா!''

...என் குரல் கரகரத்தது. அவர் கோபக்காரர் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். அதுவும் பசுபதி ஒரு சிறு தவறு செய்து விட்டா





ஆகஸ்ட் பதினைந்தாம் தேதி பூந்தமல்லியை அடுத்துள்ள நாசரத் பேட்டையில் முத்தாரங்கம் வாலிபர் கழகத்தார் வெகு சிறப்பாகச் சுதந்திர தின விழா கொண்டாடினார்கள். காந்தி மகான் திரு உருவப் படத்தை அலங்கரித்த புஷ்ப விமானத்தில் வைத்து ஊர்வலம் விட்டார்கள். மேற்படி விழாவுக்குத் திரு பரதன் தலைமை வகித்தார். மந்திரி கனம் பக்தவத்சலம் தேசியக் கொடியை ஏற்றினார். இந்த விழாவில் வீதிவலம் வந்த காந்தி மகான் திருவுருவப் படத்தையும், முத்தாரங்கம் வாலிபர் கழகத்தைச் சேர்ந்தவர்களையும், அவர்களுக்கு உதவி வளித்த நாசரத்பேட்டை திரு நா. சி. வரதப்பன் அவர்களையும் மேலே படத்தில் காணலாம்.

லும் அவர் கோபம் எல்லையைக் கடந்து விடும். அதுபோன்ற அவர் குணம் எனக்கு —என் நோக்கத்துக்கு நல்ல வாய்ப்பு என்று எண்ணமிட்டேன். அதற்குத் தகுந்த அஸ்திர மாகவும் அவரைக் கருதினேன்.

"என்னப்பா...!" என்று சாவதானமாகக் கேட்டார் அவர்.

"நான் சொல்றேன்னு நினைக்காதேங்கோ ...பசுபதியின் நிலைமை ரொம்ப மோசமாகி விட்டது" என்றேன். என் அங்கங்கள் ஆத்தி ரத்தால் நடுங்கின.

"என்னடா சொல்றே! புரியும்படியாகச் சொல்லேன்" என்றார் சற்று நிமிர்ந்து. அவர் குரலில் சிறிதளவு கோபமும் கலந்திருந்தது கண்டு உற்சாகம் கொண்டேன்.

"கோடி வீட்டில் நீலா என்ற பெண் இருக்கிறாளல்லவா! அவளிடம் அவன்......" என்று இழுத்தேன். அவர் பதறி எழுந்தார். குதித்தார். அது எனக்கு மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கியது.

"என்ன! காதல் நாடகமா! ஹும்! இருக்கட்டும், இன்று வரட்டும் அந்தப் பயல்" என்று நான் விஷயம் கூறுவதற்கு முன்பே, அவர் புரிந்துகொண்டு கத்தினார். ஆத்திரத்தில் கண்கள் சிவந்தன. எனக்கு என்னைப் பற்றின ஞாபகம் வரவே, "மாமா, நான் சொன்னதாகச் சொல்லாதேங்கோ. அவனிடம் உள்ள அன்பினால் இதை உங்களிடம் சொல்ல நேர்ந்தது" என்று பூசி மழுப்பினேன்.

"உம். இருக்கட்டும். அதெல்லாம் எனக்குத் தெரியும். நீ போ" என்று கோபமிகுதியால் அவர் கொக்கரித்தார்.

அன்று இரவு மணி ஒன்பது இருக்கும். என் அறையில் புத்தகம் ஒன்றை வைத்துப் படித்துக் கொண்டிருந்தேன். 'இனிமேல் அப்படிப் போவாயா! இனி செய்வாயா!' என்ற பல்லவியையும் பாடிக்கொண்டு, பசுபதியை வெளுத்துக் கட்டி விட்டார் அவன் தகப்பனார்!

நெடுநாள் கட்டினால் சிறிது என் மனம் சஞ்சல மடைந்தாலும், மறு கணமே வெறுப் புற்றது. மறு தினத்திலிருந்து, அவனுக்கும், எனக்கும், 'சிறிது கட்புண்டு' என்று கூறும் படியான அதுவும் அறவே அவிந்தது. பிறகும் அவனுக்கு நீலாவின் தொடர்பு உண்டா என்ற சந்தேகம் எனக்கு. ஆனால் நானறிந்த வரையில் இல்லை. அவ்வருஷப் படிப்பு முடிந்தது. பரீட்சை எழுதி முடித்த பசுபதியை அவன் தகப்பனார் அன்றிரவே எங்கோ வெளியூர் அழைத்துச் சென்று விட்டார்!

சிந்தனைக்கு முற்றுப் புள்ளி! கடிதம் கை நழுவிக் கீழே வீழ்ந்தது. ஊஞ்சலின் சங்கிலியைப் பிடித்து எழுந்து உட்கார்ந்தேன்.

*　　　*　　　*

மறுநாள் பத்திரிகையும் வந்தது. அவசரமாகப் பிரித்தேன். என்ன ஆச்சரியம்! பெண்ணின் பெயர் நீலா! ஆனால் அதே நீலாவா என்ற சந்தேகம்! முற்றும் அறிய எண்ணிக் கல்யாணத்துக்குப் போவதாக முடிவு செய்தேன்.

கல்யாணத்தன்று காலை திருச்சி சேர வேண்டிய ரயில் எனக்குத் தவறி விட்டது. அடுத்த ரயிலில்தான் செல்ல வேண்டியதாயிற்று. அது மறுநாள் மணி பதினொன்றுக்குத் திருச்சி அடைந்தது. டாக்ஸி அமர்த்திக் கொண்டு கல்யாண வீட்டுக்குச் சென்றேன். வாசற்படியில் நின்று தலையை நீட்டிப் பார்த்தேன். என்ன வேடிக்கை! பசுபதி, ஏழு வருடங்களுக்கு முன் நான் அறிந்திருந்த அதே கோடி வீட்டு நீலாவுக்குத் 'தாலி' கட்டிக் கொண்டிருந்தான். என் உடல் சிலிர்த்தது. நான் அன்று செய்த தவறு என்னை அப்போது ஏளனம் செய்வது போலிருந்தது. பசுபதியைக் காணவே மனம் கூசியது. ஒரு பெருமூச்சுடன்

அப்படியே கூட்டத்தில் எல்லோருடன் நானும் ஒருவனாக உட்கார்ந்து விட்டேன்.

முகூர்த்த காரியங்கள் எல்லாம் முடிவுற்றன. பெரியவர்களிடம் ஆசீர்வாதம் பெறுவதற்குத் தட்டில் 'அக்ஷதை'யுடன் வந்தான் பசுபதி. என்னிடமும் வந்து தட்டை நீட்டினான். அது வரை குனிந்திருந்த நான், நிமிர்ந்து, கையில் அக்ஷதையை எடுத்துக்கொண்டே, "அப்பா, பசுபதி! இளமையின் அறியாமையால் உனக்கு இடையூறு செய்த என்னை மன்னித்து விடு..." என்றேன் தளர்ந்த குரலில்.

அவன் என்னைக் கூர்ந்து கவனித்தான். அறிந்து கொண்டான். "ரங்கநாத்" என்று அன்பு பொங்கிய குரலில் கூவி அழைத்து, தட்டைக் கீழே வைத்துவிட்டு என்னைத் தழுவிக் கொண்டான். அவன் கண்கள் ஆனந்தக் கண்ணீரை வடித்தன. 'அவனுக்கு இருக்கும் அவ்வுணர்ச்சியில் எனக்குச் சிறிதும் இல்லையே' என்று எண்ணி வியந்தேன். என்னை அவனுடன் இறுகப் பிணைத்துக்கொண்டான். அவனுடைய அந்தகைய செய்கையினால், நான் இளமையில் அவனுக்குச் செய்த இன்னல்களுக்காக என்னைச் சரியானபடி அவன் பழி வாங்குவதாகவே நான் கருதினேன்!

பசுபதி எல்லோருக்கும் என்னை அறிமுகப் படுத்தினான். நீலாவுக்கு என்னைப் பற்றி அறிய அதிக நேரமாகவில்லை!

* * *

சாப்பாடு முடிந்தது. தனியறையில் பசுபதியுடன் நான் பேசிக் கொண்டிருந்தேன். என்னைப் பற்றி ஒன்று விடாது அவனோடு கேட்டு அறிந்து கொண்டான் பசுபதி. பிறகு இருவரும் தோட்டத்துப் பக்கம் போனோம். அங்கே வந்த நீலாவைச் சுட்டிக் காட்டி, பசுபதி, 'பழைய நீலாவா இவள், என்று நீயே பாரேன்' என்றான். நீலா நாணமுற்று உள்ளே ஓடினாள்.

"பசுபதி, உன் அன்பு என்னை – என்னுடைய நன்றி கெட்ட செயலை,—பழி தீர்த்து விட்டது. நீ மறுபடியும் நீலாவை எப்படி அடைய நேரிட்டது?" என்றேன்.

"ரங்கநாத், அது விதியின் செயல்தான் என்று கூறுவதைத் தவிர வேறு ஒன்றும் சொல்லக் கூடாது. என்னை மதுரையிலிருந்து ஆறும் படிவம் தேர்வு முடிந்ததும் எனது தகப்பனார் அழைத்து வந்துவிட்டாரல்லவா! என்னைக் கோவைக்கு அழைத்துச் சென்றார். இருவரும் அத்தையின் வீட்டிலேயே தங்கினோம். அங்குதான் நான் மேற்கொண்டு கல்லூரிப் படிப்பைத் தொடர்ந்தேன். அது முடிந்ததும் டாக்டர் படிப்புக்காகச் சேர்ந்தேன். அதுவும் முடிவு பெற்று நல்லமுறையில் பாஸ் செய்தேன். எனக்கு முதலில் மதுரையில்தான் சர்க்கார் ஆஸ்பத்திரியில் வேலை கிடைத்தது. மதுரை என்றதும் எனக்குப் பழைய ஞாபகங்கள் வந்தன. உள்ளத்தில் ஓங்கி நின்றது பழைய காதல்! அங்கு சென்றதும் உன்னைப் பற்றியும் விசாரித்தேன். அப்போதுதான் உன் வீட்டில் குடியிருப்பவர்களிடமிருந்து உனது விலாசமும், நீ சென்னையில் வேலையிலிருப்பதும் அறிய முடிந்தது. நீலாவைப் பற்றியும் அறிய முற்பட்டதில், அவள் அங்கு இல்லை என்றும், அவ்வூர் விட்டுச்

சென்று நான்கு வருடங்களாகி விட்டன என்றும் தெரிய வந்தன.

ஒருநாள், ஒரு பெண், நீ விபத்தினால் பாதிக்கப் பட்டவளாய் ஆஸ்பத்திரியில் சேர்க்கப் பட்டிருந்தாள். எனக்கு அவளை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. ஒருநாள் அவளைப் பார்க்க அவளுடைய 'உறவு' என்று சொல்லிக் கொண்டு, ஒரு அம்மாள் வந்து அவளிடம் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தாள். என்னைக் கண்டதும் அந்த அம்மாள் எழுந்து நின்றாள். என்னைப் பார்த்து, 'உங்கள் பெயர் என்ன !' என்றாள்.

திடுக்கிட்டேன். நான் அப்போதுதான் அவள் முகத்தை உற்றுக் கவனித்தேன். அவள், நான் ஏழு வருடங்களுக்கு முன் அறிந்திருந்த நீலாவின் தாயார் என்பதைப் புரிந்து கொண்டேன். அந்நிலையிலேதான் நீ விபத்தினால் பாதிக்கப்பட்டிருந்த நீலாவை அடையாளம் கண்டுகொள்ள முடிந்தது.

'நீலா !...' என்று கூப்பிட்டும் விட்டேன்.

அவளும் திடுக்கிட்டு விட்டாள். அந்த மாமியும் தடுமாற்றத்துடன் 'பசுபதியாடா......!' என்று கேட்டாள்.

'ஆமாம் !' என்று பதில் கூறினேன்.

'உம்...' என்று பெருமூச்சு விட்டாள் நீலா. அப்போது அவள் முகம் தனிப் பொலிவு பெற்றது. அங்கிருந்த எங்கள் நிலையை வார்த்தைகளால் விவரிக்கவே முடியாது. பிறகு, அவர்கள் அவ்வூர் விட்டுச் சென்று பக்கத்துச் சொந்தக் கிராமத்தில் இருந்து வருவது போன்ற எல்லா க்ஷேமங்களையும் அறிந்து கொண்டேன். நீலாவுக்கு அப்போதும் விவாகம் ஆகவில்லை என்று நான் அறிய கேட்டதும் என் மனம் ஆனந்தக் கடலில் நினைத்தது.

விரைவிலேயே குண மடைந்தாள் நீலா. நான் அடிக்கடி அவளுடைய கிராமத்துக்குச் சென்று வந்து கொண்டிருந்தேன், எங்கள் இருவரின் பழைய காதல் மீண்டும் தளிர்த்தது. பழைய காதல் மலர் இன்று கல்யாணப் பந்தலில் உலகமறிய மலர்ந்தது ! நீயும் இன்று வந்ததினால் அம்மலர் மணம் பெற்றதாயிற்று !" என்று அவன் கூறி முடித்தான்.

அதுவரை இவ்வுலகத்திலின்றும் எங்கோ சஞ்சரித்துக் கொண்டிருந்த நான் அவன் தன் சுயசரிதத்தைக் கூறி முடித்து நிறுத்தியதும் உணர்ச்சி பெற்றேன். எப்போதும் போல் எனக்கு ஒரு அசட்டுக் கேள்வி உதயமாயிற்று!

"ஆமாம், பசுபதி ! இவ்வளவு சொன்னாயே! இவை யெல்லாவற்றிற்கும் உன் தகப்பனார் சம்மதமாயிருந்தார் !" என்றேன்.

"ரங்கநாத், நீ கூறுவது உண்மைதான். அவர் இறந்து இரண்டு வருடங்களாகி விட்டன. நான் எம். பி. பி. எஸ். தேறியதுமே போய் விட்டார்..." என்றான்.

"நான் அப்பொழுது உனக்கு இழைத்த பிழை மன்னிக்க முடியாத கொடிய பிழை, பசுபதி !" என்றேன் தழுதழுத்த குரலில்.

பசுபதி, "நீ அதை இன்னும் மறக்கவில்லையா ! அதெல்லாம் இப்போது என்னத்துக்குப் பேசவேண்டும்! சாப்பிட்டுவிட்டு வேறு விஷயங்களைப் பேசலாம் நிறைய !" என்றான்.

அவன் பெருந்தன்மையைக் கண்டு வியந்தபடியே சாப்பிட எழுந்தேன்.

வெள்ளித்திரை

# மங்கையர் திலகம்

ஸோமாஸ்



பஸ் மார்க்கம் அமைந்துள்ள ஊர்களுக்கு, பஸ்ஸின் வருகைக்காகத் தவங்கிடந்து எத்தனை நேரமானாலும், வேறு வழியில்லாமல் பஸ்ஸிலேயே போகிறோம்.

அதுபோல நல்ல படங்கள் வராத காரணத்தால் எல்லாப் படங்களையும் ஜனங்கள் விருப்பு வெறுப்பின்றிப் பார்க்கிறார்கள். நம் படாதிபதிகள் மனம் வைத்து நல்ல படங்களையும் எடுத்து வெளியிட முன் வந்தார்களானால், நிச்சயம் சினிமாப்பட ரசிகர்களின் ஆதரவு அவர்களுக்குக் கிடைக்காமற் போகாது.

'கல்யாணம் ஆனால்தான் பைத்தியம் தெளியும்; பைத்தியம் தெளிந்தால்தான் கல்யாணம் ஆகும்' என்பது போல், 'ரசிகர்களின் ஆதரவு இருந்தால்தான் நல்ல படம் தயாரிக்க முடியும்' என்று பழியைப் பிறர் மீது சுமத்தி, பொறுப்பைத் தட்டிக் கழிப்பதில் பயனில்லை. குறைபாடுகளுக்குப் பரிகாரம் காண்பதிலும் கொஞ்சம் சிந்தனையைச் செலுத்த வேண்டும்.

அந்த முறையில், ஸ்ரீபாத சங்கர் தயாரித்த வைத்தியா பிலிம்ஸாரின் "மங்கையர் திலகம்" என்னும் தமிழ்ப் படம் சிறந்து விளங்குகிறது. காதலில் ஆரம்பித்துக் கல்யாணத்தில், சொல்லி வைத்தாற் போல், முடியும் பல படங்களைப் பார்த்து அலுத்துப் போன ரசிகர்களுக்குப் படத்தின் புது மாதிரியான ஆரம்பம் மகிழ்ச்சியைத்தானே தரும்!

திரைப்படக் கதையைக் கவனிப்போம்:

வாலிபன் கருணாகரனும், அவன் தம்பி சின்னஞ் சிறு பாலகன் வாசுவும் தாய் தந்தையரற்ற அநாதைகளாக வாழ்ந்தனர். கருணாகரன் அன்னையும் பிதாவுமாயிருந்து தம்பி வாசுவை மிகவும் அன்போடு வளர்த்தான். வாசுவும் அண்ணனிடம் அளவு கடந்த ஆசையும் பாசமும் கொண்டிருந்தான். எனினும் அவன் மனம் தாயன்புக்கு ஏங்கித் தவித்தது; "நான் காணாத தாய்" என்று ஒரு அட்டையில் எழுதி அதைச் சுவரில் மாட்டி அன்பு செலுத்தும் அளவுக்கு அவனது அதீத அன்னையன்பு அவன் உள்ளத்தில் வேரூன்றியிருந்தது. அன்னைக்குப் பதிலாக ஒரு அண்ணியாவது வந்து தன் குறையைத் தீர்க்க வேண்டும் என்று அவன் விரும்பினான்; அண்ணன் கருணாகரனை மணம் செய்து கொள்ளச் சொல்லி வற்புறுத்தினான்; அதன் காரணமாகக் கருணாகரன் குண நலமும் எழில் நலமும் கொண்ட மங்கையர் திலகம் சுலோசனாவைக் கரம் பற்றினான். அண்ணியாக வந்த சுலோசனாவின் அருங் குணங்களும், அன்னையன்பும் வாசுவைப் பெரிதும் கவர்ந்தன.



இந்தப் படத்தின் முக்கிய பாத்திரமாக, "மங்கையர் திலக"மாக நடிக்கும் ஸ்ரீமதி பத்மினி தமிழ்ப்பட உலகில் அவருக்குப் பழக்கமான தோற்றங்களில் தோன்றவில்லை. அதாவது ஆணுடையில் வந்து டென்னிஸ் ராக்கெட்டை வீசவில்லை; கவர்ச்சி யூட்டும் 'மோஸ்தரா'ன உடையில் தோன்றி இன்ப நடனம் புரியவில்லை; கல்லூரி மாணவியின் கவினுடையில் காட்சி தரவில்லை; இந்துஸ்தானி மெட்டைப் பாடிக் கொண்டே யாரையும் காதலிக்கவில்லை. அப்படியானால் பத்மினி இந்தப் படத்தில் என்னதான் செய்கிறார் என்கிறீர்களா! ஆடம்பரமும் அலங்காரங்களும் இல்லாத அழகிய குடும்பப் பெண்ணாகத் தோன்றுகிறார் பத்மினி; பதிக்கேற்ற பத்தினியாக உணர்ச்சியோடு நடித்திருக்கிறார். புது மணப் பெண்ணாக வீட்டுக்கு வந்து குழந்தை வாசுவை அரவணைக்கும் போதும், அவனுக்கு வயது வந்ததும் மணம் முடிக்கக் கணவனைத் தூண்டிய போதும், வாசுவின் மனைவி பிரபா கடுமுகம் காட்டிக் கடிந்த போது, இன்சொல்லால் அவன் இதயத்தை இளக்க முயன்றபோதும், ஸ்ரீமதி பத்மினி நன்றாய் நடித்திருக்கிறார். குழந்தைகளைப் பெற்றுப் பெற்றுப் பறி கொடுத்த நிலையில் தாய்மைப் பேற்றை எண்ணி ஏங்குவதும் பிரபாவின் குழந்தை ரவியை எடுத்து அரவணைக்க விரும்பிய சமயத்தில் அவளது குரோதம் காரணமாகத் தடுக்கப்பட்ட போதும், ஸ்ரீமதி பத்மினியின் நடிப்பும், உணர்ச்சி மயமான

தோற்றமும் படம் பார்ப்பவர்களை மெய்சிலிர்க்கச் செய்கின்றன.



படத்தின் ஆரம்பத்திலேயே சிறுவன் வாசு தன் கவர்ச்சி நிறைந்த தோற்றத்தினாலும், குறு குறுப்பான பார்வையினாலும், தெளிவான பேச்சினாலும் எல்லோரையும் கவர்ந்து விடுகிறான். தன்னை விட்டு விட்டுத் தனியாகப் பெண் பார்க்கப் போன அண்ணன் கருணாகரனைக் கடிந்து கொண்டு தான் பெண்ணைப் பார்த்தாக வேண்டும் என்று பிடிவாதம் பிடித்து, ஜோர் நடை போட்டுக்கொண்டு சுலோசனாவைப் போய்ப் பார்த்தபோதும், பள்ளியில் பெற்ற பரிசுப் பணத்தைக்கொண்டு அண்ணிக்கு வளையல்கள் வாங்கி வந்து ஆர்வம் பொங்க அவள் கரங்களில் அடுக்கியபோதும், சின்ன வாசுவாக நடிக்கும் மாஸ்டர் பாஜி ஏககாலத்தில் பல "சபாஷ்"களை ரஸிகர்களிடமிருந்து பெற்று விடுகிறான்.

அமைதியாகச் சலனமின்றியிருந்த குளத்து நீரை ஒரு சிறு கல் விழுந்து கலக்கி விடுவது போல, வாசுவின் மனைவி பிரபாவின் வரவு குடும்பத்தின் அமைதியைக் குலைத்து விடுகிறது. அவள் ராவ்பகதூர் பொன்னம்பலத்தின் மகள். பிரபாவின் தாய் அகிலாண்டம் கணவனை அடக்கியாண்ட புண்ணியவதி. தந்தை ஒரு அப்பாவி. இந்தச் சூழ்நிலையில் வளர்ந்த பிரபாவுக்கு வாசு தன் அண்ணியிடம் கொண்டிருந்த அன்பு வெறுப்பைத் தந்தது. அந்த வெறுப்பைக் கணவனிடம் தெரிவித்த போது, வாசு அவளைப் பிறந்தகத்துக்கு அனுப்பி விடுகிறான். பிறந்தகம் சென்ற பிரபாவுக்குக் குழந்தை ரவி பிறந்தான். வாசு அண்ணியின் வற்புறுத்தல் காரணமாகப் பிரபாவையும் ரவியையும் வீட்டுக்கு அழைத்து வருகிறான்.

அசாதாரண அமைதி நிலவும் திரைப்படக் கதையில் சிரிப்பை இட்டு நிரப்ப 'ஹோல்டான்' கலாமணி மிகவும் உதவுகிறான். தங்கை பிரபாவையும் தாயையும் சீர்திருத்தும் பொருட்டு "அடங்காப் பிடாரி" என்னும் நாடகத்தை எழுதித் தன் கல்லூரித் தோழி நீலாவின் உதவியுடன் அரங்கேற்றுகிறான் கலாமணி; 'ஹோல்டான்' கலாமணியாக ஸ்ரீ கே. ஏ. தங்கவேலு தோன்றி மிகவும் நன்றாய் நடித்திருக்கிறார். ராவ்பகதூர் பொன்னம்பலமாக நடிக்கும் ஸ்ரீ கே. சாரங்கபாணி இயல்பாகவே அவருக்கு உள்ள ஹாஸ்ய நடிப்பினாலும் அவுட்டுச் சிரிப்பினாலும் படத்தில் நல்ல பெயர் சம்பாதித்துக் கொண்டு விட்டார்.

நீலாவாக நடிக்கும் ராகினியும் நன்றாய் நடித்திருக்கிறார். நடனங்கள், பின்னணிச் சங்கீதம் யாவும் கச்சிதமாக இருக்கின்றன.

சுலோசனா பிரபாவையும் ரவியையும் கண்டதும் ஆனந்த பரவசமாகிறாள். குழந்தை ரவி சுலோசனாவிடம் ஒட்டிக் கொள்கிறான். பிரபா இதை விரும்பாமல், குழந்தையை அவளிடமிருந்து பிரித்து வைக்கிறாள்.

குழந்தை ரவிக்குக் கடும் ஜுரம் கண்டு அண்ணியின் பிரார்த்தனை காரணமாகப் பிழைத்து விடுகிறான். குழந்தைக்காக இரவு பகல் பாராமல் கண் விழித்துக் கவனித்த சுலோசனா நோயுற்று இறந்து விடுகிறாள். பிரபாவின் மனம் மாறுகிறது.

குழந்தைப்பேற்றை வெறுக்கும் நவநாகரிகம் மிகுந்து வரும் இந்நாளில் தாய்மை உணர்ச்சிக்குத் தனியிடம் இப்படத்தில் தரப்பட்டிருக்கிறது; குழந்தைக்காக ஏங்கும் ஒரு தாயின் மனவேதனை நன்கு உருவாகி யிருக்கிறது. சுலோசனாவின் மறைவுடன் படத்தை முடிக்காமல், அவள் இறந்தபின், பிரபாவுக்குப் பிறந்த பெண் குழந்தை அண்ணியின் பிரதிபிம்பமாக விளங்குவது வாசுவுக்கு ஆறுதல் தருவதாக முடித்திருப்பது நமக்கும் ஆறுதலாய்த்தான் இருக்கிறது.

வசனங்கள் எதுகையும் மோனையுமாகச் சிரமப்படுத்தாமல் இயல்பாக அமைந்திருக்கின்றன. இந்தப் படத்தின் வெற்றிக்கு மிக முக்கியமான காரணம் சுவாரஸ்யமான கதைப் போக்கும் அதற்கேற்ற உணர்ச்சியுடன் கூடிய வசன அமைப்பும் என்று கூறலாம்.

வாசுவாக நடிக்கும் சிவாஜி கணேசன் உணர்ச்சியுடன் நன்றாய் நடித்திருக்கிறார்.



அண்ணியிடம் அன்னையின் பரிவைக் கண்ட சிறந்த பாத்திரமாக ஆரம்பம் முதல் கடைசி வரையில் தரம் குறையாமல் நடித்திருக்கிறார். பாராட்டுக்குரிய நடிப்பு.

ஸ்ரீ பிரசாத் டைரக்ஷனில் உருவாகி, வாஹினியில் தயாரான "மங்கையர் திலகம்" காட்சி ஜோடனைகளிலும், ஒலிப்பதிவு, ஒளிப்பதிவு, மற்றும் கலை நுணுக்க உத்திகளிலும் குறைகாண முடியாத ஒரு நல்ல படம்.

# தெம்பூட்டுகிறது, மணமூட்டுகிறது!

மலரின் பனித்துளிகள் போல புதுமையையும், ரம்மிய மணத்தையும் உங்கள் மேனியில் பெய்கிறது எக்லா டால்க். குளித்தபின், உடையணியுமுன் உடம்பில் எக்லா டால்கம் பவுடரைப் பூசுங்கள்.



வெப்ப நாளிலும் குளுமை, இதம் அளிப்பது எக்லா. அது வியர்வையை உறிஞ்சும். மெல்லிய எக்லா ஒரு லட்சிய முகப்பவுடரும் கூட.

கால்கேட்

**எக்லா**

**டால்க்பவுடர்**




**இந்தியா விரும்பும் நறுமண டால்க்**

EC/G/1



# உங்கள் பற்களுக்கு இந்த சிறப்பு மிகுந்த பராமரிப்பு அவசியம்!

**ஆக்டிவ் க்ளோரோபில் மற்றும் 'கோலினாஸ்' நுரை — இவ்விரண்டும் பற்களின் ஆரோக்கியத்திற்கு சிறந்த மார்க்கம்!**

ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த பச்சை 'கோலினாஸ்' உங்கள் பற்களை வெண்மையாக்குவதுமட்டுமின்றி, பல்சிதைவிற்குக் காரணமான கிருமிகளை ஒழித்து, ஈறுகளுக்கு ஆரோக்கியமூட்டுகிறது. உங்கள் வாய் மணிக்கணக்கில் புதுமணங்கமழ விளங்குகிறது!

அற்புதமான 'கோலினாஸ்' நுரையில்தான் இதன் ரகசியம் அடங்கியுள்ளது. அது ஆக்டிவ் க்ளோரோபிலை வாயில் பிரஷ் நுழைய முடியாத ஒவ்வொரு மூலை முடுக்கிற்கும் எடுத்துச் செல்கிறது.

**உங்கள் பணத்திற்கு மிகுந்த பயன் தருவது**

'கோலினாஸ்' நுரையினும் அதிசயிக்கத் தகுந்த சிக்கனமும் கிடைக்கிறது. ஈரமில்லாத பிரஷில் அரையங்குல அளவே போதுமானது. ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த 'கோலினாஸ்' பச்சை டூத் பேஸ்டை வாங்கத் தவறாதீர்கள்!

'கோலினாஸ்' புன்னகையில் ஆரோக்கியம் ததும்புகிறது




OK. 1171(A)



# ஆற்றங்கரையினிலே

பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை

## 34. காஞ்சிமா நகரம் (தொடர்ச்சி)

காஞ்சியம்பதியில் போர் முரசம் அதிர்ந்தது. படைவீரர் பல்லாயிரவர் திரண்டு எழுந்தார்கள். போர்க் கோலம் கொண்டு அரண்மனையினின்றும் புறப்பட்டான் பல்லவ மன்னனாகிய நந்திவர்மன். ஆலயம் எங்கும் ஆசிமணி ஒலித்தது. "வெற்றி வேல் நந்தி வாழ்க; நற்றமிழ் நந்தி வெல்க" என்று நகர மாந்தர் எழுப்பிய பேரோசை வானத்தைப் பிளந்தது.

கச்சி ஏகம்பத்தின் முன் நின்று மனம் உருகி வணங்கினான் மன்னவன். "இறைவா! கச்சி ஏகம்பா! மண்ணாசை பிடித்த பாண்டிய மன்னன் காவிரியாற்றைக் கடந்து தொண்டை நாட்டின் மேலும் படையெடுக்கத் துணிந்தான். நின் அருளால் அவன் செருக்கை அறுப்பேன்; காஞ்சியின் புகழைக் காண்பேன்" என்று பணிந்து விடைபெற்றுப் பகைவரை நோக்கிச் சென்றான்.

பல்லவன் சேனைக்கும் பாண்டியன் சேனைக்கும் தெள்ளாறு என்னும் இடத்தில் பெரும் போர் மூண்டது. குருதி ஆறாகப் பெருகிற்று. இறுதியில் பாண்டியன் தோற்றான்; பல்லவன் வென்றான். ஒற்றர் வாயிலாக வெற்றிச் செய்தி கேட்ட கச்சிமா நகரத்தார் பெருங் களிப்புற்றார். அச்சம் தீர்த்தருளிய கச்சி ஏகம்பனை அகமகிழ்ந்து ஏத்தினார்; பல்லவ நந்திக்குப் பல்லாண்டு பாடினார்; காஞ்சி வாழ்க என்று ஊஞ்சல் ஆடினார்.

"கூடலர்க்குத் தெள்ளாற்றில்
விண்ணருளிச் செய்த
கோமுற்றப் படைநந்தி
குவலயமார்த் தாண்டன்
காடவர்க்கு முன்தோன்றல்
கைவேலைப் பாடி
காஞ்சிபுரம் பாடி
ஆடாமோ ஊசல்"

[கூடலர் - பகைவர்: மதுரையரசர். விண்ணருளிச் செய்த - வீர சுவர்க்கம் அளித்த; குவலய மார்த்தாண்டன் - நந்திவர்மனது பட்டப்பெயர். முன்தோன்றல் - மூத்தவன்.]

என்று இளநங்கையர் ஆடிப் பாடி அகம் மகிழ்ந்தார்கள்.

தெள்ளாற்றுப் போரில் வெற்றிபெற்ற பல்லவன் உடனே தலைநகருக்குத் திரும்பி வரவில்லை; தோற்று ஓடிய பகைவர் சேனையைத் தொடர்ந்து முடுக்கினான்; ஒன்னார் படைத் திறத்தை ஒடுக்கினான்; வைகை யாறு வரையும் அவரை வெருட்டினான்.

காஞ்சிமா நகரில் மன்னன் இல்லாத மாளிகை பொலிவிழந்து இருந்தது. நந்தியின் மனையாள் கணவன் சென்ற வழிமேல் விழி வைத்துக் காத்திருந்தாள். இளவேனில் வந்தது. மாஞ்சோலை தளிர்த்தது;

மாங்குயில் கூவிற்று; மாரனும் மலர்க்கணை தொடுத்தான்.

"மலர்ச்சூழல் அமர்ந்திவிய
 வண்டார்க்கும் காலம்
வரிக்குயில்கள் மாவிலிளந்
 தளிர்கோதும் காலம்
சிலர்க்கெல்லாம் செழுந்தென்றல்
 அமுதளிக்கும் காலம்
தீவினையேற்கு அத்தென்றல்
 தீவிகம் காலம்"

[தீவினையேற்கு - தீவினையுடைய எனக்கு.]

என்று பல்லவன் மனையாள் பதைத்து உருகினாள். மாளிகையைச் சூழ்ந்து நின்ற சோலையில் ஆடிய வண்டும், பாடிய குயிலும், வீசிய தென்றலும், பிரிவாற்றாமையால் எழுந்த அரசியின் துயரத்தை மேன்மேலும் வளர்த்தன. நெடுங்காலம் தலைவனைப் பிரிந்து தனித்திருக்க வைத்த தீவினையை நினைந்து தளர்ந்தாள்; கண்ணீர் வடித்தாள். மஞ்சத்திலே குழைந்து சாய்ந்தாள்; மயக்கம் உற்றாள்.

அப்போது அங்கு வந்த தோழியர் அரசியின் நிலை கண்டு அச்சமும் துயரமும் அடைந்தனர்; நோயின் தன்மை உணராது மனம் உடைந்தனர். உடலின் வெம்மையைத் தண்மையால் மாற்றலாம் என்று எண்ணிப் பன்னீர் கலந்த சந்தனத்தை அவள் மேனியில் பூசினர்; இருமருங்கும் நின்று கவரி வீசினர். அரசி சற்றே மயக்கம் தீர்ந்தாள்; அவள் அங்கமெல்லாம் முன்னிலும் அதிகமாய் எரிந்து பொரிந்தது. அருகே நின்ற அருமைத் தோழியரைப் பார்த்து,

"செந்தழலின் சாற்றைப் பிழிந்து செழுஞ்சீதச்
சந்தனம் என்றாரோ தடவினர் - பைந்தமிழை
ஆய்கின்ற கோன்நந்தி ஆகம் தழுவாமல்
வேகின்ற பாவியேன் மேல்"

[தழல் — நெருப்பு.]

என்று பழித்துரைத்தாள். "ஐயோ! வேந்தனைக் காணாது வெதும்பும் என் மேனியில் செந்நெருப்பின் சாற்றைப் பிழிந்து, யாரோ சந்தனம் என்று பூசி விட்டார்களே!" என்று வருந்தினாள். மதுரை வரையும் மாற்றாரைத் துரத்திச் சென்ற மன்னவன் மதுரத் தமிழிலே மயங்கி என்னை மறந்தானோ என்று ஏங்கினாள். கூடலாருடன் கூடித் தமிழ் ஏடுகளை ஆராயத் தலைப்பட்டானோ என்று எண்ணிக் கண்ணீர் உகுத்தாள்.

அந்நிலையில் கோயில் மணி அடித்தது; வெற்றி முழக்கம் வானில் வெடித்தது; கொற்றவன் வந்தான் என்று கட்டியம் எழுந்தது. கரை கடந்த வெள்ளம்போல் காஞ்சி நகர மாந்தர் திரண்டு போந்து மன்னன் திருமுகத்தைக் கண்டு மகிழ்ந்தார்கள்.

"மல்லை வேந்தன் மயிலை காவலன்
பல்லவர் தோன்றல் பைந்தார் நந்தி"

[மல்லை-மாமல்லபுரம்; மயிலை-மயிலாப்பூர்]

வாழ்க பல்லாண்டு என்று பூவேந்தனை வாழ்த்தினர் பாவேந்தர். இவ்வாறு பல்லோரும் பணிந்து போற்ற, எல்லாம் வல்ல இறைவன் திருவருளை மனமாரத் தொழுது மாளிகையிற் சென்று சேர்ந்தான் பல்லவர் கோமான்.

நாட்டிலே போர் ஒடுங்கிற்று; நந்தியின் புகழ் ஓங்கிற்று. போர்க்களத்தில் வாகைமாலை சூடிய வேந்தன் கற்றோர் அவைக்களத்தில் தமிழ் மாலை பெற்று மகிழ்ந்தான். வில்லேருழவனாய் விளங்கிய வீரன் சொல்லேருழவனாக வீற்றிருந்தான். வேலேந்திய கையில் தமிழ் நூலேந்திய நந்தி மன்னனை வியந்து பாடினர் பெருங் கவிஞர்.

"வண்மையால் கல்வியால்
 மாபலத்தால் ஆள்வினையால்
உண்மையால் பாரான்
 உரிமையால் — திண்மையால்
தேர்வேந்தர் வானேறத்
 தெள்ளாற்றில் வென்றானோடு
யார்வேந்தர் ஏற்பார் எதிர்"

என்று புகழ்ந்தார் பாரதம் பாடிய பெருந்தேவனார்.

நந்தி மன்னனின் கொடைத் திறத்தையும், படைத் திறத்தையும் செந்தமிழ்ப் புலவர்கள் பாராட்டக் கண்டு பொறாமை கொண்டனர் அவன் தம்பியர். தமிழே உயிர் எனக் கருதி வாழ்ந்த தலைவனைத் தமிழாலே கொல்வதற்கு வழி தேடினர். அவர் தீய கருத்திற்கு இசைந்தான் ஒரு கவிஞன். நந்திக் கலம்பகம் என்னும் பெயரால் ஒரு பாமாலை புனைந்தான். நல்ல சொற்களின் இடையே நச்சுப்



பதங்களை அமைத்தான். கஞ்சு தோய்ந்த அமுதமாகிய அக் கலம்பகம் நந்தியின் நெஞ்சைக் கவர்ந்தது. தொடக்கத்தில் அமைந்த கடவுள் வணக்கப் பாட்டிலே அமங்கலத்தைப் புகுத்திருந்தான் கவிஞன்.

"பருப்புரசை மதயானைப்
பல்லவர்கோன் நந்திக்குத்
திருப்பெருக அருளுக நின்
செழுமலர்ச்சே வடிதொழுவே"

என்ற செய்யுளில் உள்ள 'திருப் பெருக' என்பது 'செல்வம் கெட்டுப் போக' என்றும் பொருள்பட நிற்கின்றது. இன்னும் பல்லவ நந்தியைப் பார்த்துப் பாடும் பான்மையில் அமைந்த பாட்டிலும் அவச் சொல் வீழ்ந்திருக்கின்றது.

"புலஅரசைப் புறங்கொண்ட
புகழ்சேர் கோவே
பூவலயம் தனிக்கரியாய்
நின்ற மன்னா
சொல அரிய திருநாமம்
உனக்கே அல்லால்
சொல்லொருவர்க் கிசையுமோ
தொண்டைக் கோவே"

என்ற பாட்டிலே 'கரியாய் நின்ற மன்னா' என்ற அமங்கலத் தொடர் காணப்படுகின்றது.

இத்தகைய கேடான கலம்பகத்தைக் கேட்டு இன்புற்றான் மன்னன். தமிழ்ச் சுவையுடைய பாட்டுக்கு உயிரைக் கொடுத்தலும் தகும் என்று கருதினான் அக் காவலன். பாட்டு முடிந்தது; பல்லவன் மாண்டான். கற்றோர் உள்ளம் மடிந்தது; காஞ்சியார் மனம் இடிந்தது. கலம்பகத்தால் உயிர் துறந்த நந்தியின் பெருமை நாடெங்கும் பரவிற்று.

"நந்தி கலம்பகத்தால்
மாண்டகதை நாடறியும்
கந்தாஞ்சேர் தென்குளத்தூர்ச்
சோமேசா - சந்ததமும்
வில்லேர் உழவர்
பகைகொளினும் கொள்ளற்க
சொல்லேர் உழவர் பகை."

[வில்லேர் உழவர் – வீரர், சொல்லேர் உழவர் - புலவர்]

என்று பாடினார் மாதவச் சிவஞான முனிவர்.




# ஓவல்டின்

திரும்ப ஆரோக்யத்தைப் பெற
அவளுக்கு உதவுகிறது!

ஜுரத்திற்குப் பின் ஏற்பட்ட சோர்வு, உடல் இளைப்பிலிருந்து அவள் மெச்சத்தக்க முறையில் மீண்டு வருகிறாள். கூடிய விரைவில் அவளை ஓவல்டின் அருந்தி வரும்படி டாக்டர் யோசனை கூறினார். இப்போது அவள் வேகமாக உடல் பலம் பெற்று வருகிறாள். போஷாக்கு நிறைந்துள்ள "ஓவல்டின்" அனாரோக்கியத்திலிருந்து மீட்டு வருகிறது.

"ஓவல்டின்" சிறந்த இயற்கை ஆகாரச் சத்துக்களிலிருந்து தயாரிக்கப்படுகிறது. இத்துடன் பி & டி வைட்டமின்கள் சேர்ந்து உற்பத்தியாகிறது. அதன் மனங்கவர் நறு மணம், அசக்தர்களாலும் சுலபமாக ஜீரணிக்கப்படக் கூடிய தன்மை ஆகிய உண்மைகளின் காரணமாக, ஆரோக்கியமிழந்தவர்களுக்கு இது இன்றியமையாததாகிறது. ஆகவே "ஓவல்டின்" ஆஸ்பத்திரிகளிலும், நர்ஸிங் விடுதிகளிலும் உபயோகிக்கப்படுகிறது. உலகெங்கும் டாக்டர்களால் சிபாரிசு செய்யப்படுகிறது.

"ஓவல்டின்" ஒன்றையே கேளுங்கள். போலிகளை மறுத்து விடுங்கள்.




TV. 442

வியாதியால் சோர்ந்த பிறகு ஆரோக்யம் பெற

# ஓவல்டின்

விநியோகஸ்தர்கள்:

கிரஹாம்ஸ் ட்ரேடிங் கோ., (இந்தியா) லிட்.,

சனிக்கிழமைகளில் இரவு 8 முதல் 8-30 வரை ரேடியோ சிலோனில் (அதிர்வு 41.72 மீட்டர்கள்) ஓவல்டின் அமெச்சூர் நேரத்தைக் கேளுங்கள்.

### அத்தியாயம் 44

## இதயம் நின்றது

நான் எழுதிய கதை படமாக எடுக்கப்பட்டு விட்டது. எல்லோரும் சினிமா உலகிலேயே ஒரு புதுமை என்று வியக்கும் வண்ணம் அமைந்து விட்டது. பாஸ்கரனின் இடைவிடாத முயற்சியும் ராஜாராமின் சலிப்பில்லாத உழைப்பும், அந்தப் படத்தின் வெற்றிக்கு முக்கிய காரணங்கள். திரும்பத் திரும்ப என்னுடைய படங்களின் வெற்றியைப் பற்றியே எழுதி, எழுதி எனக்கு அலுத்து விட்டதால் நான் அதை விட்டுவிடுகிறேன்.

அந்தப் படம் முடிவடையும் தருணத்தில்தான் ராஜாராம் வீட்டை வாங்கினர். எனக்குக் கோயமுத்தூர் வாசம் அலுத்துப் போய்விட்டது. படம் முடிந்ததும் சென்னைக்குப் போய்ப் புதிய வீட்டில் இருக்கலாமே என்று ஒரு சபலம் தட்டிற்று. இனிமேல் அந்தமாதிரி வாய்ப்புக் கிடைக்காமலேயே போகலாம் அல்லவா?

இப்படியெல்லாம் நினைத்தேனே தவிர என் உள் அந்தரங்கத்தில் ரங்கதுரையை நான் மறுபடியும் சந்திக்கும்படி நேரிடலாம் என்ற எண்ணம் இருந்து கொண்டுதான் இருந்தது. ஈசுவரமூர்த்தியைப் பற்றிய பயம்கூட இதனால் எனக்குப் பெரிதாகப் படவில்லை. ராஜாராமிடம் சொல்லி எல்லோரும் சென்னைக்குச் செல்வதற்கு வேண்டிய ஏற்பாடு செய்யச் சொன்னேன்.

புதிய வீடு எனக்கு மிகவும் பிடித்திருந்தது. எளிய முறையில் கட்டப்பட்ட வீடுதான். ஆனால் கார்ரேட்டமாகவும் அடக்கமாகவும் இருந்தது. முக்கியமாக இந்த வீட்டில் பெரிய தோட்டம் இருந்தது.

மாடியில் மூன்று பக்கங்களிலும் வராண்டாவால் சூழப்பட்ட ஒரு விசாலமான அறை இருந்தது. மாடியில் இருந்ததே அந்த ஒரு அறைதான். அந்த வராண்டாக்களில் அழகிய நிறங்களை உடைய பூகன்வில்லாக் கொடிகள் வந்து தலை நீட்டி என்னைப் பார்த்துச் சிரித்தன. நான் அந்த மாடி அறையை எனக்கென்று பிரத்தியேகமாக வைத்துக் கொண்டேன். வாசலில் இருந்த வேப்பமரமும், மர மல்லிகை மரமும் என் அறைக்கு இயற்கையாகவே குளுமையான திரைகளாக அமைந்திருந்தன.

அந்த அறையில் என் அன்னையின் படத்தையும், ராமகிருஷ்ண பரமஹம்ஸர், அன்னை



சாரதாமணி இவர்களின் படங்களையும் மாட்டி வைத்தேன். அவைகளை மாட்டும்போது, 'அவருடைய படமாவது ஒன்று நம்மிடம் இருக்கக் கூடாதா?' என்று தோன்றியது.

* * *

ஈசுவர மூர்த்தியைப் பார்த்ததிலிருந்து என் மனம் ஒரு நிலையில் இல்லை. சில சமயங்களில் எப்படியாவது ரங்கதுரை இருக்குமிடத்தைத் தேடிப் பிடித்து என்னுடைய கஷ்டங்களைச் சொல்லி அவரிடம் யோசனை கேட்க வேண்டும் என்று தோன்றும். சில சமயங்களில், அவர்தான் என்னை மறந்து விட்டாரே! சுலோசனாவையே மணந்து கொள்ளப் போகிறாராமே. அவரிடம் சொல்லி என்ன பயன் என்று எண்ணுவேன். 'ஆமாம்! ஈசுவரமூர்த்தி சொன்னதை எப்படி நம்ப முடியும்? இதெல்லாம் அவர்களுடைய சூழ்ச்சியாகவே இருக்கலாம். ஆனால் சுலோசனா எப்படி இதற்குச் சம்மதித்தாள்? அவளுக்கு இவருடைய பெயரைக் கேட்ட உடனேயே என் நினைவு வந்திருக்காதா? உடனே என்னைப் பற்றிச் சொல்லியிருக்க மாட்டாளா? அவளும் வேண்டும் என்றே சொல்லாமல் இருக்கிறாளா? ஒருவேளை அவளும் அவரை மனப்பூர்வமாகக் காதலிக்கிறாளோ? அப்படி அவள் அவரைக் காதலித்தால் என்ன தவறு? அவர் கம்பீரமான தோற்றமுடையவர், வசீகரமான முகமுடையவர். நல்ல படிப்பாளி. சீமைக்குப் போய் வந்திருக்கிறார். நல்ல வேலையிலும் இருக்கலாம். அப்படிப்பட்டவரை ஒரு பெண் விரும்புவதில் என்ன அதிசயம் இருக்கிறது! நான் அவருக்காக என் அன்பைத் தியாகம் செய்து விட வேண்டுமோ? ஆனால் என் வாழ்வு என்ன ஆவது? ஒரே இருள் மயமாகத்தான் போக வேண்டுமா?'

ஆனால் நான் சுயநல நோக்கத்தை மறந்து விட்டு ரங்கதுரையின் நலத்துக்கு எது உகந்தது என்றல்லவா யோசிக்க வேண்டும்? அவருக்கு எது நன்மை தரும்? என்னை அவர் நினைவு வைத்துக் கொண்டு என்மீது அன்பைச் சொரிந்த போதிலும், என்னை அவர் மணந்து கொண்டால் அவருக்கு நன்மை ஏற்படுமா? என்னை அவர் தேடி வந்தாலே ஈசுவரமூர்த்தி கருவிக் கொண்டிருப்பார். என் மீது வீண் பழி சுமத்த முயற்சிக்கலாம். அதனால் அவருக்குத்தானே துன்பம் ஏற்படும்? என்னை அவர் மணப்பது எப்படியிருந்தாலும் முடியாது என்றுதான் தோன்றுகிறது.

அப்படியிருக்கும்போது அவராவது மணந்து கொண்டு சந்தோஷமாக இருக்க வேண்டுமென்று நினைப்பது தானே என் கடமை? அதிலும், சுலோசனா பார்வைக்குப் பகட்டாக இருந்தாலும் உள்ளத்தில் குழந்தை மாதிரி சுபாவமுடையவள். அவள் அவருக்கு எல்லாவிதத்திலும் தகுதியுடையவள். படிப்பு, ரசனை, செல்வம் ஒன்றுக்கும் குறைவில்லை. அப்படி



இருக்கும்போது அவளை அவர் மணந்து கொண்டு சுகமாக இருப்பது எனக்கு ஏன் துயரம் அளிக்க வேண்டும்? சுலோசனா, அவர் இரண்டு பேரும் சந்தோஷமாக இருப்பதைப் பார்த்து சந்தோஷப்படுவதுதான் என் கடமை. அவர் மீது நான் கொண்ட அன்பு எப்போதும் மாசு மறுவில்லாமல் இருக்கப் போகிறது. எனக்கு அதுவே போதும். அப்பா சொல்லிக் கொடுத்த தமிழ்ப் பாடல்கள் இருக்கின்றன. சாப்பாட்டுக்குக் கவலை யில்லாமல் வாழ ஏதோ வசதி ஏற்பட்டு விட்டது. துணைக்குக் கவுண்டர் இருக்கிறார். இப்படியே நான் வாழ்நாளைக் கழித்து விட வேண்டு மென்பதுதான் இறைவனுடைய விருப்பம் போலிருக்கிறது. அதற்காகத்தான் இப்படி யெல்லாம் நடந்திருக்க வேண்டும்.

இப்படி நினைத்தேனே தவிர உள்ளத்தின் அடிவாரத்தில் இந்த எண்ணங்கள் வேதனையைத்தான் தந்தன. இப்படிச் செய்வதுதான் என் கடமை என்று எனக்குத் தெரிந்திருந்தது. ஆனால் அது எவ்வளவு கசப்பாக இருந்தது தெரியுமா? யோசிக்க யோசிக்க எனக்கு, 'ரங்கதுரையைச் சந்திக்க முயற்சிக்கக் கூடாது. அப்படித் தற்செயலாகச் சந்திக்க நேரிட்டாலும் அவரைத் தெரிந்து கொண்டதாகக் காட்டிக் கொள்ளக் கூடாது. அவரும் சுலோசனாவும் மணந்து கொள்ளும் வரையில் இப்படி இருந்தால் போதும். அதன் பிறகு அவரைச் சந்தித்தாலும் பரவாயில்லை. ஆனால் அவரை நினைத்து நான் ஏங்குகிறேனென்பது மட்டும் அவருக்குத் தெரிந்து கொள்ளும்படி நடந்து கொள்ளக்கூடாது. ரங்கதுரையும் சுலோசனாவும் சந்தோஷமாக இருப்பதைக் கண்டு அதன் மூலம் நான் சந்தோஷமடைய வேண்டியது. அவர் என்னை மறக்காமல் இருந்தாலும் அவருக்கு நன்மை தருவது இதுதான். ஆகவே நான் இப்படி இருப்பதுதான் நியாயம். என்னை அவர் பார்க்காமலேயே இருந்தால் ஒரு நாள் சுலோவை மணந்து கொண்டு விடுவார். அதன் பிறகு நானே போய் அவரைச் சந்தித்து ஒரு திருமணப் பரிசு கூட அளித்து விட்டு வரலாம். என்ன பரிசு அளிக்கலாம்? சுலோசனாவுக்கு ஒரு வைர மோதிரம் அளிக்கலாம். அவருக்கு என்னால் என்ன பரிசு அளிக்க முடியும்? என் உயிரையே அளித்தால் கூட எனக்குத் திருப்தியாக இருக்காதே?' என்று எண்ணிக் கொண்டே இருக்கும் போது முனிசாமி கவுண்டர் என் அறைக்கு வந்தார். என் சிந்தனை அறுபட்டது. இந்த மாதிரி சிந்தனை உலகில் நான் சஞ்சரிக்கும் போது யாரேனும் அதைக் கலைத்தால் எனக்குக் கொஞ்சங் கூடப் பிடிக்காது.

ஆனாலும் கவுண்டரிடம் நான் எப்போதும் மரியாதையாகவே நடந்து கொள்வேன். "என்ன தாத்தா! என்ன வேண்டும்?" என்று கேட்டேன்.



"இதோ யாரோ வந்திருக்கார், அம்மா! நான் ஆன மட்டும் உன்னைப் பார்க்க முடியாதென்று சொல்லிப் பார்த்தேன். ஆனால் போக மாட்டேன் என்கிறார். உன்னை ஐந்து நிமிஷம் பார்த்துப் பேசிவிட்டுப் போய் விடுவதாகச் சொல்லுகிறார். ஏதோ முக்கியமான விஷயமாம். பார்த்துத்தான் ஆகவேண்டுமாம். கடைசியில் அவர் பெயரென்ன என்று கேட்டேன். இந்தச் சீட்டைக் கொடுத்தார்" என்று கூறி விட்டு ஒரு 'விஸிட்டிங் கார்டை'க் கொடுத்தார்.

அதை வாங்கிப் பார்த்தேன். அதில் 'ஆ. டி. ராய், மாஜிஸ்ட்ரேட்' என்று ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்தது.

எனக்கு மிகவும் அலுப்பாக இருந்தது. "என்ன தாத்தா? இந்த மாதிரி மனிதர்களுடன் என்னத்தைப் பேசுவது? எனக்கு என் நடிப்பைப் பற்றி யாரேனும் புகழ்ந்தாலே வெறுப்பாக இருக்கிறது. என்னை ஏதேனும் படத்தில் நடிக்க வேண்டுமென்று கேட்க வந்திருந்தால் உதவி டைரக்டர் ராஜாராமிடம் பேசித் தெரிந்து கொள்ளச் சொல்லி அனுப்பி விடுங்கள். எனக்கு இப்போது மனசே சரியாக இல்லை. 'தயவு செய்து மன்னித்துக் கொள்ளுங்கள். அவளுக்கு உடம்பு சரியில்லை' என்று சொல்லி அனுப்பி விடுங்கள்" என்றேன்.

சரியென்று கவுண்டர் இதோ சென்று விட்டார். ஒரு நிமிஷத்துக்கெல்லாம் மறுபடியும் வந்தார்.

"நான் சொல்வதைக் கேட்கமாட்டேனென்கிறார் அம்மா! உன்னைக் கட்டாயம் பார்க்கத்தான் வேண்டுமாம். நீ அவரைப் பார்த்தால் இப்படிச் சொல்ல மாட்டாயாம். பார்ப்பதற்கும் ரொம்பக் கௌரவமான மனிதராகத் தோன்றுகிறார். நீ அவரைப் பார்த்து விட்டுத்தான் அனுப்பி விடேன்" என்றார் முனிசாமிக் கவுண்டர்.

ஒரு வேளை என் தந்தை யாரையாவது அனுப்பி யிருப்பாரோ என்று ஒரு கணம் தோன்றியது.

உடனேயே, "சரி தாத்தா! அவரை இங்கேயே வரச் சொல்லுங்கள்" என்றேன்.

ஒரு நிமிஷத்துக்கெல்லாம் என் அறையில் ஒருவர் வந்து நின்றார். அவரைப் பார்த்ததும் என் இதயமே ஒரு கணத்துக்கு நின்று விட்டது.

அடுத்த கணத்தில் மிக வேகமாக உடலெங்கும் ரத்தம் பரவியது. அங்கங்கள் பதறின. கண்களில் கண்ணீர் பொங்கிற்று. வியர்த்துக் கொட்டியது.

என் கண்களை என்னாலேயே நம்ப முடியவில்லை. தடாலென்று நாற்காலி மீது விழுந்தேன். வந்தவரை நிமிர்ந்து கூடப் பார்க்க முடியவில்லை.

"என்னை மறந்துவிட்டாயா இந்து?" என்று அந்தப் பழக்கமான, என் காதுகளில் தேனைக ஒலித்த அந்தக் குரல் கேட்டது.

அதே சமயத்தில் நான் தீர்மானித்ததும் நினைவுக்கு வந்தது. ஈசுவரமூர்த்தி என்னைப் பயமுறுத்தியதும் நினைவுக்கு வந்தது. 'வேண்டாம்! வேண்டாம்! புத்திசாலித்தனமான ஒரு முடிவுக்கு வந்த பிறகு மறுபடியும் உணர்ச்சி வசப்பட்டு முட்டாள்தனமாக நடந்து கொள்ளக்கூடாது நெஞ்சமே! தைரியமாக இரு. மனமே துணிவாக இரு' என்று எனக்குள்ளேயே சொல்லித் தைரியப்படுத்திக் கொண்டேன்.

அவருடைய களைபொருந்திய வசீகரமான முகத்தை மறுபடியும் நிமிர்ந்து பார்த்தேன். சுலோசனாவுடன் அவர் சினிமாவில் சிரித்துப் பேசியது கண் முன்னால் வந்து நின்றது. என் நெஞ்சம் முழுவதிலும் ஏதோ ஒரு கசப்பான திரவம் வந்து நிறைந்தது.

ரங்கதுரை சிரித்துக் கொண்டே, "பெயரும் புகழும் அடைந்து விட்டாயல்லவா? பழைய சிநேகத்தை மறந்து விட்டிருப்பாய்! அதில் என்ன அதிசயம்?" என்றார்.

எனக்கு ஏன் அப்படி ரௌத்ராகாரமான கோபம் வந்தது என்று எனக்கே தெரியவில்லை. இப்போது யோசித்துப் பார்த்தால், 'என்ன பைத்தியக்காரத்தனம்? எவரைப் பார்க்க வேண்டும், பார்க்கவேண்டும் என்று நெஞ்சம் துடிதுடித்துக் கொண்டிருந்ததோ அவரைப் பார்த்த போது படபட வென்று பொரிந்தேனே' என்று ஆச்சரியமாக இருக்கிறது. மனிதர்களின் உள்ளத்தை இறைவன் எந்த வஸ்துவினால் செய்தாரோ தெரியவில்லை. அது எப்படி நமது உடலில் இருக்கிற இடம் தெரியாமல் ஒளிந்து கொண்டிருக்கிறதோ அதே மாதிரி

# திருட இயலாத குடும்ப சைஸ் பாக்கில்

# 'அனாஸின்'

## வாங்குங்கள்

'அனாஸின்' 32 வில்லைகள் கொண்ட டப்பா ஒவ்வொரு முறையும் நீங்கள் வாங்கும்பொழுது 4 அணாக்கள் மிச்சமாகின்றன. அனாஸினை எப்பொழுதும் கையோடு வைத்துக்கொள்ளும் குடும்பங்களுக்காகவே இந்த டப்பாவை பிரத்தியேகமான முறையில் அமைத்திருக்கிறோம். அனாஸினை அவர்கள் சதா வைத்திருப்பதற்கு காரணம் அதில் வலி நிவாரணத்தை விரைவில் அளிக்கும் 4 மருந்துகள் அடங்கியிருப்பதே:

1. கொயினா: ஜுரத்தடுப்பு குணமும், பலவிருத்தி செய்வதற்கும் பிரசித்தி பெற்றது. ஜுரத்தை குறைப்பதில் மிகத் துரிதமானது.
2. காப்பின்: பலஹீனத்திற்கும், மனச்சோர்வுக்கும் மிதமான தூண்டுகோல் மருந்தாக விதிக்கப்பட்டிருக்கிறது.
3. பினாஸிடின்: ஜுரத்தடுப்பு, வலி நிவாரணத் தன்மைகளுக்கு பெயர் பெற்றது.
4. ஆஸிடில் ஸலிஸிலிக் ஆஸிட்: தலைவலி அது போன்ற எல்லா வலிகளையும் போக்கடிப்பதற்கு மிகவும் உபயோகமுள்ளது.

அனாஸினில் அடங்கியிருக்கும் இந்த நான்கு மருந்துகள் நரம்புகளின் முக்கிய சேர்க்கை பாகங்களில் கூட்டாக வேலை செய்து, பத்திரமாகவும், நிச்சயமாய், விரைவில் நிவாரணமும், தலைவலி, ஜுரம், ஜலதோஷம், பல்வலி மற்றும் தசை நார்களில் நோவு முதலியவற்றை போக்குகின்றது.




'அனாஸின்' 2 வில்லைகள் கொண்ட பாக்கெட்டுகளிலும் கிடைக்கும்.

**எப்பொழுதும் அனாஸின் வில்லைகள் வேண்டுமென்றே கேளுங்கள்**

A. 45

அதன் வழிகளும் நமக்குப் புரிவதில்லை. இத்தனை நாட்கள் ஆன பிறகும் நான் ஏன் அன்று அப்படி நடந்து கொண்டேன் என்று எனக்குப் புரியவில்லை.

“சீமைக்குப் போய் வந்தவர்கள் எப்படி வேண்டுமானாலும் பேசலாம். அதிலும் நீங்கள் நீதிபதியாக வேறு இருக்கிறீர்கள். என்ன வேண்டுமானாலும் சொல்வீர்கள். பொய்யை நிஜமாக்கலாம். நிஜத்தைப் பொய்யாக்கலாம்'' என்று கடும் கோபத்துடன் அவருக்குப் பதில் கூறினேன்.

ரங்கதுரையின் முகத்தில் இருந்த சிரிப்பு மறைந்து நெற்றியில் சுருக்கங்கள் விழுந்தன. ஒரு புருவம் வளைந்து சுருங்கியது. எனக்கு இப்போதுகூட அவர் முக பாவம் மாறிய விதம் கண் முன்னால் வந்து நிற்கிறது.

“ஏன் இந்து இப்படிப் பேசுகிறாய்? உன்னை வெகு நாட்களுக்குப் பிறகு எவ்வளவோ ஆசையுடன் பார்க்க வந்தேன். ஏன் இப்படிப் பேசுகிறாய்?''

“ஆமாம்! ஆசையினால்தான் இவ்வளவு சீக்கிரம் வந்துவிட்டீர்களாக்கும்! இப்போது எதற்காக என்னைத் தேடி வந்தீர்கள்?''

“எதற்காக வந்தேனென்று கேட்கிறாய்? வந்தது தவறுதான், இந்துமதி. நீ எவ்வளவுதான் புகழடைந்திருந்தாலும், எவ்வளவுதான் செல்வத்தில் புரண்டாலும் என்னை மறந்திருக்க மாட்டாய், நீ கள்ளங் கபடமில்லாத உள்ளமுடையவள் என்று நம்பி வந்தேன். பத்மநாபன் கூறியது நூற்றுக்கு நூறு உண்மை என்று இப்போதுதான் தெரிகிறது'' என்றார்.

ஒரு நிமிஷத்துக்கு முன் தேனாக இனித்த அதே குரல் இப்போது என்னை நெருப்பாக எரித்தது. ஆனாலும் என் கோபம் இன்னும் அதிகரித்து எரிமலையாக வெடித்தது.

“பத்மநாபன் சொல்லி விட்டார் அல்லவா? வக்கீல் சொன்னால் நீதிபதிக்கு வேத வாக்காகத்தானே இருக்க வேண்டும்? பின் ஏன் இங்கே வந்தீர்கள்? அவருக்குத்தான் அப்ஸரசை ஒத்த பெண் இருக்கிறாளே!'' என்று பொரிந்து தள்ளினேன்.

‘ஐயோ! இந்து என்ன சொல்கிறாய்? இப்படி அவரிடம் பேசலாமா? அவர் மனத்தைப் புண்படுத்தி உன் வாழ்வை அடியோடு நாசமாக்கிக் கொள்ளாதே. வேண்டாம்!' என்று என் மனம் எச்சரித்தது. ஆயினும் பிரவாகமாக வந்த வார்த்தைகளை என்னால் அடக்க முடியவில்லை.

“நீ சொல்கிறபடியே செய்கிறேன், இந்துமதி. ஐந்து வருஷங்களுக்குப் பிறகு நமது சந்திப்பு இப்படி இருக்குமென்று நான் நினைக்கவில்லை. உனக்காக நான் வரவில்லை. உன் அன்னைக்குக் கொடுத்த வாக்குறுதிக்காக வந்தேன். நீ சுகமாக இருக்கிறாய். வீடு, பணம், புகழ் எல்லாம் நீ அடைந்து விட்டாய். எனக்கு இனிமேல் கவலை இல்லை'' என்று கூறி விட்டு எழுந்து நின்றார் ரங்கதுரை.

“ரொம்ப சரி. இவ்வளவு நாட்களுக்குப் பிறகாவது உங்களுக்கு என் நினைவு வந்ததே! கவலை விட்டது. இனிமேல் உங்களை அந்த வாக்குறுதி பாதிக்காதல்லவா? நிம்மதியாகப் போய் வாருங்கள்!'' என்றேன்.

“சரி, இந்து! போய் வருகிறேன். ஆனால் நானாகப் போகவில்லை. நீ சொன்னதினால் போகிறேன். நீ சந்தோஷமாக இருக்க வேண்டுமென்பதே என் ஆசை'' என்று சொல்லி விட்டு வேகமாக நடந்து மாடிப் படியை அடைந்தார் ரங்கதுரை.

நான் திகைத்து நின்றேன். அவரைப் போகச் சொல்லவேண்டுமென்று நான் நினைக்கவே இல்லை. அவர் போவதைப் பார்த்ததும் எனக்குப் பேசவே வரவில்லை. மாடிப் படியருகில் ரங்கதுரை ஒரு கணம் தயங்கி நின்றார். ‘ஐயோ! அவர் திரும்பி வர மாட்டாரா?' என்று என் இதயம் துடித்தது. ‘வேண்டாம்! போகட்டும்' என்று அறிவு சொல்லிற்று.

அடுத்த கணம் ரங்கதுரை வெகு வேகமாக இறங்கிச் செல்லும் சத்தம் கேட்டது. ஒவ்வொரு அடியும் என் இதயத்தில் விழுந்தது போலிருந்தது. தோட்டத்திலிருந்து கார் புறப்படும் சத்தம் கேட்டது. வராண்டாவுக்கு ஓடிச் சென்றேன். ரங்கதுரையின் வசீகரமான வதனம் ஒரு கணம் தெரிந்தது. கார் விரைந்து சென்று வாசற் கதவைத் தாண்டி வெளியே சென்றது. அந்தக் காரின் சக்கரங்களுக்கு அடியில் நான் சிக்கித் திணறு

வது போன்ற வேதனை எனக்கு உண்டாயிற்று. அப்படியே தரையில் விழுந்து குமுறிக் குமுறி அழுதேன்.

எவ்வளவு நேரம் அப்படித் தன் நினைவில்லாமல் அந்த வராண்டாவில் கிடந்தேனோ எனக்கே தெரியாது. ஏதேதோ விசித்திரமான எண்ணங்கள் என் மனத்தில் நர்த்தனமாடின. அத்தனை துன்பத்துக்கு நடுவிலும் ஒரு சந்தோஷம் இல்லாமல் போகவில்லை. அவர் என்னிடம் கோபித்துக்கொண்டு போயிருக்கிறார். நான் என் கடமை என்னவோ அதைச் செய்தேன் என்று ஒரு திருப்தி ஏற்பட்டது.

ஆனால் இதயம் என்று ஒன்று இருக்கிறதே! இறைவன் அதை எதற்காகக் கொடுத்திருக்கிறார்? அறிவை மாத்திரம் கொடுத்து இதயத்தை வைக்காமலிருந்தால் இந்த உலகத்தில் நமக்குக் கஷ்டமே ஏற்படாது.

என்னுடைய விசித்திரமான மனோநிலை யாருக்கும் புரியாதோ என்று எனக்குச் சந்தேகமாக இருக்கிறது. ஆனால் உலகத்தில் ஒவ்வொருவரும் ஏதாவது ஒரு சமயத்தில் என்னைப் போன்ற உணர்ச்சிகளுக்கு ஆளாவார்கள். அறிவுக்கும், இதயத்துக்கும் உலகத்திலுள்ள மனிதர்கள் அத்தனை பேருக்கும், ஒரு சமயத்தில் போராட்டம் ஏற்பட்டே தீரும். அப்போதுதான் என் நிலைமை புரியும்.

அதிலும் என் இதயக் கோயிலில் வைத்துப் பூஜித்த மனிதர் பல வருஷங்களுக்குப் பிறகு என்னைப் பார்க்க வந்த போது நான் அப்படிப் பேசியது மிக விநோதமாக இருக்கிறதல்லவா? ஆனால் என் வாழ்க்கையில் எனக்கு ஒன்றன் பின் ஒன்றாக ஏற்பட்டுக் கொண்டே வந்த ஏமாற்றங்களையும், மன அதிர்ச்சிகளையும் கவனித்தால் என் மனோநிலை ஒருவாறு விளங்கும்.

குழந்தைப் பருவம் முதல் பெற்ற தந்தையைப் பற்றிய மர்மம், பின்னர் தாயின் மரணம், உடனே என் அன்புத் தந்தையின் மரணம், பத்மநாபன் வீட்டில் என்னை நடத்திய

## ஹாஸ்யக் களஞ்சியம்









விதம், ஈசுவரமூர்த்தியின் விருப்பம், அதன் பிறகு நான் வீட்டை விட்டு ஓடியது, இப்படியாக எனக்கு ஒன்றன்பின் ஒன்றாக வந்த அதிர்ச்சிகளாலும், ரங்கதுரையைப் பற்றி நான் பட்ட கவலைகளினாலும் என் உள்ளம் மிகவும் தளர்ந்து இருந்தது. அந்தச் சமயத்தில் அவரைத் திடீரென்று பார்த்தவுடன் எனக்கு ஒன்றுமே புரியவில்லை. உன்மத்தம் பிடித்த மாதிரி ஆகி விட்டது.

சினிமாவில் நடித்து அதன் மூலம் பெயரும் புகழும் அடைந்து கூட எனக்கு மன நிறைவு உண்டாகவே இல்லை. என் அருமைத் தந்தை மந்திரமூர்த்தி எத்தனையோ விதங்களில் என்னை முன் கூட்டியே இத்தனை கஷ்டங்களையும் அனுபவிப்பதற்குத் தயாராக்கி யிருந்தார். அவர் அவ்வளவு நன்றாக வளர்த்திரா விட்டால் என்னால் அந்தக் கஷ்டங்களைத் தாங்க முடியாமல் போயிருந்திருக்கும். சித்தப்பிரமையே பிடித்திருக்கும். என் தந்தை என் உள்ளத்தில் கடவுள் நம்பிக்கை என்னும் அஸ்திவாரத்தைப் பலமாகவும், ஆழமாகவும் போட்டிருந்தார். ஆகவே அதன் மீது நான் எழுப்பிய கட்டடம் எவ்வளவோ குறைகளுடன் இருந்த போதிலும் உறுதியாக இருந்தது.

இந்த மாதிரி கஷ்டங்களை அனுபவித்துச் சுபாவத்தில் ஒரு பெரிய குறை உண்டாயிற்று. நான் மிகவும் ஆத்திரக்காரியாகி விட்டேன்.

**நா**ன் சிறு வயதிலேயே சற்றுத் துடுக்கான சுபாவமுடையவள். இயற்கையான சுபாவம், பட்ட கஷ்டங்கள் எல்லாம் சேர்ந்து என்னை ரொம்ப ஆத்திரக்காரி யாக்கி விட்டிருந்தன. அற்ப விஷயங்களுக்கெல்லாம் வார்த்தைகளைக் கொட்டி விடுவேன். கவுண்டர் எனக்குப் பல தடவைகள் இந்தச் சுபாவத்தை விட்டு விடும்படி புத்தி மதி கூறி யிருக்கிறார்.

இந்த ஆத்திர சுபாவம் என்னை எவ்வளவு தூரம் சில சமயங்களில் கெடுத்திருக்கிறது தெரியுமா?




சாமா






ரங்கதுரையை நான்சந்தித்தஅன்று, அவர், "என்னை மறந்து விட்டாயா இந்து?" என்று கூறியது மேலாக ஆறி வந்த புண்ணைக் கீறி விட்ட மாதிரி ஆகி விட்டது. அதிலும் அவர், "பெயரும் புகழும் அடைந்து விட்டா யல்லவா? பழைய சிநேகத்தை மறந்து விட்டிருப்பாய்" என்று கூறியதும் சொல்ல முடியாத கோபம் வந்து விட்டது. அவர் பரிகாசமாகப் பேசிய வார்த்தைகள் என்னை மிகவும் புண் படுத்தி விட்டன.

மேலும் கொஞ்ச நாட்களாகவே ரங்கதுரையைத் திடீரென்று சந்தித் தால் அவர் என்ன செய்வார் என்று கற்பனைகள் செய்து கொண்டிருந் தேன். என்னைப் பார்த்ததும். 'இந்து மதி' என்று ஓடி வருவார். வந்து என் கைகளைப் பிடித்துக் கொண்டு, 'உன்னைப் பிரிந்திருந்தது எவ்வளவு கஷ்டமாக இருந்தது தெரியுமா?' என்று கேட்பார். அல்லது, 'என்னை மன்னித்து விடு, இந்து' என்பார். இம் மாதிரி ஏதேதோ கற்பனை செய்து வைத்திருந்தேன்.

ஆனால் ரங்கதுரை நேர்விரோதமாக நடந்து கொண்டார். சாந்தமாக வந்து உட்கார்ந்தார். நிதானமாகப் பேசினார். என்னைப் பார்த்ததில் அப்படிப் பிர மாதமான ஆனந்தத்தை அனுபவித்த தாகத் தோன்றவில்லை. அருகில்கூட வரவில்லை. பேசும் போது குரலில் ஆவல் இல்லை. தினந்தோறும் பழகும் ஒருவருடன் பேசும் போது எப்படி இருப்பாரோ, அதே மாதிரி இருந்தார். எனக்கு அவர் அலட்சியமாக இருப்ப தாகத் தோன்றி விட்டது. சுலோசன வுடன் பழக ஆரம்பித்த பிறகு என்மீ திருந்த அன்பு குறைந்து விட்டதுபோ லிருக்கிறது என்று எண்ணினேன்.

அவர் சற்றுக் கனிவாக அருகில் வந்து, "இந்துமதி" என்று அன்புடன் உணர்ச்சியுடன் அழைத்திருந்தாரா னால் என்னை அவருக்கு அர்ப்பணித் திருப்பேன். என்னை அவரிடம் ஒப் படைத்துவிட ஒவ்வொரு அணுவும் துடித்துக் கொண்டிருந்தது. அதனா லேயேஅவர் அலட்சியமாக இருக்கிறார் என்று எண்ணியதும் பல மடங்கு அதிகமாகக் கோபம் வந்தது. இதை என்ன அதிசயம் என்று சொல்வது?

எனக்கு அவர் கோபித்துக்கொண்டு போனதுகூட பாதிக்க வில்லை. என்னைப் பற்றி ஏதோ பத்மநாபன் தவ ருகச் சொன்னதை நம்புகிறார் அல் லவா? நூற்றுக்கு நூறு உண்மை என்று சொன்னாரல்லவா? எப்படி அதை அவர் நம்பினார்? உண்மை யான அன்பு இருந்தால் என் இதயத் துடிப்பு அவர் இதயத்தில் எதி ரொலித்திருக்காதா? ஆனால் அந்தப் பத்மநாபன் எப்படி என்னைப் பற்றி அவதூருக ரங்கதுரையிடம் சொல்ல லாம்? அவருடைய பெண்ணை ரங்க துரை கல்யாணம் செய்து கொள் வதை நான் குறுக்கே விழுந்து மறிக் கிறேனா என்ன? அவரைச் சும்மா விடக் கூடாது. இந்துமதி என்றால் இள்ளுக் கீரை என்று நினைத்து விட் டாற் போலத் தோன்றுகிறது. அவ ருக்கு ஒரு சரியான பாடம் கற்பிக்க வேண்டும். நான் பழைய இந்துமதி இல்லை என்று அவருக்கு நிரூபித்து விட வேண்டும். இவர்கள்தான் என் னைப் பயமுறுத்தலாமோ? நானும் கொஞ்சம் மிரட்டிப் பார்க்கிறேன். வருவது வரட்டும். மிஞ்சி மிஞ்சிப் போனால் சொக்கையா கொலை வழக் கில் என்னை இழுத்து விடப் போகி றார்கள். அவ்வளவுதானே?

எப்படி இருந்தாலும் நான் ரங்க துரையை மணக்க முடியப் போவ தில்லை. அவரைப் பாதிக்காத வகை யில் எனக்கு என்ன நேர்ந்தாலும் நேரட்டும். மரணதண்டனை கிடைத்து விட்டால் ரொம்ப நல்லதாகப் போயிற்று. இந்த மாதிரி கயவர் களும், மனிதப் பிசாசுகளும், நாகரிக மான அரக்கர்களும் வாழும் உலகத்தி லிருந்து விடுதலை கிடைத்தாலே சுவர்க்க போகம்தான் என்றெல்லாம் உணர்ச்சி வேகத்தில் ஏதேதோ எண்ணமிட்டேன்.

கடைசியாகக் கவுண்டரைப் போய் டாக்ஸி கொண்டு வரச் சொல்லுவது, உடனே பத்மநாபனிடம் போய் 'நான் பழைய இந்துமதி இல்லை' என்று சொல்லி விட்டு வர வேண்டியது எனத் தீர்மானித்தேன். ராஜாராம் வருவதற்குள் கிளம்பி விட வேண்டு மென்று உடனே கவுண்டரைக் கூப் பிட்டேன். என்னை அப்பொழுது ஏதோ ஒருவித ஆவேசம் வந்து பற்றிக் கொண்டது என்றுதான் சொல்ல வேண்டும்.

(தொடரும்)

# ரஸமான க்ஷணங்கள் ஒவ்வொன்றையும் என்றும் நிலைத்திருக்கச் செய்யுங்கள்

இவ்வளவு குறைந்த செலவில் இத்தனை இன்பந்தரும் 'ஹாபி' வேறு எதுவுமில்லை! சொற்ப ரூபாய்களுக்கே ஒரு சிறந்த 'கோடக்' காமிரா வாங்கிவிடலாம். பிறகு ஸ்படிகம்போன்ற வியூபைண்டரில் காட்சியைக் குறிபார்த்துக்கொண்டு, பொத்தானை அழுத்தவேண்டியது மட்டுமே... முதல்முறை முயற்சியிலேயே அற்புதமான படங்கள் எடுத்துவிடுகிறீர்கள்.

உங்கள் கோடக் வியாபாரியிடமுள்ள ஏராள நிறுக நேர்த்தியான காமிராக்களை போய்ப்பாருங்கள்... சௌகரியமான விலையில் ஒரு நல்ல 'கோடக்' மாடல் உங்களுக்கு அவசியம் கிடைக்கும்.

'கோடக்' பிளாஷ் ஹோல்டர்களையும் பாருங்கள். அவைகளின் உதவியால் வெளிக்காட்சிகளைப் போலவே சுலபமாக வீட்டினுள்ளும் படம் பிடிக்கலாம்.

இதுபோன்ற சந்தோஷ க்ஷணங்களை ஏன் மறந்துபோக விடவேண்டும்! பொத்தானை அழுத்தவேண்டியதே... உங்கள் 'கோடக்' ஸ்நாப்புகள் அவைகளை என்றென்றும் உங்களுக்கு ஞாபகமூட்டிக்கொண்டேயிருக்கும்.



'பிரௌனி' 127 காமிரா: யாவற்றிலும் மிக எளிதான அழகிய சிறு காமிரா இது. சிக்கனமான 'கோடக்' 127 பிலிம் சுருள் ஒவ்வொன்றிலும் எட்டு ஸ்நாப்புகள். விலை ரூ. 17/8

'பிரௌனி' சிப்லெக்ஸ் காமிரா: கையாள அதிகப்படி சுலபமானது. அநேகமாக பூர்ண சைஸ் வியூபைண்டர். 'கோடக்' 127 பிலிம் சுருளில் 12 ஸ்நாப்புகள். விலை ரூ. 45/-
'கோடக்' பிளாஷ்ஹோல்டர் ரூ. 22/12

கோடக் 'டூவாப்லெக்ஸ்' காமிரா: 'கோடக்' 620 பிலிம் சுருளில் 2¼" சதுரத்தில் 12 பெரிய ஸ்நாப்புகள். பெரிய அளவு வியூபைண்டர் இருப்பதால் பிழை ஏற்படுவது துர்லபம். ரூ. 69/-
'கோடக்' பிளாஷ்ஹோல்டர் ரூ. 22/12
கால் தோல் கேஸ் ரூ. 11/-
இவ்விலைகளில் விற்பனை வரி சேராது

கோடக் லிமிட். (இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது) பம்பாய் — கல்கத்தா — டில்லி — மதராஸ்.



# அபூர்வ வித்தை

திரிவேணி தேவி

ஒரியாக் கதை: மொழிபெயர்ப்பு: ஜெயமணி

**பு**துமையை விரும்புவதே மனிதரின் இயற்கை சுபாவம். ஏதாவது ஒரு புதிய சாதனம் மனிதரின் கவனத்தை இழுக்கும் போது அவர்கள் தங்கள் மனத்தைக் கவரும் இணையற்ற அழகிய சிருஷ்டியைக் கூட மறந்து விடுகிறார்கள்.

குழந்தைகள் புதிய விளையாட்டுப் பொம்மைகளைக் கண்டதும், எவ்வளவு சிறந்தவையாயினும் பழைய பொம்மைகளை ஏறெடுத்தும் பார்ப்பதில்லை யல்லவா! அது போலவே பெரும்பாலோருக்கு அந்தக் குணம் ஆயுள் வரை நீடிக்கத்தான் செய்கிறது.

இல்லாவிடில் மோகன எழிலே உருவான தாஜ்மகால் அன்று ஏன் அப்படி மனித சஞ்சாரமற்ற பிரதேசம் போல் காட்சியளிக்க வேண்டும்! அதிலும் அத்தகைய அற்புதமான நிலவு வெளிச்சத்தில் சாதாரணமாக அங்கு ஏராளமான ஜனங்கள் கூடி அந்த சிருஷ்டியின் அழகை அநுபவித்து மகிழ்வார்கள். ஆனால், அன்றிரவோ அங்குமிங்கும் திரியும் ஒரு சில பிச்சைக்காரர்களைத் தவிர, வேறு எவருமே அங்கு தென்படவில்லை.

அப்போது ஆக்ராவுக்கு ஒரு பிரபல சர்க்கஸ் கோஷ்டி வந்திருந்தது. அதன் பகட்டிலும் சாகஸ வித்தைகளிலும் ஆக்ரா நகரம் முழுதுமே மயங்கி யிருந்தது. அந்தக் கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் அதற்கு முன் யாரும் கண்டும் கேட்டுமிராத வீர தீர சாகஸச் செயல்களில் நிபுணர்களாக இருந்தனர். எனவே வெண்ணிலவில் சித்திர விசித்திரமாகத் தோன்றும் தாஜ்மகாலின் அழகைக்கூட மறந்து விட்டு ஜனங்கள் அந்த சர்க்கஸைப் பார்த்து மகிழ்வதில் வெறியும் ஆர்வமும் கொண்டிருந்தார்கள். அந்தப் புதுமையில் மனத்தைப் பறி கொடுத்த அவர்கள், இணையற்ற, நிரந்தரமான அழகு வாய்ந்த காதற் கோயிலைக் கூடத் தாற்காலிகமாக மறந்திருந்தார்கள்.

எனினும் அதற்கு ஒருவன் மாத்திரம் விதிவிலக்காக இருந்தான். அவன்தான் சமீர். அவன் தாஜ்மகாலுக்குச் சென்று அதன் அழகைப் பருக ஒரு நாள்கூடத் தவறுவதில்லை. பளிங்குக் கல் படிகளுக்கு அருகில் உள்ள வட்ட வடிவமான நீர்த் தேக்கத்தின் கரையில் உட்கார்ந்து கொண்டிருப்பதில் அவனுக்கு அலாதியான விருப்பம். அங்கு சமீர் மணிக்கணக்கில் உட்கார்ந்து கொண்டிருப்பான். தண்ணீரில் தெரியும் தாஜின் வெண் சிகரத்தின் பிரதிபிம்பத்தையும் தடாகத்தின் கரையில் உள்ள பசுமைக் காட்சிகளையும் அவன் வெகு நேரம் கண்கொட்டாமல் பார்த்துப் பார்த்துப் பரவசம் அடைவான்.

தெய்வீகக் காதல் என்பது வெறும் கற்பனையல்ல, முற்றிலும் உண்மை என்பதை அவன் அந்த இடத்தில்தான் தெரிந்து கொண்டான்.

சமீர் அவ்விதம் தன்னை மறந்து உட்கார்ந்து கொண்டிருக்கையில், பின்புறமிருந்து அவன் தோளில் யாரோ கை வைத்ததைக் கண்டு திடுக்கிட்டு விட்டான். சமீர் திரும்பிப் பார்த்த போது, அங்கு அவனது நண்பன் அசோக் நின்று கொண்டிருந்தான்.

சமீரின் நிலையைக் கண்டு அசோகிற்கு ஒரு புறம் கோபமும், மற்றொரு புறம் வருத்தமும் உண்டாயிற்று.

"உன் மனமாறுதல் எனக்கு ஒரு புதிராக இருக்கிறது. உன் மனத்தில் இத்தகைய விரக்தியும் வெறுப்பும் ஏற்பட்டிருப்பதற்குக் காரணம் என்ன! உன்னைச் சுற்றியுள்ள உலகத்தையே நீ மறந்த நிலையில் இருக்கிறாயே! இந்நகரில் அதிசயமான சர்க்கஸ் காட்சி ஒன்று நடந்து கொண்டிருக்கிறது. ஆனால், நீயோ வெளியில் இந்த நிலவு வெளிச்சத்திலே அரைத் தூக்கத்தில் ஆழ்ந்திருக்கிறாய். புதிய புதிய சினிமா அல்லது வேறு காட்சிகளைப் பார்ப்பதற்காக நீ ஒவ்வொரு சனிக்கிழமையும் டில்லிக்கு யாத்திரை போய் வந்தாயே, எனக்குத் தெரியாதா! இப்போது உனக்கு என்ன கேடு வந்து விட்டது! இப்போது நீ ஞானியாகி விட்டாய்! உன் துப்பாக்கியைக் கூடத் தூர எறிந்து விட்டாய் போலிருக்கிறது" என்று சரமாரியாகப் பொழிந்தான் அசோக்.

அசோகின் வார்த்தைகளைக் கேட்டதும் சமீருக்குத் தன் பழைய நடவடிக்கைகள் எல்லாம் ஞாபகத்துக்கு வந்தன. அவை யெல்லாம் கலைக்கு உதவாத வீண் பொழுது போக்கு என்ற முடிவுக்கு வந்து தன் போக்கை மாற்றிக் கொண்டுள்ள சமீரின் முகத்தில் புன்முறுவல் தவழ்ந்தது.

"வேட்டையாடுவதில் எனக்கு இருந்த மயக்கமெல்லாம் தெளிந்துவிட்டது, அசோக்! இருந்தாலும் என் துப்பாக்கியை நான் தூர எறிந்து விடவில்லை. சுத்தம் செய்து, எண்ணெய் போட்டுத் தயாராகத்தான் வைத்துக் கொண்டிருக்கிறேன்" என்றான் சமீர்.

"சரி, அது கிடக்கட்டும். இப்போது நீ சர்க்கஸுக்கு வருகிறாயா, இல்லையா! உனக்கும் சேர்த்து நான் டிக்கெட்டு வாங்கியிருக்கிறேன்" என்று வற்புறுத்தினான் அசோக்.

தன் நண்பனின் ஆசையைக் கெடுக்க சமீர் விரும்பவில்லை. எனவே, அவன் அசோகுடன் சர்க்கஸுக்குச் சென்றான்.

அன்று அந்தப் பெரிய சர்க்கஸ் கூடாரத்தில் எள் விழ இடமில்லை; அவ்வளவு ஜனக் கூட்டம்!

பலவித வர்ண ஜால விளக்குகளின் வெளிச்சமும் பல சங்கீதக் கருவிகளின் இனிய இசையும் சேர்ந்து அந்த இடம் தேவலோகம் போல் காட்சி அளித்தது. சமீரும் அசோகும் முன் வரிசையில் உட்கார்ந்திருந்தனர்.

காட்சி ஆரம்பமாவதற்கு முன், அசோக் மும்தாஜ் என்ற ஒரு பெண்ணைப் பற்றியே இடைவிடாது பேசிக் கொண்டிருந்தான். தாஜ்மகால் பளிங்குக் கல்லறைக்குள் நிரந்தரத் துயிலில் ஆழ்ந்துள்ள மும்தாஜைப் பற்றியல்ல; உயிருடன் நடமாடிக் கொண்டிருக்கும் மும்தாஜைப் பற்றித்தான் வானளாவப் புகழ்ந்து கொண்டிருந்தான்.

அசோக் குறிப்பிட்ட மும்தாஜ் மொகலாய சக்கரவர்த்தியின் பட்டமகிஷி அல்ல; எல்லையற்ற செல்வத்துக்கு ராணி அல்ல. ஆனால் சாதாரணமான ஒரு பெண்; சர்க்கஸ் வித்தைக்காரி.

"இருந்தாலும் அவள் சாதாரணப் பெண் அல்ல, தெய்வலோகத்துப் பெண். எண்ணிக்கையற்ற ஆடவர்கள், பெண்மணிகள், குழந்தைகள் யாவரையும் மணிக்கணக்கில் அதிசயத்தில் ஆழ்த்தும் சக்தி வாய்ந்த ஒரு பெண் எப்படிச் சாதாரணப் பெண்ணாக இருக்க முடியும்!" என்றான் அசோக் உற்சாகம் ததும்ப.

காட்சி முடிந்தது. மேற்படி சர்க்கஸ் வித்தைக்காரியைப் பற்றி அசோக் அன்று சமீரிடம் வர்ணித்தது நூறாவது தடவையாகும். மறுபடியும் அந்த வர்ணனையைக் கேட்டதும் சமீர் பெருமூச்சு விட்டான்.

அசோக் மும்தாஜை ஒரு தெய்வப் பெண்ணாக நினைத்து, அவளைப் பூஜை செய்யத் தயாராக இருந்தான். ஆனால், சமீரோ அவளை ஒரு மானிடப் பெண்ணாகக் கூடக் கருதவில்லை. சர்க்கஸில் பழக்கப்பட்டுப் பல்வேறு வித்தைகள் செய்யும் ஆடு, குதிரை, சிங்கம், புலி இவைகளைப் போல் அவளையும் ஒரு மிருகமாகவே கருதினான்! எனவே, அவளது நிலையைக் குறித்து அவள் மீது பரிதாபம் கொள்ள வேண்டுமேயன்றி, அவள் காதலுக்கு உற்ற பாத்திரம் இல்லை என்று சமீர் எண்ணினான்.

சமீரின் உணர்ச்சியற்ற போக்கு அசோகிற்கு ஏமாற்றத்தைக் கொடுத்தது. சமீர் படிப்பும் நாகரிக உணர்ச்சியும் பரந்த நோக்கமும் உள்ள இளைஞன். அப்படியிருந்தும் அவன் ஓர் அழகிய யுவதிக்கு உரிய மரியாதை செலுத்த விரும்பாதது மனித இயற்கைக்கு முரணாகத் தோன்றியது.

சில நாட்களுக்குள் அசோகின் மனப்போக்கில் மிகுந்த மாறுதல் ஏற்பட்டது. அவன் கற்பனை உலகில் வாழ விரும்பவில்லை. அவனது அருமைக் காதலி மும்தாஜைப் பற்றிக் கனவு காண்பதுடன் நிற்க விரும்பவில்லை. அவளைத் தன் வாழ்க்கைத் துணைவியாக அடைய வேண்டும் என்ற ஆசை அவன் மனத்தை ஆட்கொண்டது.

எனவே, அவன் யாருக்கும் தெரியாமல் மும்தாஜைப் பேட்டி காணத் தொடங்கினான். அசோகிடம் மும்தாஜும் தன் மனத்தைப் பறிகொடுத்தாள். இருவரது காதலும் கனியத் தொடங்கியது.

மும்தாஜ் வேண்டிக் கொண்டதன் மீது, அசோக் தன் நோக்கத்தைச் சர்க்கஸ் சொந்தக்



காரரிடம் தெரிவித்து அவரது சம்மதத்தைப் பெறத் தீர்மானித்தான். தனது ஆசையை அவரிடம் எப்படித் தெரிவிப்பது என்பது பற்றி அசோக் இடைவிடாது ஆலோசித்துக் கொண்டிருந்ததால், இரண்டு நாட்களாக அவனுக்குத் தூக்கமே வரவில்லை.

சர்க்கஸ் சொந்தக்காரர், தனது கோரிக்கைக்கு இசையும்படி எவ்விதம் செய்வது! மும்தாஜைத் தான் மணப்பதற்கு அவர் ஆட்சேபித்தால், அவர் மனத்தை எப்படி மாற்றுவது! இதே கவலையாக இருந்தான் அசோக்.

மும்தாஜுக்காக அசோக் எவ்விதத் தியாகமும் செய்யத் தயாராக இருந்தான். என்ன வந்தாலும் அவளைத் தன் மனைவியாக்கிக் கொள்ள உறுதி கொண்டான்.

இவ்விஷயத்தை அவன் சமீருக்குத் தெரிவிக்கத் தவறவில்லை. அசோக் கூறிய விவரங்களையெல்லாம் கவனமாகக் கேட்ட சமீருக்கு, மும்தாஜ் விஷயமாக அசோக் சர்க்கஸ் சொந்தக்காரரை எதற்காகக் கேட்க வேண்டும் என்று தோன்றியது.

"இது எனக்கு மிகவும் மகிழ்ச்சியைக் கொடுக்கக் கூடிய செய்திதான். அவள் பாதாளத்தில் விழுந்து விடாமல் உன் மூலமாவது காப்பாற்றப்படட்டும். ஆனால், இதற்குச் சர்க்கஸ் சொந்தக்காரரின் சம்மதத்தை நீ எதற்காகக் கேட்க வேண்டும் என்பதுதான் எனக்குத் தெரியவில்லை. உன் காதலி மும்தாஜ் குழந்தையா! அவள் வயதான பெண். தனக்கு இஷ்டமான ஒருவனைக் கணவனாக அடைய அவளுக்குச் சுதந்திரம் உண்டு. இதற்குச் சர்க்கஸ் சொந்தக்காரரின் தயவு எதற்காக!" என்று கேட்டான் சமீர்.

"அப்படியெல்லாம் சொல்லாதே. சர்க்கஸ் சொந்தக்காரர் மும்தாஜ் மீது எவ்வளவு அன்பு வைத்திருக்கிறார் என்பது உனக்குத் தெரியாது! சொந்தப் பெண்ணைக் காட்டிலும் அதிகமாகத் தன்னிடம் அவர் பிரியம் வைத்திருப்பதாக மும்தாஜ் பிரமாணம் செய்கிறாள். எனவே, அவர் மனத்துக்கு அற்ப வேதனையும் கொடுக்க அவள் விரும்பவில்லை" என்று விளக்கினான் அசோக்.

அசோகின் வார்த்தைகள் சமீருக்கு வேடிக்கையாக இருந்தன.

"இது நான் கேள்விப்பட்டிராத ஒரு செய்திதான். தன்னிடம் வேலைக்கு இருக்கும் பெண்ணிடம் ஒரு முதலாளி அவ்விதம் தன்னலமற்ற அன்பு கொண்டிருக்கிறாரா! முதலாளியின் கல் மனத்தில் அவ்வளவு அன்பையும் இரக்கத்தையும் காண முடியுமா! உன் கூற்று, கொடிய காட்டு மிருகம் சாத்துவிகக் கொள்கையை அனுஷ்டித்து வருகிறது என்பது போல் இருக்கிறது. இது பெரிய விந்தைதான்!"

"சமீர், உன் பிரசங்கத்தை இத்துடன் நிறுத்திக் கொள். நீ எவரையும் உன் காமாலைக் கண்ணால் பார்க்கிறாய். அடுத்த ஞாயிற்றுக் கிழமை நான் சர்க்கஸ் சொந்தக்காரரைக் கண்டு பேசப் போகிறேன். அவர் எத்தகைய மனிதர் என்பது அப்போது தெரிந்து விடும் அல்லவா! இப்போதே அவர்மீது தப்பெண்ணம் கொள்வது சரியல்ல. அவர் என் கோரிக்கைக்கு இணங்காவிடில், பிறகு நீ சொல்லுகிறபடியே நான் நடந்து கொள்கிறேன்."

அன்று சனிக்கிழமை. சர்க்கஸ் கூடாரத்துக்கு வெளியிலும் உள்ளேயும் ஜனக்கூட்டம் தாங்க முடியவில்லை. அன்றிரவு மும்தாஜ் அபூர்வமான ஒரு புதிய வித்தை செய்து காட்டப் போகிறாள் என்று நகர் எங்கும் விளம்பரப்படுத்தப்பட்டிருந்தது.

வழக்கம்போல் அசோக் முன் வரிசையில் ஆர்வமும் மகிழ்ச்சியும் பொங்க உட்கார்ந்து கொண்டிருந்தான். தன் ஹிருதய ராணி எப்போது வரப்போகிறாள் என்று அவன் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

சர்க்கஸுக்குப் புதிதாக வந்திருந்த பிரமாண்ட கொம்பன் யானையைப் பற்றிப் பலர் பல விதமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். அந்த யானை மைசூரிலிருந்து சர்க்கஸ் சொந்தக்காரரால் ரூ. 25,000-க்கு வாங்கப்பட்டிருந்தது.

அது மனிதனைப் போல் வித்தைகள் செய்வதாகச் சிலர் கூறினர். அது துதிக்கையால் விளக்குமாற்றை எடுத்துக் கொண்டு பெருக்குகிறதாம்! சுருட்டுப் பிடிக்கிறதாம்! துதிக்கையால் பூச்செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றுகிறதாம்! பென்சிலால் சித்திரம் வரைகிறதாம்!

இதெல்லாவற்றையும் காட்டிலும் ஆச்சரியம் என்னவெனில், கொடி போன்ற ஒரு பெண்ணிடம் அவ்வளவு பெரிய யானை அடங்கிக் கிடப்பதுதான்! மலை போன்ற அந்த யானை அந்தப் பெண்ணிடம் நாயைப் போல் சாதுவாக அடங்கிக் கிடக்கிறதாம்!

இவ்விதமெல்லாம் சர்க்கஸ் பார்க்க வந்த ஜனங்கள் பேசிக் கொண்டார்கள்.

திடீரென்று சர்க்கஸ் கூடாரத்துக்குள் பேச்சு சந்தடி ஓய்ந்து, மௌனம் நிலவியது.

ஒரு பிரம்மாண்டமான யானை உள்ளேயிருந்து கம்பீரமாக நடந்து வந்து, சர்க்கஸ் வட்டத்தில் நின்று விட்டது. அதன் மீது ஒரு வனதேவதை வீற்றிருந்தாள். அவளது வெண்மையான ஜரிகை உடைகள் விளக்கு வெளிச்சத்தில் பளபளவென்று மின்னிக் கொண்டிருந்தன. அவை சிற்சில சமயங்களில் மின்னலைப் போல் ஜனங்களின் கண்களைப் பறித்தன.

அசோகின் ஹிருதயம் படபடவென்று அடித்துக் கொண்டது.

யானைமீது உட்கார்ந்திருந்த தேவதை வேறு யாரும் இல்லை. அசோகின் அருமைக் கண்மணியான மும்தாஜ்தான்!

அசோக் தன்னையே மறந்தான்; உலகத்தையே மறந்தான். கண் இமை கொட்டாமல் மும்தாஜின் அழகையே பருகிக் கொண்டிருந்தான். அவள் நிர்ப்பயமாகவும் அலட்சியமாகவும் யானைமீது வீற்றிருந்த காட்சி அவன் மனத்துக்குப் போதையைக் கொடுத்தது. பயங்கரமான அந்த யானை அவளிடம் அவ்வளவு சாதுவாக இருக்கிறதே. ஒரு வேளை அது அவளைக் காதலிக்கிறதோ என்று கூட அசோகிற்குத் தோன்றியது!

இரண்டொரு சமயத்தில் அது மும்தாஜ் கூறியதைக் கேட்காமல் பிடிவாதம் பிடித்ததெனினும், அவள் கொடுத்த தண்டனை காரணமாக அது மறுபடியும் அவள் சொல்லுகிறபடி ஒழுங்காக நடந்து கொண்டது.

கடைசியாக அந்த யானை தன் துதிக்கையால் மும்தாஜைத் தூக்கியது. அவள் அதன் துதிக்கை நுனியில் கையை ஊன்றிக் கொண்டு,

கொடி போன்ற தன் உடலை வளைத்து அற்புதமான வித்தைகளைச் செய்து காட்டினாள்.

அதைக் கண்டு ஜனங்கள் பரவசம் அடைந்தனர். கரகோஷமும் சந்தோஷ ஆரவாரமும் வானைப் பிளந்தன.

அச்சமயம் மும்தாஜை யானை துதிக்கையால் பாம்பு போல் சுற்றிக் கொண்டது.

மீண்டும் கரகோஷமும் கூட்டத்தின் கோலாகல சப்தமும் விண்ணை முட்டின.

எனினும், அந்தப் பெரும் சந்தடிக்கு இடையே அசோகிற்கு மாத்திரம் ஒரு பெண்ணின் பயங்கர அலறல் கேட்டது.

சில விநாடி நேரத்தில் அசோக் உண்மையைத் தெரிந்து கொண்டான்.

யானை வித்தை செய்யவில்லை. அதற்கு மதம் பிடித்து விட்டது. அதன் விளைவாக அதன் துதிக்கையில் மும்தாஜ் அகப்பட்டுக் கொண்டு விட்டாள்; அது அவள் உடலை இறுக்கத் தொடங்கி விட்டது என்ற பயங்கர உண்மையை அசோக் அறிந்து கொண்டான்.

அவ்வளவுதான்! அசோக் பதறிப் போய் எழுந்து கூக்குரலிட்டான்.

"யானைக்கு மதம் பிடித்து விட்டது. அது மும்தாஜைக் கொன்றுவிடப் போகிறது. அவளைக் காப்பாற்றுங்கள்; அவளைக் காப்பாற்றுங்கள்" என்று உரக்கக் கத்தினான்.

உடனே ஜனங்களிடையே பெரும் அமளியும் குழப்பமும் உண்டாயின. ஜனங்கள் நடுங்கிப் போய் மூலைக்கு ஒருவராக ஓடினார்கள். ஒவ்வொருவரும் தங்களுக்கு ஆபத்து எதுவும் ஏற்படாமல் பாதுகாத்துக் கொள்ள முற்பட்டார்கள். யானையின் துதிக்கையிலே, மரணத்தின் வாயிலே அகப்பட்டுக் கொண்ட அழகியின் கதி என்ன என்பது பற்றி யாரும் கவலைப்படவில்லை. ஒரு நிமிஷத்துக்குள் கூடாரம் எங்கும் சந்தடியும் கூக்குரலும் ஏற்பட்டு, நிலைமை அல்லோலகல்லோல மாகியது.

ஜனங்கள் அலறிக் கொண்டும் நெருக்கிக் கொண்டும் வெளியே ஓடினார்கள். வெகு சீக்கிரத்தில் சர்க்கஸ் கூடாரம் காலியாகியது.

ஆனால், யானையின் வெறி நடனம் நிற்கவில்லை. அப்போது மும்தாஜ் வாயிலிருந்து எத்தகைய சப்தமும் வரவில்லை. சப்தம் ஓய்ந்து விட்டது. அவளது தலையும் கைகால்களும் தொங்கி விட்டன.

சர்க்கஸ் சொந்தக்காரர், மானேஜர் உள்பட சர்க்கஸ் சிப்பந்திகள் யாவரும் அங்கு கூடி விட்டனர். யானை தப்பிச் சென்றுவிடாமல் பூட்டிவிட்டார்கள். எனினும், அதன் பிடியிலிருந்து மும்தாஜை மீட்கும் வழி என்ன என்று யாருக்கும் தோன்றவில்லை. ஒவ்வொருவரும் அதைக் கண்டு பேச்சு மூச்சின்றி அசைவற்றுப் பிரமித்துப் போய் நின்றனர்.

அசோக் சர்க்கஸ் சொந்தக்காரருக்கு அருகில் போய், "ஏன், பேசாமல் நின்று கொண்டிருக்கிறீர்கள்! இந்த ஆபத்தைத் தவிர்க்க யானையைக் கொல்லுவதைத் தவிர வேறு வழியில்லை. தயவு செய்து ஒரு துப்பாக்கியைக் கொண்டு வாருங்கள். நானே அதைச் சுட்டுக் கொன்று விடுகிறேன்" என்று கத்தினான்.

உடனே மானேஜர் துப்பாக்கியை எடுத்து வருவதற்காக ஓட முற்படவே, அவரைச் சர்க்கஸ் சொந்தக்காரர் பிடித்து, "மடத்தனமாக எதுவும் செய்துவிடாதே. இந்த யானையின் விலை உனக்குத் தெரியுமா! இதை நான் ரூ. 25,000-க்கு வாங்கினேன். கேவலம் இந்தப் பெண்ணுக்காக நான் அவ்வளவு பெரிய தொகையை இழப்பதா!" என்று கூறினார்.

ஜனங்களிடையே அமைதியைப் பாதுகாப்பதற்காகக் கூடாரத்துக்குள் இருந்த மூன்று, நாலு போலீஸ்காரர்களுக்கும் என்ன செய்வதென்று தெரியவில்லை. அவர்கள் அச்சம்பவத்தைப் போலீஸ் சூபரிண்டெண்டிடம் தெரிவிப்பதற்காக ஓடினார்கள். யானையைக் கொல்லுவதாயின், அதற்குப் போலீஸ் சூபரிண்டெண்டின் உத்தரவு வேண்டும்!

• • •

சமீர் வீட்டில் ஏதோ எழுதிக் கொண்டிருந்தான். சர்க்கஸுக்குச் சென்றிருந்த அவனது அண்டை வீட்டுக்காரன் ஓடோடியும் வந்து, அவனிடம் சர்க்கஸில் ஏற்பட்ட விபரீத சம்பவத்தைப் பற்றிக் கூறினான்.

அதற்கு சமீர் யாதொரு பதிலும் கூறவில்லை. உடனே அவன் தன் துப்பாக்கியை எடுத்துத் தோளில் வைத்துக் கொண்டான். சைக்கிளில் வெகு வேகமாகச் சர்க்கஸ் கூடாரத்தை நோக்கிச் சென்றான்.

கூடாரத்துக்கு வெளியில் சர்க்கஸ் சிப்பந்திகள் நின்று கொண்டு, மேற்கொண்டு என்ன செய்வதென்று அறியாது விழித்துக் கொண்டிருந்தார்கள்.

அமைதிக்குப் பங்கம் எதுவும் ஏற்பட்டு விடாமல் நாலு போலீஸ்காரர்கள் காவல் புரிந்து கொண்டிருந்தனர்.

சமீர் சர்க்கஸ் கூடாரத்துக்கு வெளியில் சைக்கிளை வைத்து விட்டு உள்ளே பரபரப்புடன் ஓடினான். அப்போதும் யானை மும்தாஜைத் தூக்கிய வண்ணம் ஆக்ரோஷத்துடன் நின்று கொண்டிருந்தது. அந்தப் பெண்ணின் அசைவற்ற உடல் யானையின் துதிக்கையால் சுற்றப்பட்டிருந்தது.

அந்த நிலையில் மும்தாஜின் மேலே காயம் படாமல் யானையை எளிதில் சுட்டு விடலாம் என்பதை சமீர் உணர்ந்தான். உடனே அவன் தன் துப்பாக்கியை எடுத்து, யானையைக் குறி பார்க்கத் தொடங்கினான். அதே சமயம் அங்கிருந்த நாலு போலீஸ்காரர்களும் ஏக காலத்தில் அவன் மீது பாய்ந்தனர். அவன் வைத்திருந்த துப்பாக்கியைப் பிடுங்கி, அவனைக் கைது செய்தனர்.

சமீர் ஒன்றும் புரியாமல் அப்படியே திகைத்துப் போய்விட்டான். ஓர் உயிரைக் காப்பாற்ற முற்பட்ட தன் நண்பன் சமீரை விடுதலை செய்யும்படி அசோக் வேண்டிக் கொண்டதைப் போலீசார் லட்சியம் செய்யவில்லை.

"போலீஸ் சூபரிண்டெண்டின் உத்தரவின்றி விலையுயர்ந்த இந்த யானையை எவரும் கொல்லக் கூடாது. தவிர, யானையைச் சுடுவதற்குக் கட்டணம் கட்டி விசேஷ லைசென்ஸ் எடுத்திருக்க வேண்டும்" என்று போலீஸ்காரர்கள் தங்கள் செய்கைக்கு விளக்கம் கூறினர்.

இதைக் கேட்டதும் சர்க்கஸ் சொந்தக்காரருக்கு மகிழ்ச்சி தாங்க முடியவில்லை.

"அட பாவி! இவனைத்தானா, 'என்னைச் சர்க்கஸ் சொந்தக்காரர் தன் மகளைப் போல் நடத்தி வருகிறார்' என்று மும்தாஜ் வர்ணித்தாள்!" என்று அரற்றினான் அசோக்.

# உங்களுக்குத் தேவை




## பாண்டியன் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்

# நெருப்பு - கப்பல் - விபத்து

இன்ஷ்யூரன்ஸ்களுக்கு

ஆஸ்திகள் : ரூ. 1 கோடிக்கு மேல்

தலைமைக் காரியாலயம் : பாண்டியன் பில்டிங் : மதுரை

கிளைகள் : பம்பாய், கல்கத்தா, டெல்லி, சென்னை, நாகபுரி, ஷோலாப்பூர், பெங்களூர், திருவனந்தபுரம், கோயம்புத்தூர், கொச்சி

1

---

# ஜாம்-பெக்கினால் அந்த விஷக்காயம், ரணம் அல்லது கட்டியை குணப்படுத்துங்கள்



# Zam-Buk

ஜாம்-பெக் உலகின் மகோன்னதமான சரும நோயாற்றும் களிம்பு. ஜாம்-பெக் சமனமூட்டி விஷத்தை அகற்றி துரிதமாக வேலை செய்கிறது. காயங்களிலிருந்து விஷத்தை ஜாம்-பெக் வெளியே இழுத்து எரிச்சலைக் குறைத்து சீ ஒழுக்கை நிறுத்தி, துரிதமாக சருமத்திற்கு ஆரோக்கியம் அளிக்கின்றது. தேமல் முதலிய சரும நோய்களை நீக்குவதிலும், பூச்சிக்கடி விஷத்தை சுத்தப்படுத்துவதிலும். வலியுடன் சோர்வுற்று கொப்புளித்த கால்களுக்கு இதமளித்து குணமாக்குவதிலும் இதன் சக்தி அற்புதமானது. இதரமதிப்பு வாய்ந்த ஔஷதப் பொருள்களுடன் கூட ஜாம்-பெக்கின் க்ளோரோபிலும் அதன் நோயாற்றும் குணம், நசைநார் போஷாக்கு மற்றும் இதர குணங்களுடன் சேர்க்கப்பட்டுள்ளது.




மிருகக் கொழுப்பு சேரவில்லை என்பதற்கு உத்திரவாதம்.

ஜாம்-பெக்கினால் குணம் பெறுவீர்கள்.

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

FZY-36 TAM.

மதராஸிற்கு ஸோல் ஏஜெண்கள் : தாதா & கம்பெனி, பார்க் டவுன்

# வேலை வேணுமா?

கோணல்

குருநாதன் ஊரிலேயே கொஞ்சம் பெரிய மனித சகவாசம் உள்ளவர். வயிறு பசிக்காமல் சாப்பிடுவதற்கும், உடை உடுத்திக் கொள்ளவும் கொஞ்சம் சொத்து இருந்தது. ஊரில் பெரிய வீடு இருந்தது. எப்படியோ கவலை இல்லாமல் காலம் தள்ளும் ஆத்மா. அவரும், தயாளா பாங்கி டைரக்டரைத் தெரியும், திரௌபதி மில்ஸ் முதலாளியைத் தெரியும், லங்கா பஸ் சர்வீஸ் மானேஜரைத் தெரியும், கோமளேஸ்வரா டிராமஸ் நிர்வாகஸ்தரைத் தெரியும், இன்னும் எத்தனை எத்தனையோ பெரிய மனிதர்களை யெல்லாம் தெரியும் என்று சொல்லிக் கொள்வார்.

பெரிய மனிதர்களின் நட்பு எத்தனையோ பேருக்கு இருக்கலாம். ஆனால் எல்லாருமே கருணையுள்ளவர்களாகவோ உபகார சிந்தையுள்ளவர்களாகவோ இருப்பார்கள் என்று சொல்லிவிட முடியுமா! குருநாதன் அப்படி யல்ல. எல்லோரிடமும் கருணை யுள்ளவர். முக்கியமாக வேலை இல்லாததின் காரணமாக இந்தக் காலத்தில் எத்தனை வாலிபர்கள் திண்டாடுகிறார்கள்! அத்தகைய வாலிபர்களிடமெல்லாம் குருநாதனுக்கு மிகுந்த சிரத்தையும் கருணையும் உண்டு. தன் குறையைச் சொல்லிக் கொண்டாலும் அனுதாபத்தோடும் சிரத்தையோடும் கேட்டு அவர்களுக்கு எங்கேயாவது ஒரு நல்ல உத்தியோகம் நிச்சயம் வாங்கிக் கொடுத்து விடுவதாக நம்பிக்கையோடு சொல்லும் தயாள சிந்தை அவரிடம் இருந்தது. இப்படி ஒரு உத்தம புருஷரைக் கண்டால் வாலிபர்கள் விடுவார்களா!

ஒவ்வொரு நாளும் காலை மாலை என்று சாயங்திரம் வரையில் அவர் வீட்டுக்கு ஒருவர் பின் ஒருவராக வந்து கொண்டுதா னிருப்பார்கள். பாவம்! குருநாதனைப் போல் அவர் மனைவி கங்காதேவியும் கருணை மனம் படைத்தவள். தங்கள் வீட்டுக்கு அடிக்கடி வந்து அலையும் வாலிபர்களைக் கண்டு அவள் உள்ளம் உருகித்தான் ஓடும். இந்தத் தம்பதிகளின் ஒற்றுமையையும் உருக்கத்தையும் கண்டு பிரமிப்படையத்தான் நேரும்.

காலையில் படுக்கையிலிருந்து எழுந்து பல் தேய்ப்பதற்குத் தோட்டத்துப் பக்கம் போகலாமா என்று யோசிப்பவர் போல் உட்கார்ந்திருந்தார் குருநாதன். அப்பொழுதுதான் கணேசன் மிகவும் பவ்யமாக அவர் எதிரில் வந்து நின்றான். "என்னப்பா...கணேசா! என்ன சமாசாரம்!" என்று கேட்டார் மிகுந்த அனுதாபத்தோடு.

அந்தச் சமயத்தில்தான் அவருடைய மனைவியும் அங்கு வந்து சேர்ந்தாள். "என்னன்னு அவனைக் கேட்டால்! ......... பாவம்! இவ்வளவு படிப்பு படிச்சிட்டு இந்தக் குழந்தைகளெல்லாம் இப்படி வேலைக்காகத் திண்டாடுறதைப் பார்த்தால்தான் படாத பாடுபடுறது என்னுடைய மனசு!" என்றாள் மிகுந்த உருக்கத்தோடு கங்காதேவி.

"உன் மனசுதான் அப்படி இருக்கிறதோ! என் மனசு என்ன வேதனைப்படுகிறது, தெரியுமா! அதுவும் நம்ம கணேசனுக்கு இன்னும் நாம் ஒரு வேலையும் தேடிக் கொடுக்க வில்லையே என்பதை நினைத்து விட்டால் இவ்வளவு பெரிய மனுஷாளோடெல்லாம் பழகும் நானும் ஒரு பெரிய மனுஷனன்னுதான் எனக்குத் தோன்றுகிறது......"

"உங்களுக்கு இருக்காதுன்னு யார் சொன்னது! உங்களுக்குத்தான் ஒருவர் வேலை இல்லாமல் கஷ்டப்படுவதைப் பார்த்தால் மனசு தாங்காதே. நீங்கள் எப்பாடு பட்டாவது இந்தப் பிள்ளையாண்டானுக்கு ஒரு உத்தியோகம் வாங்கிக் கொடுத்தால்தான் என் மனசு நிம்மதிப்படும்" என்றாள் கங்காதேவி.

"மறுபடியும் பார்த்தாயா, உனக்கு மாத்திரம்தானா அப்படி! இவனுக்கு எப்படியாவது ஒரு வேலை தேடித் தராவிட்டால் எனக்குச் சரியான சாப்பாடு, தூக்கம் இருக்குமா! நானும்தான் எவ்வளவோ முயற்சி செய்து கொண்டிருக்கிறேன்" என்றார்.

"நீங்கள்கூட நேற்றைக்குத் தயாளா பாங்கு டைரக்டரைப் பார்க்கிறேன் என்று சொன்னீர்கள்..." என்றான் கணேசன் மெதுவாக.

"ஆமாம். அவரை நான் பார்க்காமல் இருப்பேனா! பார்க்கத்தான் போனேன். அந்தச் சமயம் அவர் திருவனந்தபுரத்துக்கு ஒரு



'பார்ட்டி'க்காகப் போய்விட்டாராம். பெரிய மனுஷாளைச் சந்தர்ப்பம் பார்த்துன்னா நெருங்க வேண்டியிருக்கு. அவாளுக்கு ஆயிரம் ஜோலி."

"ஆமாம், ஸார்!" என்றான் கணேசன்.

"நிச்சயம் பாங்கியிலே உனக்கு ஒரு ஏற்பாடு செய்து விடுகிறேன். பயப்படாதே! சரி, மெதுவாகத் தோட்டத்துப் பக்கம் போய்க் கிணற்றங்கரையிலே பெரிய வாளி இருக்கு. அதுலே ஒரு வாளி தண்ணீர் இழுத்து வை. இதோ நான் வந்து விட்டேன்" என்றார் குருநாதன்.

"ஆகட்டும், ஸார்!" என்றான் கணேசன்.

"ஐயோ பாவம்! அந்தக் குழந்தையை ஏன் வேலை வாங்குகிறீர்கள்!" என்றாள் மன இரக்கம் கொண்டவள் போல் கங்காதேவி.

"இது வேலை வாங்குகிறதாக அர்த்தமா! ஏதோ உதவிதானே. நான் ஏதோ வேலை வாங்குகிறதாக நினைக்கக் கூடிய பையனாய் இருந்தால் நான் சொல்லவே மாட்டேனே ...!"

"உங்களைப் போல இருக்கிற நல்ல மனுஷாளுக்கு ஒரு காரியம் செய்யறத்திலே என்ன தப்பு ஸார்! நீங்கள் எனக்கு அன்போடு இவ்வளவு உபகாரம் செய்யக் காத்திருக்கும் போது...!" என்று சொல்லி விட்டுக் கணேசன் தோட்டத்துப் பக்கம் சென்றான்.

"இந்த மாதிரி தங்கமான குழந்தைகள்தான் அதிர்ஷ்டமில்லாமல் தவிக்கிறதுகள்" என்று அனுதாபப்பட்டுக் கொண்டே உள்ளே சென்றாள் கங்காதேவி.

தோட்டத்துக் கிணற்றில் பெரிய வாளியில் தண்ணீர் இழுத்துக் தயாராய் வைத்திருந்தான் கணேசன். குருநாதன் அங்கு வந்ததும், "அடடே! மறந்தே போய் விட்டேனே. தாழ்வாரத்து அலமாரியில் மேல் தட்டில் பிரஷ்ஷும் பல் பசையும் வைத்திருக்கிறேன். அதை எடுத்துக் கொண்டு அப்படியே ஒரு டவல் கிடக்கிறது. அதையும் எடுத்துக் கொண்டு வந்து விடேன்" என்றார். கணேசன் அவர் சொற்படியே எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு வந்து கொடுத்தான்.



குருநாதன் பல் தேய்த்து முகம் கை கால்கள் கழுவிக் கொண்ட பின், "நீ அவசரமாக வீட்டுக்குப் போகணுமோ!" என்றார் கணேசனைப் பார்த்து.

"இல்லை, ஸார்! ஏதேனும் காரியம் இருக்கிறதா!" என்றான் கணேசன் பணிவோடு.

"அப்படி ஒன்றும் பிரமாதக் காரியமில்லை; தோட்டத்திலே செடிகளுக் கெல்லாம் ஒரு நாலு வாளி ஜலம் இழுத்துக் கொட்டணும். அதற்கப்புறம் தெருக் கோடிக் கடைக்குப் போய் ஒரு சோப்பு வாங்கிக் கொண்டு வரவேணும், துணிக்குப் போடுவதற்கு. அவ்வளவுதான்" என்றார் குருநாதன்.

"ஆகட்டும், ஸார்!" என்று சுருக்கமாகச் சொல்லி விட்டுத் தோட்டத்துக்கு நீர் பாய்ச்சத் தயாரானான் கணேசன். குருநாதன் காப்பி சாப்பிடுவதற்காக உள்ளே சென்றார்.

கணேசன் தோட்ட வேலையை முடித்துக் கொண்டு குருநாதனிடமிருந்து இரண்டணா சில்லறையை வாங்கிக் கொண்டு போய் சோப்பு வாங்கிக் கொண்டு வந்தபோது குருநாதனுக்கு எதிரில் பணிவோடு வேறொரு வாலிபன் நிற்பதைப் பார்த்தான். பாவம்! அவனும் தன்னைப்போல் வேலைக்காக அலைபவன் என்று அவன் முகத்தில் எழுதி ஒட்டியிருந்ததுபோல் அவனுக்குத் தெரிந்தது.

"சரி! நீ போகலாம். நாளைக் காலை சரியாக ஒன்பது மணிக்கு வந்துவிடு. எப்படியும் இன்று சாயந்திரம் அவரைப் பார்த்துச் சமயம் வாய்த்தால் விஷயத்தைத் தெரிந்து கொண்டு விடுவேன். கூடிய சீக்கிரம் முடிந்துவிடும். கவலைப் படாதே" என்று கணேசனுக்கு விடை கொடுத்து அனுப்பினார்.

கணேசன் சென்றதும் தன் எதிரில் நின்று கொண்டிருந்த தண்டபாணியைப் பார்த்து, "இவனும் உன்னைப்போல வேலைக்காகத்தான் அலைகிறான். இவனுக்குத் தயாளா பாங்கியிலே ஏற்பாடு செய்யப் போகிறேன். என்ன இருந்தாலும் இவனுக்கு உன்னைப் போல அவ்வளவு சுட்டிகை போறாது. கொஞ்சம் அசடு. காலையிலே இவனை அனுப்பி இரண்டு எடை விறகு வாங்கிக் கொண்டு வரச் சொல்லுங்கோன்னு சொன்னா அவள். நான் அவனுக்கு அவ்வளவு சாமர்த்தியம் போதாது, தண்டபாணி வரட்டும்னு சொன்னேன், உன்னைப் போல சில பையன்களுக்குத்தான் வெட்டிண்டு வான்னா கட்டிண்டு வர சாமர்த்தியம் உண்டு" என்றார் குருநாதன்.

"இதென்ன ஸார் பிரமாதம். போய் வாங்கிக் கொண்டு வருகிறேன், ஸார்!" என்றான் தண்டபாணி. இந்தச் சமயத்தில் அங்குதெய்வாதீனமாக வருகிறவள் போல் வந்த கங்காதேவி, "ஐயோ பாவம்! இப்படிப்பட்ட குழந்தைகளையெல்லாம் விறகு வாங்கவும் யாராவது அனுப்புவாளா ......!" என்று அங்கலாய்த்துக் கொண்டாள்.

"இதென்ன பிரமாதம்! நான் இதிலெல்லாம் வித்தியாசம் பார்க்கவே மாட்டேன். எங்க வீட்டுக்குன்னு நான் போய் வாங்கிக் கொண்டு வரமாட்டேனா! மனுஷ்யாளுக்கு உபகாரம் செய்யத்தானே இருக்கோம்......" என்றான் தண்டபாணி.

"ஐயோ பாவம்! என்ன தங்கமான குணம்! இந்தமாதிரி பிள்ளைகளுக்குத்தான் இந்தப் பாழாய்ப் போன உலகத்திலே ஒரு வேலை கிடைக்க மாட்டேங்கிறதே......!" என்றாள் கங்காதேவி, ஒரு அனுதாபமும் ஆயாசமும் கொண்ட பெருமூச்சுடன்.

"கிடைக்காமல் போய் விடுமோ! தானே கிடைக்கும்படி செய்கிறேன், பார்! நான்...அது சரி, இந்த விறகுக் கடையிலே விறகு தூக்குகிறதற்கு ஆள் இல்லையே! இரண்டு எடையாச்சே! இவனால் தூக்க முடியுமா.......!"

"அதைத்தான் நானும் யோசிக்கிறேன். இரண்டு எடை விறகென்றால் கஷ்டம்தான். வேண்டுமானால் இரண்டு நடையாய்......" என்றாள் கங்காதேவி.

"இரண்டு நடை எதற்கு, சார். ஒரே நடையில் கொண்டு வந்துவிடுவேன், ஸார். இப்படி இருக்கேனே என்று நினைக்காதிங்கோ. 'வெயிட் லிப்டி'லே சேர்ந்தாற் போல ஆறு மணு தூக்கி இருக்கேன், ஸார்" என்றான் தண்டபாணி.

"நீ படுசூரனாய் இருப்பே போலிருக்கிறதே. மகா சாமர்த்தியசாலியப்பா நீ. உனக்கு நிச்சயம் பஸ் சர்வீஸிலே வேலை கிடைத்துத்தான் தீரும். கவலைப்படாதே" என்றார் குருநாதன்.

"வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க்கு அழுறப்பிலே இத்தனை நாளாகத் தவிச்சோமே!

கொல்லைத்தாழ்வாரத்தில் இருக்கிற கல் உரலைச் சமையலறையில் கொண்டு வந்து போடச் சரியான மனுஷ்யாள் கிடைக்காமல்...'' என்று இடையே எதையோ ஞாபகப் படுத்துவது போல் சொல்லி வைத்தாள் கங்காதேவி.

''ஆமாம், மறந்தே போச்சு. கொல்லைத் தாழ்வாரத்திலே இருக்கும் கல் உரலை மெதுவாகத் தூக்கிக் கொண்டு வந்து சமையலறையிலே போட்டுடணும். கொஞ்சம் அதையும் செய்துட்டா நல்லது......'' என்றார் குருநாதன் தண்டபாணியைப் பார்த்து.



''அதற்கென்ன ஸார். முதலில் விறகுக் கடைக்குப் போய் விட்டு வந்து செய்து விடுகிறேன்'' என்று விறகு வாங்குவதற்குப் பணம் வாங்கிக் கொண்டு சென்றான் தண்டபாணி.

தண்டபாணி சென்ற இரண்டு நிமிடங்களுக்கெல்லாம் கல்யாணம் வந்தான். அவன் உள்ளூரில் நடக்கும் சினிமாத் தியேட்டரில் தனக்கு எப்படியாவது ஒரு வேலை வாங்கிக் கொடுக்கும்படி சதா மிஸ்டர் குருநாதனை வேண்டிக் கொண்டிருந்தான்.

''என்னப்பா, கல்யாணம்! வா. நேற்றுத் தான் சிதம்பர டாக்கீஸ் மானேஜரை உனக்காகப் பார்த்தேன். ரொம்ப நல்ல மனிதர். உன்னைப் பற்றி ரொம்ப அவரிடம் சொல்லி வைத்திருக்கிறேன். ரொம்ப சிரத்தையாகக் கேட்டார். இந்தத் தியேட்டரில் வேலை ஒன்றும் காலி இல்லையாம். கூடிய சீக்கிரம் குற்றாலத்திலேயே பெரிய தியேட்டர் ஒன்று கட்டப் போகிறார்களாம். அதிலே வேண்டுமானால் உன்னை மானேஜராய்ப்போட ஏற்பாடு செய்யறேன்னு சொன்னார். அவர் சொன்னால் நிச்சயம் செய்து விடுவார்.''

''பெரிய மானேஜர் வேலை யெல்லாம் ஒன்றும் வேண்டாம், ஸார். சாதாரணமாய் புக்கிங்கிலே போட்டால்கூடப் போதும், ஸார்!''

''அட பயித்தியமே, பெரிய வேலையாகக் கொடுத்தால்கூட வேண்டாம்னு சொல்லுவே போலிருக்கே. நான் ஒருவருக்காகச் சிபார்சு செய்யப் போனால் அவர் எதிர்பார்க்கிறதைவிட உயர்வாகத்தான் கிடைக்கும். நான் என்ன சாதாரணமா! பயப்படாதே, சும்மா மானேஜராகவே இரு!''

''சரி, ஸார்! எப்போ ஸார் வேலை கிடைக்கும்!'' என்றான் கல்யாணம்.

''அடடே, இப்படி அவசரப் பட்டால் முடியுமா! முதலில் அவர்கள் தியேட்டர் கட்டியாகணும். அப்புறம் ஒரு நல்ல நாளில் ஏதாவது படத்தைப் போட்டு ஓட்ட ஆரம்பிக்கணும். எத்தனை இருக்கிறது! எல்லாவற்றுக்கும் நீ மாத்திரம் தவறாமல் என்னை வந்து பார்த்துக் கொண்டிரு. ஏனென்றால் நான் மறந்து போய் விடுவேன்'' என்று சொல்லிக் கொண்டிருக்கும்போது அவர் மனைவி சமையலறையிலிருந்து வெளியே வந்தாள். பிறகு கல்யாணத்தைப் பார்த்து மனம் உருகியவளாய் ''பாவம்! இந்தக் குழந்தை வந்திருக்கானு! இவனுக்குக் கூட ஒரு நல்ல இடத்திலே வேலை கிடைக்காததுதான் எனக்குப் பெரிய வேதனையாய் இருக்கிறது. எத்தனை நாள் குழந்தை இப்படி வந்து அலையும்!'' என்றாள்.

''கஷ்டம்தான். ஆனால் எவ்வளவுக்கெவ்வளவு கஷ்டமிருக்கோ அவ்வளவுக்கவ்வளவு சுகமும் பின்னாலே இருக்கு. கூடிய சீக்கிரம் இவன் ஒரு பெரிய சினிமாத் தியேட்டருக்கு மானேஜராகப் போகிறான், பாரு. அப்பொழுதெல்லாம் நாம் சினிமாவுக்குக் காசு கொடுத்தே போக வேண்டாம். அதிர்ஷ்டக்காரன் தான். அதிருக்கட்டும், ஏதோ காய்கறி வாங்கணும், மார்க்கட்டுக்குப் போகணும்னு சொன்னாயே!'' என்றார்.

''ஆமாம், உங்களாலே அலைய முடியுமா!'' என்றாள் கங்காதேவி.

''அலைய முடியாதுதான். அதனாலேதான் நம்ம கல்யாணத்தை அனுப்பலாமான்னு யோசிக்கிறேன்!''

''உங்களுக்குத் துளிக்கூட ஈவு இரக்கம் இல்லை. பாவம்! எதற்கோ வந்த குழந்தையை இப்படி வேலை ஏவினால்!...''

''அதுவும் சரிதான். கொஞ்சம் சிரமமாய் இருந்தாலும் நானே போய் வாங்கிக்கொண்டு வந்து விடுகிறேன்'' என்றார் குருநாதன்.

# இரவிலும் பகலிலும் இவ்வாச்சரியப் பாதுகாப்பு சாதனத்தால்

# உங்கள் சருமத்தை அழகாயும் நேர்த்தியாகவும் வைத்துக் கொள்ளுங்கள்

செழுமையான பாண்ட்ஸ் கோல்டு க்ரீம் மற்றும் பனியைப் போன்ற பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உங்கள் சருமத்தை பாதுகாத்து அதை மிருதுவாயும் அழகாயும் வைக்கின்றன.



**மிருதுத்தன்மையும் சுத்தத்தையு மளிக்க ஒரு இராக்கால க்ரீம்**

நீங்கள் படுக்கப் போகுமுன் செழுமையான பாண்ட்ஸ் கோல்டு க்ரீம் உபயோகிக்கவும். சில செகண்டுகளில் இது உங்கள் சருமத்திற்கு புத்துணர்ச்சியைக் கொடுக்கிறது—இயற்கையான எண்ணெய்ச்சத்து அளித்து வறட்சியை அகற்றி உங்கள் சருமத்தின் யௌவனத்தையும் வனப்பையும் நிலைக்கச் செய்கிறது.

பாண்ட்ஸ் கோல்டு க்ரீம் ஒரு ஆச்சரியமான சுத்திகரிப்பு சாதனமென்பதை நினைவில் வைத்துக் கொள்ளவும். உங்கள் சருமத்திலுள்ள கண்ணுக்குத்தென்படாத துவாரங்கள் பெரிதாகாமல் தடுத்து உங்கள் சருமத்தை களங்கமற்றும் அழகுடனுமிருக்கச்செய்கிறது.








**பாதுகாப்பிற்கும், சௌந்தர்யத்திற்காகவும் ஒரு பகல் நேர க்ரீம்**

பனியைப்போன்ற பிரகாசமான வானிஷிங் க்ரீமின் ஒரு நேர்த்தியான சன்னப்பூச்சு பகல் நேரத்தில் உங்கள் சௌந்தர்யத்தை அதிகப்படுத்துகிறது. இதன் சாதகமான பாதுகாப்புத்தன்மை, வனப்புள்ள சருமத்தின் வைரியான தூசி, வெயில் மற்றும் வறட்சிக் காற்று முதலியவற்றின் தாக்குதலிலிருந்து காப்பாற்றுகின்றது. அளவுக்குமிஞ்சிய எண்ணெய்ச்சத்து சருமத்தின் துவாரத்தில் படிந்து கெடுதலைத்தரும். இவ்விதம் அதிக எண்ணெய் வழியும் சருமத்திற்கு, பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் ஒரு குணமளிக்கும் ஆச்சரிய சாதனம்.

# பாண்ட்ஸ்

## கோல்டு க்ரீம்

## வானிஷிங் க்ரீம்

அழகிய மங்கையர் எங்கிருப்பவர்களாயினும் தங்கள் சௌந்தர்யத்திற்கு இச்சுலபமான இருவிதப் பாதுகாப்பையே நம்பியுள்ளனர். அவர்கள் உதாரணத்தையே நீங்களும் பின்பற்றுங்கள்—இரவில் பாண்ட்ஸ் கோல்டு க்ரீமையும் பகலில் பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமையும் உபயோகியுங்கள். உங்கள் பிரகாசமான—அழகிய வதனத்தைக்கண்டு நீங்களே குதூகலமடைவீர்கள்.

P. 1348

"நீங்கள் சிரமப்பட வேண்டாம் ஸார்! உங்களுக்கு என்ன வேணும்! நான் போய் வாங்கிக் கொண்டு வருகிறேன். இதுகூடச் செய்யாவிட்டால் அப்புறம் என்ன ஸார்!" என்றான் கல்யாணம்.

"நல்ல வெண்டைக்காயாய் ஒரு கட்டு வாங்கிக்கோ. பூச்சி புழு இருக்கக் கூடாது. முத்தினதாய் இருக்கக் கூடாது. அது ஒரு கட்டு ஓரணா இருக்கும். கட்டிலே இருபத்தைந்து காய் இருக்கணும். அதோடு ஒரு சேர் நல்ல பங்களூர் தக்காளிப் பழம் — சிவப்பா இருக்கணும், வாங்கிக்கோ. அது தெருவில் சேர் ஒண்ணே காலணா விற்கிறது. மார்க்கெட்டில் ஓரணாத்தான் இருக்கும். அப்படியே அரையணாவுக்குக் கொத்தமல்லி கருவேப்பிலை வாங்கிக்கோ. இரண்டு பச்சை மிளகாய் கொசுரு கேட்டால் கொடுப்பான். தெரிஞ்சுதா, எங்கே சாமர்த்தியமாய் வாங்கிக் கொண்டுவா, பார்ப்போம்!" என்று சொல்லி இரண்டரையணாவைக் கல்யாணத்தினிடம் கொடுத்தார்.

கல்யாணம் சென்ற சில நிமிடங்களுக்கெல்லாம் தண்டபாணி இரண்டு எடை விறகைச் சுமக்க மாட்டாதவனாகச் சுமந்து கொண்டு வந்து போட்டான்.

"ஐயோ, பாவம்! ரொம்ப சிரமமாய் இருக்குமே! கொஞ்ச நாழிகை உட்கார்ந்து களைப்பாறு. அப்புறம் கொல்லைப்புறத்திலிருக்கிற கல் உரலை எடுத்துக் கொண்டு வரலாம்!" என்றார் குருநாதன்.

"ஒரு களைப்பும் இல்லே சார்! அதையும் இப்பொழுதே கொண்டு வந்து போட்டு விடுகிறேன் ஸார்!" என்றான் தண்டபாணி, தன்னுடைய சிரமத்தைக் காட்டிக் கொள்ளப் பிரியப்படாதவனாக.

"நீ படுசூரனாச்சே, ஒரு வேலைன்னு சொன்னா செய்துட்டுத்தானே உட்காருவே. உனக்கு பஸ் சர்வீஸிலே வேலை கிடைக்காவிட்டாலும் லாரி சர்வீஸிலேயாவது கட்டாயம் வேலை சம்பாதித்துக் கொடுத்து விடுகிறேன், அப்பா!" என்றார் குருநாதன்.

"உங்கள் தயவு இருந்தால் எது நடக்காது ஸார்!" என்று சொல்லி விட்டுக் கொல்லைப் புறத்திலிருக்கும் உரலைத் தூக்கிக் கொண்டு வருவதற்காகப் போனான் தண்டபாணி.

ரங்கமணி பி. ஏ. படித்து விட்டு இரண்டு வருடமாய் வேலைக்கு முயற்சி செய்து கொண்டிருந்தான். குருநாதனிடம் நம்பிக்கை வைத்துள்ள வாலிபர்களில் அவனும் ஒருவன். குருநாதன் அவனை அன்று பத்து மணிக்கு வந்து பார்க்கச் சொல்லி இருந்தான். அவர் சொல்லிய வேளைக்குத் தவறாமல் வந்து பார்க்கும் சுபாவம் உள்ளவன் அவன். அவனுக்கு ஒரு இடத்தில் முயற்சி செய்யாமல் பல இடங்களிலும் முயற்சி செய்து கொண்டிருப்பதாகச் சொல்லிக் கொண்டிருந்தார் குருநாதன்.

"நமஸ்காரம், ஸார்" என்று சொல்லிக் கொண்டே வந்தான் ரங்கமணி.

"ரங்கமணியா, வாப்பா. உனக்காக எவ்வளவு இடம் பார்த்துக்கொண்டிருக்கிறேன், தெரியுமா! சந்தர்ப்பம் சரிப்பட வேண்டாமா! நேற்றுக் கூட நீலகண்ட முதலியாரைப் பார்த்து உங்க எஸ்டேட்டிலேயாவது ஒரு உத்தியோகம் கொடுங்களேன்னு கேட்டேன். கூடிய சீக்கிரம் பார்க்கிறேன்னு சொன்னார். நாளைக்குக் கூட சர்வேஸ்வரா ஸ்டீல் ஒர்க்ஸ் மானேஜரை ஒரு முக்கிய காரியமாகப் பார்க்கப் போகிறேன். அவர் என் வார்த்தையைத் தட்ட மாட்டார்......" என்று சொல்லிக்கொண்டிருக்கும் போதே சமையலறையிலிருந்து குழந்தை வீறிட்டுக் கத்தியது. குருநாதனின் மனைவி குழந்தைக்கு ஏதோ சமாதானம் சொல்லிக் கொண்டிருந்தாள்.

"ஏன் குழந்தை இப்படி அலறுகிறது......!" என்று ஒரு குரல் கொடுத்தார் குருநாதன்.

"இந்த க்ஷணம் வாசலுக்கு எடுத்துக் கொண்டு போய் ஏதாவது வேடிக்கை காட்டிக் கொண்டிருன்னு கத்துகிறது. குழந்தையைத் தூக்கி வைத்துக்கொண்டு வாசலில் போய் நிற்க எனக்கு இதுவா சமயம்! நான் சமையலைக் கவனிப்பேனா, இதைக் கவனிப்பேனா!" என்று சொல்லிக்கொண்டே குழந்தையைக் குருநாதனின் மடியில் உட்கார்த்தி வைத்து விட்டு உள்ளே சென்றாள் அவர் தர்மபத்தினி.

குழந்தை தகப்பனாரின் சமாதானங்களுக்கும் அடங்காமல் கத்தியது. "ரங்கமணி! நீதான் கொஞ்சம் குழந்தையை வாசலில் எடுத்துக் கொண்டுபோய்க் கொஞ்ச நேரம் எதையாவது காட்டிச் சமாதானம் செய்துகொண்டிரேன். நான் கொஞ்சம் கிணற்றடிப் பக்கம் போய்க் குளித்து விட்டு வந்து விடுகிறேன்" என்றார்.

"சரி, ஸார்!" என்று சொல்லிவிட்டுக் குழந்தையை வாங்கிக்கொண்டு, "எனக்குக் குழந்தை என்றாலே உயிர் சார்!" என்றான் ரங்கமணி.

"அப்படித்தான் இருக்கணும். அதுதான் நல்லது......" என்று சொல்லிவிட்டுக் கொல்லைப் பக்கம் சென்றார் குருநாதன்.

கொல்லைப்புறத்திலிருந்த பெரிய கல் உரலைப் புரட்டிக்கொண்டு வந்துகொண்டிருந்தான் தண்டபாணி. அதைக் கண்ட குருநாதன், "அடடே! அப்படி உரலைப் புரட்டிக்கொண்டு வந்தால் தரையெல்லாம் வீணாகிப் போயிடுமே! தரையெல்லாம் இடிந்து பாழாய்ப் போனால் அதை வேறு கட்ட முடியுமா! அதை இப்படி நகர்த்திக் கொண்டு வருவதாய் இருந்தால் நானே செய்திருக்க மாட்டேனா! அப்படியே மெதுவாய் நீ தூக்கிக்கொண்டு வருவாய் என்று நினைத்துத்தானே உன்னை அதைச் செய்யச் சொன்னேன்...!" என்றார்.

"ஆறு மணங்கா யிருந்தால் தூக்கி விடுவேன், ஸார்! இது ஆறு மணங்குக்கு மேலே இருக்கும் போலிருக்கே..." என்றான் தண்டபாணி மேல்மூச்சு, கீழ்மூச்சு வாங்க.

"கொஞ்சம் சிரமப்பட்டுத்தான் தூக்கிப் பாரேன்......" என்றார் குருநாதன்.

"சரி ஸார், இரண்டு மூன்றடி வேண்டுமானால் சிரமப்பட்டுத் தூக்கி வைக்க முடியும் ஸார்..."

"சரி! இன்று கொஞ்சம் தூக்கி வை. நாளைக்குக் கொஞ்சம் தூக்கி வைக்கலாம். இப்படி நீ தினம் வந்து கொஞ்சம் கொஞ்சமாகத் தூக்கி ஒரு நாள் சமையலறையிலே கொண்டு போய்ச் சேர்த்து விடலாம்" என்றார் குருநாதன்.

தண்டபாணி அவர் சொல்லியபடி அந்தக் கல் உரலைத் தூக்கிச் சிறிது தூரத்தில் வைத்து விட்டு, "நாளைக்கு வருகிறேன், ஸார்! நீங்கள் எனக்காகக் கொஞ்சம் பஸ் ஸர்வீஸிலே பாருங்கோ!" என்றான்.



சென்னை உயர்நீதி மன்ற அட்வகேட் ஸ்ரீ எஸ். பிச்சை அவர்களுக்கும், சென்னை ரெவினியூ இலாகா ரிடையர்ட் உதவிக் காரியதரிசி ஸ்ரீ எஸ். ராமச்சந்திரய்யர் அவர்களின் புதல்வி சௌ. காமாக்ஷிக்கும் மாயூரத்தில் விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது. ஒரிஸ்ஸா, விந்தியப் பிரதேச கவர்னர், மைசூர் ராஜ்யப் பிரதம மந்திரி, மாகாண மந்திரிகள், சென்னை ஆந்திரா உயர்நீதிமன்ற நீதிபதிகள், மற்றும் பல பிரமுகர்களிடமிருந்தும் மணமக்களுக்கு வாழ்த்துச் செய்திகள் வந்திருந்தன. சென்னை எழும்பூரில் திரு வி. எல். எத்திராஜ் அவர்கள் இல்லத்தில் நடந்த விருந்துபசாரத்தில் சென்னை உயர்நீதிமன்ற நீதிபதிகளும், சட்ட இலாகா அதிகாரிகளும், சென்னை நகரப் பிரமுகர்களும் கலந்துகொண்டு சிறப்பித்தனர்.

வாழ்க, மணமக்கள்!

---

" அட, பயித்தியமே! உன்னைப் பற்றிய கவலைதானே எனக்கு. அவர்கள் சீக்கிரம் துந்தகுளம் வறண்ட சமுத்திரம் 'லைன்'லே புதிசா பஸ் விடப் போகிறார்களாம்! அந்த 'லைன்'லே உனக்கு டிராபிக் மானேஜர் வேலை தரச் சொல்கிறேன், போ!" என்றார்.

"எதுவா யிருந்தாலும் பாதகமில்லை. வேலைன்னு அகப்பட்டால் போதும் ஸார்!" என்று சொல்லி விட்டுச் சென்றான் தண்டபாணி.

மார்க்கட்டுக்குச் சென்ற கல்யாணம் காய் கறிகளை வாங்கிக் கொண்டு திரும்பினான். குருநாதனின் மனைவி அவைகளைச் சரிபார்த்து வாங்கி வைத்துக் கொண்டு, " அவர் குளிக்கிறார். நீ போய் விட்டு நாளைக்கு வா!" என்று மிகவும் அபிமானத்தோடு விடை கொடுத்து அனுப்பினாள்.

குருநாதன் சாவகாசமாக நீராடி விட்டு உள்ளே வந்தபோது வாசற்பக்கத்தில் குழந்தையைத் தூக்கி வைத்துக்கொண்டு வேடிக்கை காட்டிக் கொண்டிருந்த ரங்கமணி உள்ளே வந்து குழந்தையை விட்டு விட்டு, " குழந்தை ரொம்ப சமர்த்து ஸார்! ஏதாவது வேடிக்கை காட்டிக் கொண்டிருந்தால் அழவே அழாது போலிருக்கு ஸார்!" என்றான்.

" அதிலே என்ன சந்தேகம்! வெறும் படிப்பு மாத்திரம் போதாது. குழந்தைகளை எப்படி வேடிக்கை காட்டிச் சமாதானம் செய்கிறது என்கிற யுக்தி புத்தியும் தெரிந்திருக்கணும். உன்னிடம் அந்த இரண்டும் பொருந்தி இருக்கு. சர்வேஸ்வரா ஸ்டீல் ஒர்க்ஸ் மானேஜருக்கு ஆறு குழந்தைகள். உனக்குக் குழந்தைகளிடம் இருக்கும் பிரியத்தை அவரிடம் சொல்லி விட்டால் போதும். உடனே உனக்கொரு வேலை கொடுத்து விடுவார்!"

" வேலைக்கு உங்களைத்தான் நம்பிக் கொண்டிருக்கிறேன், ஸார்! எப்படியோ நீங்க ஏதாவது ஒரு ஏற்பாடு செய்தால் சரிதான்!" என்றான் ரங்கமணி.

" கவலைப்படாதே. நாளைக்கு வந்து விடு. எப்படியும் இன்று அவரைப் பார்த்து விஷயத்தைத்தெரிந்து கொண்டு வந்து விடுகிறேன்" என்றார் குருநாதன்.

ரங்கமணிக்கு விடை கொடுத்து அனுப்பி விட்டுச் சாப்பிடுவதற்காகச் சமையலறையில் நுழைந்த குருநாதன் தம் மனைவியிடம், " ஊஹும்! காலையில் வரவேண்டிய பையன்களெல்லாம் வந்து விட்டுப் போய் விட்டார்கள். வேலைகளும் ஒரு தினுசாய் முடிந்தது. இனி மேல் மத்தியானம் சம்பு, பிச்சுமணி, கோதண்டம் இவர்களெல்லாம் வருவார்கள். உனக்கு ஏதாவது வேலை இருக்கா... !" என்றார்.

" எனக்கென்ன வேலை இருக்கிறது! மிஷினுக்குப் போய் மிளகாய்ப் பொடி அரைத்துக் கொண்டு வரணும். நாளை மறுநாள் வரும் சிராத்தத்துக்காக ஏணி வைத்துக் கொண்டு ஏறி, உள் மச்சிலேயிருந்து பாத்திரங்களெல்லாம் எடுக்கணும். எங்க அத்தை ஒரு சிமிட்டித் தொட்டியும், செம்பும் வைத்திருக்கேன்னு சொன்னாள். அதைப் போய் யாராவது எடுத்துக் கொண்டு வரணும். அவ்வளவுதான்" என்றாள் கங்கா தேவி.

"இவ்வளவுதானே! மத்தியானம் பையன்கள் வருகிற போது மறந்து விடாமல் ஞாபகப் படுத்து" என்றார் குருநாதன்.

" அதெல்லாம் சரி! இப்படி நீங்க ஊரிலே இருக்கிற பையன்களுக்கெல்லாம் உத்தியோகம் தேடித் தருவதிலேயே இருந்தால் உங்களுக்கு எப்போ ஒரு உத்தியோகம் கிடைக்கிறது! இவரைப் பார்த்தேன், அவரைப் பார்த்தேன் என்று சொல்லுகிறீர்களே தவிர ஒன்றுமில்லையே! இப்படியே பெரியவா வைத்திருக்கிற கொஞ்ச நஞ்சம் சொத்தையும் அழித்துச் சாப்பிட்டுக் கொண்டே வந்தால் கடைசியில் என்ன மிஞ்சும்!" என்றாள் அவர் மனைவி கங்காதேவி.

"அந்தக் கவலை எனக்குக் கிடையாது! எங்கேயாவது ஒரு உத்தியோகம் நமக்குக் கிடைக்காதா என்றுதானே ஊரிலுள்ள இவ்வளவு பெரிய மனிதர்களையும் சிநேகிதம் செய்து கொண்டு அவர்களை அடிக்கடி போய்ப் பார்க்கிறேன். இத்தனை புண்ணியவான்களில் எவனாவது ஒருவன் ஒரு உத்தியோகம் கொடுக்க மாட்டானா! பார்ப்போம். எப்படியோ இந்தப் பெரிய இடத்துப் பழக்கமெல்லாம் ஊரில் கொஞ்சம் கௌரவத்தைத்தான் கொடுக்கிறது. இல்லாவிட்டால் இத்தனை பையன்கள் நம்மிடம் வந்து நான் தவறாமல் சுற்றுவார்களா......!" என்றார் அவர் சிரித்துக் கொண்டே.

# படித்துப் பாருங்கள்

## ஈசாப் கதைப் பாடல்கள்

அகில உலக இலக்கியங்களில் ஒரு சிலவே சிரஞ்சீவித்துவம் பெற்றவை. அவற்றில் ஈசாப் கதைகளும் ஒன்று. ஈசாப் கதைகளில் உண்மையும் நீதியும் பொதுளும். அரசர்களுக்கும் மக்களுக்கும் ஏற்பட்ட கலகங்களையும் விரோதங்களையும் அவருடைய அருமையான குட்டிக் கதைகள் தீர்த்து வைத்திருக்கின்றன. கிரேக்க நாட்டில் பிறந்த ஈசாப் இரு எஜமானர்களுக்கு அடிமையாகவே வாழ்ந்து வந்தார். ஆனால் அவருடைய அறிவுக் கூர்மையும், ஹாஸ்யப் பேச்சுக்களுமே அவரை அடிமை வாழ்விலிருந்து விடுதலை அளித்தன என்றால் அவரது புத்திசாலித்தனத்துக்கு வேறு எடுத்துக்காட்டு வேண்டியதில்லையல்லவா !

"அதிக ஆசை அதிக நஷ்டம்" என்னும் உண்மையைக் கூற ஈசாப் அழகான ஒரு கதையைக் கூறுகிறார்: சிங்கம் ஒன்று பசியினால் வாடி கொண்டிருந்தது. அப்போது ஒரு முயல் தூங்கிக் கொண்டிருப்பதைக் கண்டது. அதைத் தின்னப் பாயும்போது அச்சமயம் ஒரு அழகு மானைப் பார்த்தது. 'தூங்கும் முயலைப் பிறகு தின்னலாம். முதலில் மானைப் பிடிப்போம்' என்று துரத்திக் கொண்டு ஓடியது. ஆனால் மான் சிங்கத்தின் பிடியில் சிக்கவில்லை. தோல்வியுற்ற சிங்கம் முயலையாவது தின்னலாம் என்று திரும்பி வந்தபோது தூங்கி விழித்த முயல் முன்பே ஓடிவிட்டது தெரிந்தது. "அதிக ஆசையினால் கைப்பொருளையும் இழந்து விட்டேனே !" என்று சிங்கம் வருந்தியது.

இத்தகைய பல அருமையான ஈசாப்பின் கதைகளுக்குக் கவி உருவம் கொடுத்திருக்கிறார் குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா அவர்கள். "உள்ளத் துள்ளது கவிதை உண்மை தெரிந்துரைப்பது கவிதை" என்று கவிதைக்கு இலக்கணம் வகுத்தார் கவிமணி. ஈசாப்பின் உண்மை உரைக்கும் கதைகளை அழகாகத் தெள்ளத் தெளிந்த தமிழில் எடுத்துரைத்திருக்கிறார் திரு அழ. வள்ளியப்பா.

'உதவியும் யோசனையும்' என்னும் கவிதை "உதவி ஏதும் செய்யாமல் யோசனை சொல்வதில் பலனுண்டோ !" என்னும் அழகான நீதியைக் கூறுகிறது. இரண்டு பெண்டாட்டிக்காரர் அற்புதசாமி படும் அவதி நம்மை ஹாஸ்ய வெள்ளத்தில் ஆழ்த்துகிறது. பிறரை ஏய்க்க வேஷம் போடுபவர்களின் நிலையை இந்தப் பாட்டு எவ்வளவு அற்புதமாக எடுத்துக் கூறுகிறது, பாருங்கள்.

"பிறரை ஏய்க்க நினைத்துக் காகம்
வேஷம் போட்டது
பிறந்த இனத்துப் பறவை கூடத்
துரத்தி அடித்தது.
பறந்து பறந்து அங்கும் இங்கும்
அலைந்து திரிந்தது
பாவம், பின்னர் அந்தக் காகம்
என்ன ஆனதோ !"

"தமிழருக்குக் கவி நாடி நன்றாய்ப் பேசுகிறது" என்று ரஸிகமணி டி. கே. சி. அவர்கள் அடிக்கடி கூறுவார்கள். திரு அழ. வள்ளியப்பாவின் கவிதைகளே அதற்குச் சான்றாக விளங்குகின்றன.

கண்ணைக் கவரும் மூவர்ண அட்டைச் சித்திரமும், ஒவ்வொரு கவிதைக்கும் வரைந்துள்ள அருமையான வர்ண ஓவியமும் இந்நூலின் அழகை இன்னும் அதிகப்படுத்துகின்றன. இந்நூலின் கடைசியில் ஈசாப்பின் வாழ்க்கையில் நிகழ்ந்த சில ரஸமான நிகழ்ச்சிகளைச் சேர்த்திருப்பது ஈசாப்பின் பெருமையை நன்கு எடுத்துக் காட்டுகிறது.

நூல் : ஈசாப் கதைப் பாடல்கள் ; ஆசிரியர் : குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா ; கிடைக்குமிடம் : பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை-1 ; விலை ரூ. 1. —பி. எஸ். மணி

## திரும்ப வழியில்லை

மனித இதயம் உணர்ச்சி மயமானது ; அதன் பூரிப்பும், துடிப்பும், தவிப்பும்தான் உலகத்துக் காவியங்களும் ஓவியங்களும் தோன்றக் காரணமாயிருக்கின்றன.

சரஸாவின் இளம் உள்ளம் எழுத்தாளன் அனந்தனிடம் ஈடுபட்டுத் தன் இதயத்தில் இடங் கொடுத்தது ; பழக்கத்தின் நெருக்கம் காரணமாக வர வர, கணவனையே வெறுத்து ஒதுக்கும் அளவுக்கு அந்த ஈடுபாடு வளர்ந்தது. அனந்தனோடு வெளியேறிய சரஸா அநுபவித்த இன்ப துன்பங்களை யெல்லாம் மீறியதாயிருந்தது, அவள் கைப்பிடித்த கணவனின் கருணை. நெறி பிறழ்ந்த அவளை மீண்டும் தன்னுடன் சேர்ந்து வாழ அவன் அழைத்தபோது அவள் உள்ளமே அவளைச் சுட்டது ; 'திரும்ப வழி யில்லை' என்று அவளைத் தடுத்தது.

வகுப்பு மாத்சரியங் காரணமாக மனிதர்கள் அரக்கர்களாக மாறிக் கட்டு மீறிய துராக்கிருதங்களில் ஈடுபட்டபோது, சாரதா அவ்வரக்கர்களின் கொடுமையினால் கணவனுடன் சேர்ந்து வாழ முடியாதவளானாள். பலவிதக் கஷ்டங்களுக்குப் பிறகு ஒருவாறு மனந்தேறி இன்ப வாழ்வின் எல்லைக் கோட்டை அவள் மிதித்தபோது, விதியின் 'பூகம்ப' அதிர்ச்சியினால் அவள் வாழ்வு இருண்டது.

ரகுநாத் நாற்பத்தைந்து வயதைத் தாண்டியவர் ; அவர் வாழ்வின் பசுமை வறண்டது. ஆனால் இடையில் நிகழ்ந்த பல நிகழ்ச்சிகளின் காரணமாக அவர் உள்ளத்தில் இறந்தகால பால்ய நினைவுகளின் பருவ உணர்ச்சிகள் மீண்டும் உயிர் பெற்றுவிட முயன்று முறிந்து விழுந்தன. ரகுநாத்தின் இதயம் 'மீண்டும் வருமா!' என இளமையை எண்ணி ஏங்கியது.

மேலே கூறிய மூன்று விசித்திர உள்ளங்களின் விந்தை உணர்ச்சிகளை, இதய தாபங்களை வாசகர்களின் மனத்தில் பதியும் வண்ணம் மூன்று சிறுகதைகளின் மூலம் ஆசிரியர் இந்நூலில் அழகாகக் கூறுகிறார். வாசகர்களை ஈர்க்கும் திறனுள்ள இவரது தமிழ் நடை, கதா பாத்திரங்களுடன் ஒன்றிவிடப் பெரிதும் உதவியா யிருக்கிறது.

ஆசிரியர் : உமாசந்திரன் ; வெளியிட்டோர் : பூர்ணிமா பிரசுரம், கதீட்ரல், சென்னை—6. விலை : ரூ. 1–14–0. — "விஜயம்"



# நீங்களே நியாயம் சொல்லுங்கள்!

## அறிவாளிக்குகந்த ப்ளேடு எதுவென்று

ப்ளேடுகளிலிருந்து நீங்கள் எதிர்பார்ப்பது என்ன? நெடு நாட்கள் மழுங்காமல் உழைக்கும் கூர்மை. பல நாட்களுக்கு மழமழப்பான சுக க்ஷவரம்.

நீங்கள் ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகளை உபயோகிக்காவிடில் இவைகளை எங்ஙனம் அடைவீர்கள்? அனேகமாக முடியாது.

நீங்களே நியாயம் சொல்லுங்கள். ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகளை எது தயாரிப்பான வேறெந்த ப்ளேடுகளுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். மற்றெந்த ப்ளேடுகளினாலும் இத்தகைய மிருதுவான சுக க்ஷவரம் பெற முடியாது. மற்ற ப்ளேடுகள் அனேக நாட்களுக்கு கூர்மையாக இருந்து உழைக்காது.

உங்கள் பணத்திற்குப் பெறுமானம் கொடுப்பது ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகளே. மட்டரக க்ஷவரம் பெற வேண்டிய அவசியமும் இல்லை. ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகளே வேண்டுமெனக் கேட்டு வாங்குங்கள்.




**7 o'clock BLADES**

**ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகள்**

3

# பூதான சரித்திரத்திலே நான்கு ஆண்டுகள்!

சுரேஷ்ராம்

சர்வோதய சமாஜத்தின் ஐந்தாவது ஆண்டு விழா சாந்திலில் 1953-ம் ஆண்டு மார்ச்சு 5, 6, 7 தேதிகளில் ஸ்ரீ தீரேந்திர மஜும்தார் தலைமையில் நடைபெற்றது. இந்த விழா சரித்திரப் புகழ் வாய்ந்தது. ஏன் என்றால் தேச பக்த சீலர்களில் முக்கியமானவரும், சோஷலிஸ்ட் கட்சியின் முக்கிய தலைவருமான ஸ்ரீ ஜெயப்பிரகாஷ் நாராயண் இனி தாம் பூதான இயக்கத்தில் ஈடுபட்டு வேலை செய்யப் போவதாக இந்தச் சம்மேளனத்தின் போதுதான் அறிவித்தார். அப்போது அவர் கூறிய மொழிகள் சிந்தனையைக் கிளறக்கூடியனவாக அமைந்தன. அப் பேருரையின் ஒரு பகுதியைப் பாருங்கள் :

“நம் நாடு சுதந்திரம் பெற்ற பின் எல்லோருடைய உள்ளத்திலும் ‘இனி என்ன ஆகுமோ?’ என்ற பெருந் திகில் குடிகொண்டிருந்தது. வினோபா அந்தக் கவலைகளை யெல்லாம் நீக்கி விட்டார். சந்தேகங்களை யெல்லாம் போக்கி விட்டார். இருளை விரட்டி விட்டார். இன்று பூமிதான் ஒவ்வொருவருடைய தாய். தாயின் உரிமை கொண்டாடுவதில் ஒவ்வொரு தனயனுக்கும் உரிமை இருக்கத்தானே செய்கிறது. அதிலும் பூமியில் எவன் நின்று வேலை செய்து உணவை உற்பத்தி செய்கிறானோ அவனுக்குத்தான் முதல் உரிமை. இதுதான் சென்ற இரண்டு ஆண்டுகளில் ஏற்பட்ட அறிவுப் புரட்சி. இனி இந்தப் புரட்சியைக் காரியாம்ச மாக்குவதே நம் வேலை.”

இந்தச் சம்மேளனத்தின்போது வினோபா அடிகளும் சில ஆச்சரியமான கருத்துக்களை வெளியிட்டார். அவருக்கே உரிய தனி நடையில் சுவதந்திர ஜனசக்தியை நிர்மாணிக்க வேண்டிய அவசியத்தை வற்புறுத்தினார்.

1953-ம் ஆண்டு மார்ச்சு மாதம் 12ம் தேதி மீண்டும் பீஹார் கிராமங்களில் யாத்திரை புரியப் புறப்பட்டார்.

பீஹாரில் மிகப் புனிதமான க்ஷேத்திரமாகிய வைத்தியநாததாம் என்ற ஊருக்கு 18 செப்டம்பரில் வந்தார். பீஹார் ராஜ்யத்திலுள்ள தொண்டர்கள் அனைவரும் அங்கு கூடி யிருந்ததால் 19-ம் தேதியும் தங்கினார். ஆனால் முதல் நாள் 18ம் தேதி கோவிலின் தலைமைக் குருக்கள் வினோபா அடிகளைச் சுவாமி தரிசனம் செய்ய அழைத்திருந்தார். அவரிடம் வினோபா தெளிவாகக் கூறியிருந்தார். ஹரிஜனங்களையும் தம்முடன் கோவிலுக்குள் அழைத்து வர அனுமதித்தால்தான் ஆண்டவனைத் தரிசிக்கத்தாம் வர முடியும் என்று சொல்லி யிருந்தார். அதற்கு அந்தக் குருக்கள் சம்மதித்தார். அதன்படியே 19-ம் தேதி மாலை ஒரு சில ஹரிஜனங்களுடன் வினோபா கோவிலுக்குப் போனார். ஆனால் கோவிலுக்குள் அடியெடுத்து வைத்தாரோ இல்லையோ பண்டாக்கள் கையில் தடிகளுடன் “தர்மகீ ஜய் ஹோ! அதர்மகீ நாச் ஹோ!” (தர்மம் வெல்க! அதர்மம் அழிக!) என்று இரைச்சல் போட்டுக் கொண்டு வினோபா அடிகளையும் கூட வந்தவர்களையும் அடித்து விரட்டத் தலைப்பட்டார்கள். வினோபா அடிகளின் கோஷ்டியைச் சேர்ந்தவர்கள், வினோபாவுக்கு எத்தகைய ஊறு நேராமலிருக்க அவரைச் சூழ்ந்து கொண்டு விட்டார்கள். ஆயினும் வினோபாவுக்கு அடிபடத்தான் செய்தது. வினோபா அந்த அடியுடன் பொறுமையே உருவாகத் திரும்பி விட்டார். மறுநாள் பகல்பூர் ஜில்லாவிலுள்ள பர்தி என்ற கிராமத்தை அடைந்த பிறகு பத்திரிகைகளுக்கு இச்செய்தியை அனுப்பினார் :

“என்னைத் தாக்கும் காரியத்தில் ஈடுபட்டவர்கள் தங்கள் அறியாமையின் காரணமாகவே அவ்விதம் செய்தார்கள் என்பதை முதலில் தெரிவிக்க விரும்புகிறேன். அவர்கள் இதற்காகத் தண்டனை அடையக் கூடாது. அவர்கள் அசாத்திய கோபத்தில் இருந்ததனால் ஆண், பெண் என்றுகூடப் பார்க்காமல் கண் மூடித் தனமாக அடித்து விட்டார்கள். ஆயினும் ஜாதி வித்தியாசம் பாராட்டும் கொடுமையின் சரித்திரத்திலே இதுவே கடைசிக் கொடுமையாக இருந்து தொலையட்டும்.



ஸ்ரீ ஜெயப்பிரகாஷ் நாராயண்

“அவர்கள் தண்டிக்கப் படக் கூடாதென்று ஏற்கெனவே சொல்லி விட்டேன். என்றாலும் பாரத நாட்டுச் சட்டத்தை அவமதித்து இருக்கிறார்கள். இதற்காக ஏதோ சொற்ப தண்டனை அளிப்பது போதிய பரிகாரம் தேடியதாகாது. அவர்கள் புரிந்

துள்ளது பெரிய குற்றம். இனி இம்மாதிரியான காரியங்கள் நடைபெறாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். இது விஞ்ஞான யுகம். ஒவ்வொரு மதத்தையும் பகுத்தறிவெனும் உரை கல்லில் உரைத்துப் பார்க்கப்படும் காலம். இதை நமது மக்கள் நினைவிற் கொண்டு நடந்து கொள்ளுவார்களானால் யாவும் செவ்வனே நடைபெறும்!''

* * *

பீஹாரில், பூர்னியா, ஸஹார்ஸா, தார்பங்கா, முஸாபர்பூர் முதலிய ஜில்லாக்களில் எல்லாம் சுற்றுப் பிரயாணம் செய்து விட்டு 1954-ம் ஆண்டு ஜனவரி 10-ம் தேதி பட்னுவுக்கு வினோபா அடிகள் வந்தார். பட்னு வாசிகளைப் பார்த்துப் பின்வருமாறு கூறினர்:

"நிலப் பிரச்னையைப் பற்றி எனக்குக் கவலையில்லை. உலகில் இப்பிரச்னை எப்படியோ ஒரு விதத்தில் தீர்ந்து விடும். ஆகவே நான் எனக்கு எவ்வளவு நிலம் கிடைக்கிறது என்பதைப் பற்றிக் கவலைப்படவில்லை. நல்ல உயர்தரமான எண்ணங்கள் மக்களின் மனத்திலே



எவ்வளவு ஆழத்தில் பதியப் போகின்றன என்பதைப் பற்றித்தான் என் கவலையெல்லாம்!''

பின்னர் ஜனவரி 30ம் தேதியிலிருந்து மே மீ 4-ம் தேதி வரை வினோபா கயா ஜில்லாவில் சுற்றுப் பிரயாணம் செய்தார். இதனிடையில் ஏப்ரல் 18, 19, 20 தேதிகளில் புத்தகயாவில் சர்வோதய சமாஜத்தின் ஆறாவது ஆண்டு விழா நடைபெற்றது. இவ் விழாவுக்கு ஸ்ரீமதி ஆஷாதேவி அரியநாயகம் தலைமை வகித்தார். இந்தச் சம்மேளனத்தின் மிக முக்கியமான அம்சம் ஜெயப்பிரகாச நாராயண் 19ம் தேதி நிகழ்த்திய பேருரைதான்.

பீஹார் ராஜ்யத்தைச் சேர்ந்தவர் என்ற முறையில், வினோபா அடிகள் குறித்த முப்பத்திரண்டு லட்ச ஏக்கர் நிலத்தைச் சேகரிக்க முடியவில்லையே என்று தமது வருத்தத்தைத் தெரிவித்துக் கொண்டார். வினோபா அடிகளின் பூதானக் கொள்கையை அங்கீகரித்த காங்கிரஸும் பிரஜா சோஷலிஸ்ட் கட்சியும் இதில் தீவிரப் பங்கெடுத்துக் கொள்ளாததே இந்த நிலைமைக்குக் காரணம். தம்மைப் பொறுத்த வரையில் இவ் வியக்கத்தில் தமக்குள்ள நம்பிக்கை நாளுக்கு நாள் அதிகரித்து வருவதாகவே கூறினர். சட்டத்தினால் மனித உள்ளங்களை ஒன்றுபடுத்த முடியாது. நிலத்தைச் சமுதாயத்தின் சொத்தாக மாற்றும்படி எந்தக் கட்சியும் சட்டம் இயற்ற முடியாது. 'ஏன் செய்ய முடியாது! கத்தியைக் காட்டி—பலாத்கார முறையில்—செய்து விடலாமே' என்று கூறலாம். அது நிலப் பிரச்னையைத் தீர்ப்பதற்குப் பதில் இன்னும் பல புதுப்பிரச்னைகளைத்தான் கிளப்பி விடும். ஆகவே இந்தப் பூதான இயக்கம் அவசியமாகவும் அவசரமாகவும் நடைபெற வேண்டும், காலந் தாழ்த்தக் கூடாது. காலம் யாருக்காகவும் காத்திராது. அது போய்க் கொண்டேயிருக்கும். ஆகவே வாழ்க்கையையே அர்ப்பணித்து வேலை செய்வது தான் இப்பொழுது நம் முன் நிற்கும் அத்தியாவசிய வேலை. நாட்டு மக்கள் ஒவ்வொருவரும் — முக்கியமாக இளைஞர்களை — ஜீவன் தானம் இந்த மகத்தான இயக்கத்துக்கும் புரியும்படி கேட்டுக் கொண்டு, தாம் அவ்விதம் ஜீவன் தானம் இவ் வியக்கத்துக்குப் புரிவதாகக் கூறினர்.

மறுநாள் ஒரு ஆச்சரியகரமான சம்பவம் நிகழ்ந்தது. இம் மகாநாட்டுக்குத் தலைமை வகித்த ஸ்ரீமதி அரியநாயகம் ஆஷாதேவி, தமக்கு ஜெயப்பிரகாஷ் இரண்டு கடிதங்கள் அனுப்பியிருப்பதாகக் கூறினர். ஒன்று ஜெயப்பிரகாஷின் கடிதம்; மற்றொன்று வினோபா அடிகளின் கடிதம்.

ஜெயப்பிரகாஷின் கடிதம்:

இத்துடன், எனக்கு பாபா (வினோபா) விடமிருந்து வந்த கடிதத்தையும் வைத்திருக்கிறேன். நமக்கெல்லாம் புத்துணர்ச்சி யூட்டிப் புது வழி காட்டிய ஒரு மகான் மிகச் சிறியவனுகிய எனக்குத் தமது வாழ்க்கையை நேற்று நான் விடுத்த வேண்டுகோளுக்கிணங்க அர்ப்பணித்திருப்பதாக எழுதியிருக்கிறார். இதைப் படித்து விட்டு என் நெஞ்சம் தழுதழுக்கிறது. எனக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை. இவ்வளவு மகத்தான காணிக்கையை ஏற்றுக் கொள்ள எனக்குச் சற்றும் தகுதி கிடையாது. இவ்வளவுதான் என்னுல் சொல்ல முடிகிறது. அவர் நமக்குத் தம் வாழ்கையை அர்ப்பணிப்பதற்குப் பதிலாக, நாம்தான் கடவுள் பெயரைச் சொல்லி அவருக்கு நமது வாழ்க்கையை வழங்க வேண்டும். தங்கள் மிகப் பணிவுள்ள,

ஜெயப்பிரகாஷ்

இனி வினோபா ஜெயப்பிரகாஷுக்கு என்ன எழுதியிருந்தார் என்று பார்ப்போம்.

"நேற்றுத் தாங்கள் விடுத்த வேண்டுகோளின்படி பூதானத்தையும் கிராமக் கைத்தொழில்களையும் ஆதாரமாகக் கொண்டு அஹிம்சா முறையில் நடத்தப்படும் புரட்சிக்கு நான் என் வாழ்க்கையை அர்ப்பணம் புரிகிறேன். —வினோபா."

இப்படித்தான் ஜீவன் தானம் எனும் யமுனை பிரவாகமெடுத்தது! அன்று அந்த மகாநாட்டிலேயே ஒருவருக்குப் பின் ஒருவராக ஆண்களும் பெண்களும் ஜீவன் தானம் புரிய முன் வந்தனர். சுமார் 500 பேர் அங்கேயே அந்த நிமிஷமே ஜீவன் தானம் செய்தனர். (இன்னும் வரும்)

---

# பர்மா ரமணி

அழ. வள்ளியப்பா

## 8. அவசரச் செய்தி!

பாஸ்கரன் மதுர நாயகத்தைப் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்த போது மதுரநாயகம் சிறிது தயங்கினார். அதைக் கண்டதும் அவர் மனைவி கமலா தேவிக்குக் கடுங் கோபம் வந்து விட்டது.

“யோசித்து யோசித்துத்தான் இப்படி ஆகி விட்டது. ரமணி இன்னும் என்ன என்ன எடுத்திருக்கிறான் என்பதுகூட அவனைப் பிடித்தால் தெரிந்து விடும். இனி அவனைச் சும்மா விடக் கூடாது! நீங்கள் நாடகக் கொட்டகைக்குப் போய் விடுகிறீர்கள். இரவு வெகுநேரம் சென்றுதான் திரும்பி வருகிறீர்கள். நீங்கள் இல்லாத சமயம் பார்த்து அவன் வந்து எதையாவது தூக்கிக்கொண்டு ஓடி விட்டால் நான் என்ன செய்வது? அவனைச் சும்மா விட்டு வைக்கக் கூடாது. ஆபத்துத்தான்!” என்றாள் கமலாதேவி.

“மதுரநாயகம், பேசாமல் எழுந்திரு. நேரமாகிறது” என்று கூறி மதுர நாயகத்தின் கையைப் பிடித்து இழுத்தார் பாஸ்கரன்.

மதுரநாயகம் அரை மனத்துடன் எழுந்து பாஸ்கரனோடு சென்றார்.

இருவரும் பக்கத்துப் போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்றார்கள். சப்-இன்ஸ்பெக்டரிடம் விஷயத்தை விளக்கிக் கூறினார் பாஸ்கரன்.

‘காணாமல் போனது எவர் - ஷார்ப் பேனா. தங்க மூடி போட்டது. அடிப்பாகம் கறுப்பு நிறம்! மதிப்பு சுமார் நூறு ரூபாய் இருக்கும். பேனாவின் மேல் ‘சேகர் அன்பளிப்பு’ என்று எழுதப்பட்டிருக்கும். மலேயாவிலிருந்து சேகர் என்ற உறவினர் அனுப்பியது. அனுப்பி ஒன்றரை வருஷம் இருக்கலாம். சந்தேகப்படும் பையன் பெயர் ரமணி. வயது பதின்மூன்று. மாநிறம். சுமார் நாலரை அடி உயரம்.’

இந்த விவரங்களுடன் ‘ரிப்போர்ட்’ எழுதிக் கொடுத்து விட்டு வீட்டுக்குத் திரும்பி வந்தார்கள் மதுரநாயகமும் பாஸ்கரனும்.

அன்று மதுரநாயகம் நாடக சபாவுக்குப் போவதற்கு முன்பே இந்தச் செய்தி அங்கே போய்ச் சேர்ந்து விட்டது. அப்படியானால், முதலாளிக்கு இது தெரியாமலா இருக்கும்? அவருக்கும் உடனே தெரிந்து விட்டது. எல்லாம் அந்த பாஸ்கரன் செய்த வேலைதான்!



மதுரநாயகம் சபாவுக்குள் வந்து நுழைந்ததுமே, “என்ன மதுரநாயகம்! அந்தப் பயல் உங்களிடமே தன் வேலையைக் காட்டி விட்டான் போலிருக்கிறது! அவன் பரம யோக்கியன் என்று நேற்றுச் சொன்னீர்களே, அந்தப் பரம யோக்கியன் செய்த வேலையைப் பார்த்

தீர்களா? பார்த்தால் பசு, பாய்ந்தால் புலி என்பார்களே அது போலத்தான் அவனும் இருந்திருக்கிறான்'' என்று வாய் மூடாமல் பேசலானார் முதலாளி.

மதுரநாயகம் பதில் எதுவும் கூற வில்லை. தலையைக் குனிந்தபடி தமது அறைக்குள்ளே சென்றார்.

* * *

மறுநாள் பகல் பதினொரு மணி இருக்கும். முதலாளியின் பக்கத்திலே இருந்த டெலிபோன் 'கண கண' என்று ஒலித்தது. உடனே முதலாளி டெலி போன் 'ரிஸீவ'ரைக் கையில் எடுத்தார்.

"ஹலோ, யார் பேசுகிறது?" என்று முதலாளி கேட்டார்.

போலீஸ் ஸ்டேஷனிலிருந்து பேசுவ தாகவும், மானேஜர் மதுரநாயகத்திடம் அவசரமாக ஏதோ சொல்ல வேண்டுமென் றும் பதில் வந்தது.



உடனே முதலாளி மோகனரங்கம் ரிஸீவரை மேஜை மேல் வைத்து விட்டு மானேஜர் அறைக் குள் ஓடினார். "மதுரநாய கம்! மதுரநாயகம்! உங் கள் வீட்டுக்குப் பக்கத்தி லுள்ள போலீஸ் ஸ்டேஷ னிலிருந்து 'போன்' வந் திருக்கிறது. சப் - இன்ஸ் பெக்டர் உங்களோடு பேச வேண்டுமாம். சீக்கிரம் வாருங்கள்'' என்றார்.

உடனே மதுரநாயகம் முதலாளி அறைக்குள்ளே வேகமாக வந்தார். முதலாளியும் கூடவே வந்து அருகில் நின்றுகொண்டு அவர் பேசுவதைக் கவனித்தார்.

சப் - இன்ஸ்பெக்டர் மதுரநாயகத் திடம் சொன்னது இதுதான்:

"திருட்டுப் போன உங்களுடைய தங்கமூடி போட்ட எவர்-ஷார்ப் பேனா கிடைத்து விட்டது. திருடிய பையன் பேனாவைக் கடையில் விற்கப் போகும் போது அகப்பட்டுக் கொண்டான். அவ னுடைய வயது, உயரம், நிறம் எல் லாம் உங்கள் ரிப்போர்ட்டில் உள்ள படியே இருக்கின்றன. பேனாவிலும், 'சேகர் அன்பளிப்பு' என்று எழுதியிருக் கிறது'' என்று கூறினார்.

இதைக் கேட்டதும் மதுரநாயகம் "அட, நன்றி கெட்டவனே!'' என்று பல்லைக் கடித்தார்.

சப்-இன்ஸ்பெக்டர் முன்பு கூறிய தோடு நிறுத்திக் கொண்டிருந்தாலும் பரவாயில்லை. இன்னொரு எதிர்பாராத தகவலையும் கூறினார்! "அந்தப் பைய னிடம் ஒரு கைக் கடிகாரமும் இருக் கிறது. கேட்டால், 'என் அப்பா வாங் கிக் கொடுத்தது' என்று புளுகுகிறான். நீங்கள் உடனே வந்தால் எல்லாம் தெரிந்து விடும். பையன் லாக்-அப் பிலே இருக்கிறான்'' என்று கூறினார்.

மதுரநாயகம் ஆச்சரியத்தோடு ரிஸீவ ரைக் கீழே வைத்து விட்டு முதலாளி மோகனரங்கத்திடம் சப்-இன்ஸ்பெக்டர் கூறியதை அப்படியே அறிவித்தார். அதைக்கேட்டதும், "அடே! நாலைந்து மாதங்களுக்கு முன் காணாமல் போய் விட்டதே என் கைக் கடிகாரம் அது வாகத்தான் இருக்க வேண்டும். தூங் கும்போது யாரோ எடுத்து விட்டார்க ளென்று ஒவ்வொருவராக நாம் சோதனை செய்ய வில்லையா? அப் போது எங்கேயோ பத்திர மாக ஒளித்து வைத் திருந்து இப்போது எடுத் துப் போயிருக்கிறான். திருட்டுப் பயல்! இவனைச் சும்மா விடக் கூடாது. உடனே புறப்படுங்கள். நானும் உங்களுடன் வரு கிறேன்'' என்றார்.

"இப்படி அவன் மோசம் செய்வான் என்று நான் கனவில்கூட நினைக்க வில்லை'' என்று மிகுந்த வருத்தத்தோடு கூறினார் மதுரநாயகம்.

மானேஜர் மதுரநாயகத் தை அழைத்துக் கொண்டு உடனே போலீஸ் ஸ்டே ஷனுக்குச் செல்ல வேண்டும் என்று துடிதுடித்தார் முதலாளி மோகனரங் கம். உடனே அவர் மேஜை மேலிருந்த மணியை அடித்தார். சத்தம் கேட்டதும் மற்றொரு ஆபீஸ் பையனான அழகிரி உள்ளே ஓடி வந்தான்.

"டேய் அழகிரி, உடனே போய் டிரைவரிடம் காரை எடுத்து வரச் சொல்'' என்று முதலாளி மோகன ரங்கம் உத்தரவு போட்டார்.

கார் வந்ததும், முதலாளி மோகன ரங்கமும், மானேஜர் மதுரநாயகமும் ஏறிக் கொண்டனர். கார் போலீஸ் ஸ்டேஷனை நோக்கிப் புறப்பட்டது. போகும் போது ரமணியைப் பற்றி ஆத்திரம் ஆத்திரமாகப் பேசினார் முத லாளி. ஆனால், மதுரநாயகம் அவரைப் போல் ஆத்திரப்பட வில்லை. மிகவும் வருத்தப்பட்டார்; வேதனைப் பட்டார்.

"ஆறு மாதமாக மிகவும் அருமை யாக இந்த ரமணியை வளர்த்தோமே!

அவன் இப்படித் திருடனாக மாறி விட்டானே! நாம் செய்த உதவியெல்லாம் வீணாகி விட்டதே! நமது பேனாவை மட்டும் அவன் எடுத்திருந்தால்கூடப் பரவாயில்லையே! முதலாளியின் கைக் கடிகாரத்தையும் அல்லவா எடுத்து விட்டான்!'' என்றுதான் அவர் வருந்தப் பட்டார்; வேதனைப்பட்டார்.

* * *

போலீஸ் ஸ்டேஷனின் முன்னால் கார் வந்து நின்றது. உள்ளேயிருந்து முதலாளி மோகனரங்கமும், மானேஜர் மதுரநாயகமும் கீழே இறங்கினார்கள். இறங்கியதும் சப் — இன்ஸ்பெக்டர் அறையை நோக்கி மிகவும் வேகமாகச் சென்றார் மதுரநாயகம். மோகனரங்கமும் வேகமாகத்தான் சென்றார். ஆனாலும் கனத்த தொந்தியைத் தூக்கிக் கொண்டு செல்ல வேண்டியிருந்ததால், அவரால் மதுரநாயகத்தை ஒட்டிச் செல்ல முடியவில்லை. அவருக்குப் பின்னால்தான் போக முடிந்தது.

வேகமாகச் சென்ற மதுரநாயகம் முன் பக்கமாக இருந்த சப்-இன்ஸ்பெக்டரின் அறைக்குள்ளே நுழைந்தார். வழக்கம் போல் 'நமஸ்காரம்' என்று சொல்லவில்லை. "எங்கே சார் அந்தப் பையன்?'' என்று சப்-இன்ஸ்பெக்டரிடம் பேச்சை ஆரம்பித்தார்.

ஏதோ எழுதிக் கொண்டிருந்த சப்-இன்ஸ்பெக்டர் நிமிர்ந்து பார்த்தார்.

மானேஜர் மதுரநாயகத்தைக் கண்டதும், "அடாடா, நீங்களா! இப்படி உட்காருங்கள்'' என்று கூறி இன்ஸ்பெக்டர் எதிரே இருந்த நாற்காலியைச் சுட்டிக் காட்டினார்.

"பரவாயில்லை. எங்கே அந்தப் பையன்? அவன் எங்கே இருக்கிறான்?'' என்று மிகுந்த படபடப்போடு கேட்டார் மதுரநாயகம்.

"அவசரப் படுகிறீர்களே! அவன் எங்கே ஓடிப் போகிறான்? இங்கேதான் பத்திரமாக அடைத்து வைத்திருக்கிறோம். இதோ கொண்டு வரச் சொல்கிறேன்'' என்று கூறிவிட்டுத் திரும்பிப் பார்த்தார் போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர். முதலாளி மோகனரங்கம் அப்போதுதான் உள்ளே வந்து கொண்டிருந்தார்.

"யாரது உள்ளே வருவது?'' என்று சப் இன்ஸ்பெக்டர் கேட்டார். இதற்குமுன்பு மோகனரங்கத்தை அவர் பார்த்ததில்லை. (தொடரும்)




ரெடிமேட் உடைகளில்—உடம்புக்குப் பொருந்தாதபடி அவை ஒருபொழுதும் சுருங்கவே செய்யாது

நீங்கள் ரெடிமேட் ஷர்ட்டுக்களை, நிஜார்க்களை அல்லது வேறு உடைகளை வாங்கும்பொழுது 'ஸான்போரைஸ்ட்' (Sanforized) டிரேட் மார்க்கைப் பார்க்க வேண்டுமென்று வற்புறுத்தவும். அவ்விதமிருந்தால் உங்கள் உடைகள் உடம்புக்குப் பொருந்தாதபடி சுருங்கவே செய்யாது என்று உறுதி செய்துகொள்ளலாம்.

அதிகப்படியான உடைதயாரிப்பாளர்கள் சுருக்கம் செய்யப்பட்ட 'ஸான்போரைஸ்ட்' துணிகளையே உபயோகித்து வருகிறார்கள். இந்தத் துணி, மில்களில் விஞ்ஞான முறையில் முன்னதாகவே சுருக்கம் செய்யப்பட்டது.

'ஸான்போரைஸ்ட்' என்ற அடையாளம் நீடித்த கவர்ச்சிக்கு உங்களுக்கு உத்திரவாதம்.




ஸான்போரைஸ்ட்-கே-மெஹ்மான்:
பிரதி செவ்வாய்க்கிழமை இரவு 7-30 மணிக்கு ரேடியோ ஸிலோனிலிருந்து 41 மீட்டரில் ஒலிபரப்பப்படும் இனிமையான ஹிந்தி நிகழ்ச்சியைக் கேளுங்கள்.

## ஸான்போரைஸ்ட் ஸெர்விஸ்

'பாரிஜாத்', நேதாஜி ஸுபாஷ் ரோடு, மெரீன் டிரைவ், பம்பாய் 2

ACP. 1788

# ரவிசந்திரிகா

## 21. நிலவுப் பாறை

“பாராக்கும் அது! அகவல் மகனோ! ஓ!” என்றான் பளிஞர் தலைவன், ஓரே வியப்போடு!

‘அகவன் மகள்’ என்ற சொல் காதில் விழுந்ததுமே, கூட்டத்திலிருந்து சற்றுத் தொலையிலே ஒதுங்கி நின்று இது வரை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த பழனிப் பண்டாரம், சற்று முன்னால் நடந்து வந்தது. இலக்கண இலக்கியம் படித்த சாமியார் அல்லவா அது! அந்த ‘அகவன் மகள்’ என்ற சொல் அதற்கு அத்தனை வியப்பைத் தந்தது.

“என்ன பண்டாரம்! இப்படி ஆச்சரியத்தில் மூழ்கிப் போய் விட்டது!” என்று கேட்டுக் கொண்டே சட்டிப் பரதேசியும் அதன் அருகிலே வந்து நின்று கொண்டது.

“ஒன்றுமில்லை. இந்த அகவல் மகன் என்ற சொல்லை எங்கோ சங்கப்பாடலிலே படித்த நினைவு. ‘அகவன் மகளே, அகவன் மகளே!’ என்று கூப்பிட்டுக் கொண்டே யாரோ குறிகாரியைக் குறி சொல்லும்படி கேட்பதாக ஒரு ஞாபகம். குறுந் தொகையிலா, அல்லது குறிஞ்சிக் கலியிலா என்று இப்பொழுது சரியாக நினைவில்லை. அதனால்தான் இந்தக் கட்டை இப்படி முழித்தது!” என்று சொல்லிற்று பழனிப் பண்டாரம். இதைக் கேட்டுக் கொண்டே வந்த தென்காசிச் சாமி “அந்தக் கட்டை கமன ஒடியின் போதையிலே நிற்கிறதல்லவா! நினைவு இப்பொழுது ஒரு மாதிரியாகத்தான் இருக்கும்! அதனால் என்ன, பரவாயில்லை. இந்தச் சடலத்துக்கு அதைப் பற்றிக் கவலையில்லை. அகவல் மகனாக இருந்தாலும் சரி, அவல் தின்னும் மகனாக இருந்தாலும் சரி—வாயைத் திறந்து என்ன மெல்லுகிறான் பார்க்கலாம்!” என்றது.

வாழைப் பழச் சாமி இந்த இடத்தில் தானும் வந்து சேர்ந்து கொண்டது.

“அகவல் என்றால் அது ஒரு பாட்டு வகையல்லவோ! ஏன்சாமி, இலக்கண இலக்கியமே! பழனிப் பண்டாரமே! கொஞ்சம் சொல்லட்டும் அதை!” என்றது வாழைப் பழச் சாமி, வாழைப் பழத்தில் ஊசி ஏற்றுவதுபோல!




இதற்குள் அகவல் மகன், ஆவேசத்தோடு வந்தவன், நாகர் பீடத்

துக்கு வணக்கம் செய்து விட்டுத் தரையில் உட்கார்ந்தவாறு 'அகவ' ஆரம்பித்தான் :

சொக்கையா சொக்கையா
  சோறு வையடா
சொக்கையன் பெண்டாட்டிக்கு
  நீறு வையடா!



இப்படி அகவல் மகன் பாட ஆரம்பித்தானோ இல்லையோ, சொக்கப்பன் உடனே பயபக்தியோடு தலையைக் குனிந்த வண்ணம், வாய் பொத்தி வந்து, தினைச் சோற்றுப் படையலில் இருந்து ஒரு கவளம் பிசைந்து எடுத்து, அகவல் மகனின் வலது உள்ளங் கையிலே வைத்தான். அவனுடைய மனைவியோ, அப்படியே திருநீற்றுக் கப்பரையை எடுத்து வந்து தனக்கு நெற்றியிலே திருநீறு பூசி விடும்படி உடம்பை வளைத்து அகவல் மகனுக்கு முன்னால் நின்றாள்.

மற்றப் பளிஞர் எல்லாரும் சூழ்ந்து நின்று கொண்டார்கள்.

அகவல் மகன் தன்னுடைய பாடலைத் தொடர்ந்து சொல்ல ஆரம்பித்தான். அவனுடைய உதடுகள் இரண்டும் துடித்துக் கொண்டிருந்தன. நாக்கு படப்பட என்று அடித்துக் கொண்டது. உடம்பெல்லாம் மின்சாரத்தில் கைபட்ட மாதிரி ஒரு அதிர்ச்சியிலே 'ஜிவ் ஜிவ்' என்று ஆடியது. அவன் பாடினான் :—

ஊரான ஊர்விட்டு
  ஒருத்தன் இங்கே வருவானாம்!
பேரான சீமைவிட்டு
  ஒருத்தன் இங்கே வருவானாம்!
கட்டான ஆண்பிள்ளையும்
  கண்மணியாம் பெண்பிள்ளையும்
நீட்டான வார்த்தையிலே
  திசைமாறி நின்றிடுவார்!
ஆனாலும் இந்தமலை
  அருமையான மலையல்லோ
போனாலும் வந்தாலும்
  புண்ணியந்தான் சேருமல்லோ!

ஆகையினாலே—

இவ்வாறு சொல்லிக் கொஞ்ச நேரம் மூச்சு எடுத்துக் கொண்டான் அகவல் மகன். பிறகு, நாலு திசையிலும் ஒரு முறை சுற்றிப் பார்த்துக் கொண்டு தனது பாடலைத் தொடர்ந்தான் அவன் :—

சொக்கக் குடிதனிலே
  சோதனைகள் நடவாமல்
பக்கம் இருந்திடுவான்
  பாங்கான முருகனுமே!
பளிஞர் குலத்தினிலே
  பருவத்தில் பூத்திட்ட
பளிங்குக் கொடியான
  பத்தினிக் கன்னிக்கு
பாக்கியங்கள் வந்திடுமாம்
  பர்த்தாவும் வந்திடுவான்
ஆக்கினைகள் செய்திடுவான்
  அரசாட்சி நடத்திடுவான்!
மானுக்காய் இரங்கியிந்த
  மான்போலும் கன்னியிவள்
போன உயிர்காத்த
  புண்ணியத்தால் நன்மையுண்டு!
இத்தனைதான் இந்நேரம் :
  இனியுள்ள சேதியெல்லாம்
பித்துடனே வருமந்தப்
  பேரான மனிதனிடம்
சொல்ல வருவேன்நான் :
  சொக்கையா கேட்டாயோ!
மெல்ல நடந்திடுவேன்
  மேலேறிச் செல்லுகிறேன்!



அகவல் காரியைப் பார்த்து! அதான் அப்பவே சொன்னேனே, யாரோ ஒருத்தன் இங்கே வரப்போறான். ஆனா எல்லாம் முருகன் புண்ணியத்திலே நல்லதா முடியப் போகுதான்னேனே! அதுக்கு மேலே எனக்குத் தெரியாது. குறி கலைஞ்சு போச்சு இப்போ! அவ்வளவுதான்!" என்றாள் அகவல் மகள்.

இப்படித் தீர்மானமாக அவள் சொன்ன பிறகு, அவளை எதிர்த்துப் பேச யாருக்கும் தைரியம் வரவில்லை. போதையிலே இறங்கி நின்று கொண்டிருந்த பழனிப் பண்டாரம் மட்டும், கூட்டத்துக்கு மத்தியிலே வேகமாக வந்து நின்று கொண்டு, அகவல் மகளைப் பார்த்துக் கேட்கும் :—

"ஏ குறிகாரி! என்னமோ பெரிசாக் குறி சொல்ல வந்துட்டியே! உனக்கு அகவல் மகள் என்று யார் பேர் வச்சது! அதைச் சொல்லு முதல்லே! குறியிலே அது துலங்குதா பார்க்கலாம்!" என்றது பழனி.

அகவல் மகளுக்கு அப்படியே கண் சிவந்தது.

"பண்டாரம்! கஞ்சாவிலே பேசுதா கட்டை, இல்லே, சுயபுத்தியிலேதான் பேசுதா?" என்று அக்கினியிலேயே ஒரு அதட்டல் அதட்டினாள் அகவல் மகள். அவ்வளவுதான், நிலைமை விபரீதமாக வக்கரிக்கிறது என்பதைப் புரிந்து கொண்ட சட்டி, அப்படியே பழனிப் பண்டாரத்தின் மேலே பாய்ந்து பழனியைச் செந்தூக்காகத் தூக்கிக் கூட்டத்துக்கு வெளியே கொண்டு வந்து விட்டது! இதைப் பார்த்த வாழைப் பழமும் அப்படியே நழுவி ஓடிற்று. இவர்களைப் பின் தொடர்ந்து தென்காசிச் சாமியும் மற்றப் பரதேசிகளும் 'நமக்கு எதற்கு வம்பு?' என்ற எண்ணத்தில் விசாலமான ஆலமரத்தை நோக்கி நடந்தார்கள்.

சொக்கிக்கு இப்பொழுதுதான் மூச்சு சரியாக வந்தது. பழனிப் பண்டாரம் ஏதாவது இசைவு கேடாகக் கேட்டு வைத்து விடக் கூடாதே என்று அவள் மெய்

இப்படிப் பாடி முடித்ததும் அகவல் மகளுடைய முகத்தில் ஒரு தெளிச்சல் கொடுத்தது. அவளுடைய உடம்பெல்லாம் வியர்த்தது. அவளுக்கு அருகிலே வந்து நின்று, ஒரு பளிஞன் மயில் விசிறியினால் அவளுக்குக் காற்று வீசினான்.

கவலையோடு குறி கேட்டுக் கொண்டிருந்த சொக்கப்பனும் அவன் மனைவியும், பேசுவதற்கு வார்த்தை வராமல் மௌனமாக நின்றார்கள். அவர்களுக்குப் பக்கத்தில் இதுவரை பேசாமல் நின்ற மலைநாட்டுக் கன்னி சொக்கி, இப்பொழுது ஒரு பெண் புலியின் தைரியத்தோடு அகவல் மகளுக்கு முன்னால் வந்து நின்று கொண்டாள்.

"ஆச்சி! நீ சொன்னதெல்லாம் சரி. எனக்குக் கண்ணாலம் ஆகப் போகுதான்னு சொன்னே! புரிஞ்சது. ஆனா யாரோ, ஏதோ ஒரு ஊரிலே உள்ள ஒரு ஆண் பிள்ளைக்கும் பெண் பிள்ளைக்கும் என்னமோன்னு சொன்னியே அது என்னா? எங்களுக்கும் அவங்களுக்கும் என்னா சம்பந்தம் வந்தது? புரியல்லையே! சொல்லு!" என்றாள் சொக்கி.

"இந்தா கன்னிப் பெண்ணே! அதென்ன அப்படிக் கேட்டே நீ, இந்த

யாகவே பயந்தான். அதிலும் மானைப் பற்றியும் உயிர் காத்த அந்தப் புண்ணியத்தைப் பற்றியும் அகவல் மகன் சொன்னானே, அது என்ன சமாசாரம் என்று யாரும் கேட்டு வைத்துவிடக் கூடாதே என்று சொக்கிக்கு அளவு கடந்த அச்சம்! ஏனென்றால், தான் அவ்விதமான ஒரு சாகசச் செயல் செய்ததை இதுவரை தன் தகப்பனிடங் கூடச் சொல்லியதில்லை அவன்! சொன்னால் சொக்கப்பன் இனி அவனை அந்த நிலாக் காட்டுக்கே போகக் கூடாது என்று தடுத்து விட்டால்?...

சொக்கிக்கு ஒரு விநாடி அந்தச் சம்பவம் காட்டாற்று வெள்ளம் போல நினைவில் பொங்கிச் சுழித்துக் கொண்டு வந்தது!



ஒரு வருஷம் இருக்கும், அது நடந்து! அன்று பௌர்ணமி. நிலாக் காட்டிலே கன்னியர்களின் பிரார்த்தனை நடக்கும் தினம் அது. பொழுது சாய்வதற்குச் சற்று முன்பாகவே, சொக்கி தன்னுடைய கொம்பன் யானையைப் பிடித்துக் கொண்டு வழி நடக்க ஆரம்பித்தான். மற்றக் கன்னியர்கள் நிலா வந்ததும் வந்து விடுவார்கள் அல்லவா? சொக்கி அவர்களுக்கு முன்பாகவே நிலாப் பாறைக்குச் சென்று மாலை தொடுத்துவிட வேண்டும்! அவன் தொடுத்த மாலையை, அவன் கையாலேயே வெகுமதியாகப் பெறுவதில், மற்றப் பளிஞர் பெண்களுக்கு ஒரு தனியான ஆனந்தம்! சொக்கிக்கு இது நன்றாகத் தெரியும். எனவே பௌர்ணமி தோறும் சொக்கி இந்தப் பூமாலைச் சடங்கை நடத்தத் தவறுவதில்லை. ஆனால் இன்று அவன் புறப்படும்போதே சகுனம் சரியாக இல்லை. எங்காணும் இல்லாத விதமாகக் காட்டுப் பூனை ஒன்று குறுக்கே ஓடியது. பளிஞர் கூட்டத்தில் இந்த மாதிரி ஒரு துர்க்குறி கண்டால் உடனே மேலே நடவாமல் நின்று விடுவதுதான் பழக்கம். என்றாலும் சொக்கி இதைப் பொருட்படுத்தவில்லை. நடந்தான். ஆனால் கொஞ்ச தூரம் சென்றதும் ஒரு நரி ஊளை இட்டது. 'காடு என்றால் நரி ஊளை இடாமல் இருக்குமா!' என்று எண்ணிக் கொண்டே சொக்கி மேலும் நடந்தான். மறுபடியும் கொஞ்ச தூரம் சென்றதும் எங்கோ ஒரு ஆட்டின் அலறல் கேட்டது. 'அந்தப் பக்கமாகப் புலி நடமாடுகிறது போலும்!' என்று எண்ணிக் கொண்டே மேலும் நடந்தான் சொக்கி. தைரியம் ஒரு புறமிருக்க, நிலாப் பாறைக்குச் செல்ல வேண்டும் என்பதிலே அவனுக்கு அத்தனை கண்டிப்பு! ஆனால் மலைப் பாதையின் வளைவிலே அவன் திரும்பியதும், என்றும் கலங்காத கொம்பன் யானை கலங்கி நின்றது. தலையைத் திருப்பிச் சொக்கியைப் பார்த்துத் தும்பிக்கையைத் தூக்கியது. "குடிசைக்குப் போய் விடுவோம்!" என்று சொல்லுகிற பாவனையில்! ஆனால் சொக்கி இதற்கும் தயங்கவில்லை.

"கலி கல் கலா கதே!" என்றான் யானையைப் பார்த்து. யானை தும்பிக்கையை ஆட்டிக் கொண்டே பார்த்தது.

"கந கட" என்று ஒரு பயங்கரமான அதட்டு அதட்டினான் சொக்கி. அந்த அதட்டலை மீறுகிற அளவுக்குத் தைரியம், அதாவது, யஜமானத் துரோகம் இல்லை, கொம்பன் யானைக்கு! அப்படியே கீழ்ப்படிந்து நாய்க் குட்டியைப் போல் வாலை ஆட்டிக் கொண்டே நடந்தது யானை! இதைக் கண்டு திருப்தியோடு புன்சிரிப்புச் சிரித்துக் கொண்டே, குறுகலான சிற்றோடையின் கரையோரமாக நடக்க ஆரம்பித்தான் சொக்கி. ஆனால் அது என்ன?

ஓடையின் இந்தக் கரையில் ஒரு மான்—பெண் மான்—நின்று கொண்டு அக் கரையில் எதைக் கூர்ந்து பார்த்துக் கொண்டு சொக்குகிறது? சொக்கி தலையைத் தூக்கிப் பார்த்தான். சிற்றோடையின் மறு கரையில் ஓர் ஆண் மான் நின்றது. யானை தன்னோடு வந்தால் மான் கலைந்து ஓடி விடும் என்று நினைத்த சொக்கி, யானையைப் பார்த்துச் சொன்னான்:

"கலி கல்!"

கொம்பன் யானைக்கு ஏற்கனவே மனம் கலைந்திருந்தது! எனவே சொக்கி தனியாக நடப்பதைச் சம்மதிக்காமல், மேலும் ஒரு அடி எடுத்து வைத்தது அது.

இதைக் கண்டதும் சொக்கிக்கு மும்மடங்கு கோபம் உண்டாயிற்று. ஒரு ஹூங்காரம் கொடுத்துக் கொண்டே சொன்னான்: "கலி கல்! கல கரா கதே!"

பாவம்! யானை மிரள மிரள விழித்துக் கொண்டே நின்று விட்டது. சொக்கி ஓடையை நோக்கி நடந்தான்.

நடந்து கொண்டே திரும்பிப் பார்த்தான் சொக்கி. தன்னை வரச்சொல்லுவான், அனுமதிப்பான் என்று எதிர்பார்ப்பதற்கு அடையாளமாக யானை மீண்டும் ஒரு அடி எடுத்து வைத்தது. அவ்வளவுதான்; சொக்கிக்கு ஒரே ஆவேசம் வந்து விட்டது!

"கச கத் கதி கய கம்! கவ கரா கதே!" என்று உரத்த குரலில் கட்டளை இட்டான் சொக்கி. யானை மறு பக்கம் திரும்பிச் சோகமே உருவாக நின்று கொண்டது. சொக்கி பெண் மானின் அருகிலே வந்தான்.

இங்கே பெண் மான். எதிர் கரையிலே ஆண் மான் நின்று கொண்டிருந்தது. அதைப் பார்த்தவாறு இறங்கியது இந்தப் பெண் மான். பாசத்தின் காந்தத்திலே ஒன்றினால் ஒன்று ஈர்க்கப்பட்டு இரண்டு மான்களும் மறுகி நின்றன. இரண்டுக்கும் மத்தியிலோ ஓடை ஆவேசக் கூப்பாட்டுடன் ஓடிக் கொண்டிருந்தது. அன்று மலையின் உட்புறத்திலே நல்ல மழை பெய்திருக்க வேண்டும். தண்ணீர் சுழித்துக் கொண்டு ஓடியது. சொக்கி பெண் மானின் அருகிலே சென்றானோ இல்லையோ, ஆண் மான் என்ன நினைத்ததோ தெரியவில்லை, அப்படியே ஒரு குதி குதித்தது தண்ணீருக்குள்! பெண்மான் தன் இரு செவிகளையும் மேலும் கீழும் அடித்துக் கொண்டது. நீரிலே குதித்த ஆண் மானோ பெண் மானை நோக்கி நீந்தி வர ஆரம்பித்தது. ஆனால் தண்ணீரின் வேகத்தை அதனால் சமாளிக்க முடியவில்லை. இதோ கசமான ஒரு பெரிய சுழியிலே சிக்கிக் கொண்டது ஆண் மான். வேகமாகச் சுருண்டு சுழன்று வட்டமிடும் அந்த வெள்ளச் சுழியிலே சிக்கிய ஆண் மான், இரண்டு முறை தானும் தண்ணீரோடு சேர்ந்து வட்டம் சுற்றி விட்டது. இனி அடுத்த சுழியில் மான் தண்ணீருக்குள் ஆழ்ந்துவிட வேண்டியதுதான்!

"தடால்" என்று சத்தம் கேட்டது. சொக்கி தண்ணீருக்குள் குதித்துவிட்டான். இந்தச் சத்தத்தைக் கேட்ட யானை திரும்பிப் பார்த்தது. காலைத் தேய்த்தது.

"கச கத் கய கம்!" என்று அல்லவா சத்தியம் இட்டிருக்கிறான் சொக்கி. எப்படி அந்த இடத்தை விட்டு நகருவது?

கைகளை வேகமாக வீசிக் கொண்டு நீந்திய சொக்கி, இதோ சுழியின் எல்லை வட்டத்துக்குச் சென்று விட்டான். கையை வீசி ஆண் மானின் கொம்பைப் பிடித்து ஒரு இழுப்பு இழுத்தான். ஒரு ஹூங்காரத்தோடு கெம்பினான். அடுத்த கணம் சுழலில் இருந்து விடுபட்ட மான், எம்பி ஒரு துள்ளுத் துள்ளிக் கொண்டே இக்கரையை நோக்கிப் பெண் மானைப் பார்த்தவாறு நீந்தியது. சொக்கி அதைப் பின் தொடர்ந்தான்.

ஏதோ கண்ணை மூடி விழிக்கும் நேரம் என்று சொல்வார்களே, அந்தக் கணக்கில் நடந்தது இத்தனையும், ஒரு விநாடிக்குள்ளே! அடுத்த விநாடி கரையிலே வந்து குதித்த ஆண்மான் ஒரு உதறல் உதறித் தண்ணீரைத் தெளித்துக் கொண்டே பெண் மானோடு குதித்தோடி விட்டது.

சொக்கி கரையிலே வந்ததும் பெருமூச்சு விட்டுக் கொண்டே கூந்தலைப் பிழிந்தவாறு திரும்பிப் பார்த்தான். கொம்பன் யானை அவனுடைய உத்தரவை எதிர்நோக்கி ஒரே கவலையோடு நின்று கொண்டிருந்தது. "மனிதன்தான் சத்தியத்துக்குக் கட்டுப்பட மாட்டான்! கொம்பன் யானை அப்படியா!" என்று சொல்லுவது போல சொக்கியின் முகத்தில் ஒரு புன்முறுவல் வந்தது. "கவா!" என்றான் யானையைப் பார்த்து. அந்த வார்த்தை வந்ததோ இல்லையோ, ஒரே எட்டில் அவன் அருகே படர்ந்து வந்து நின்று, மத்தகத்தினால் சொக்கியின் மேனியிலே தடவியது யானை. அதனுடைய தும்பிக்கை சொக்கியின் கேசத்தை நன்றாகப் பிழிந்தது.

"கனா கக் கரு!" என்றான் சொக்கி. யானையின் பாதத்திலே மிதித்து மேலே ஏறினான் அவன். "கக கட" என்றான். ஆபத்திலிருந்து விடுபட்ட உத்சாகத்தில் யானை வெகு வேகமாக நடந்தது.

இதன் பிறகு கிலாப் பாறைக்குச் சென்றது வரை எவ்வித இடைஞ்சலும் இல்லை. கிலாப் பிரார்த்தனையும் எந்த விக்கினமும் இல்லாமல் நடைபெற்றது. ஆனாலும் நிதானமாக [யோசிக்கும்போது சொக்கிக்



குத் தான் ஓடையிலே குதித்தது குறித்து அத்தனை திருப்தி ஏற்படவில்லை. மானைக் காப்பாற்றுவதற்காக இப்படி ஒரு காரியம் செய்தது சரிதான் என்றாலும், காட்டோடையில் தண்ணீர் பெருகி வரும் போது தான் அசட்டுத் தைரியத்துடன் குதித்த விவரம் தகப்பனுக்கு மட்டும் தெரிந்தால், எத்தனை விபரீதம் நேர்ந்து விடும்! இனிமேல் தனியாகப் போகவே கூடாது என்று சொல்லி விடுவானே சொக்கப்பன்! ஏன், கிலாப் பிரார்த்தனையே வேண்டாம் என்றுகூடத் தடுத்து நிறுத்தி விடுவான்! —

இப்படி எண்ணியே இந்தச் சம்பவத்தை யாரிடமும் சொல்லாமல் மனத்துக்குள்ளேயே வைத்துக் கொண்டாள் சொக்கி. எப்பொழுதாவது அதை எண்ணிப் பார்க்கும்போது, மனத்தில் ஒரு விதமான திகில்கூட உண்டாகும் அவளுக்கு. ஆனால் இன்று அகவல் மகன் இத்தனை தூரம் அந்தச் சம்பவத்தைச் சொல்லி, மானைக் காப்பாற்றிய புண்ணியத்தினால் நன்மை உண்டு என்று பாடியதும், இதயத்துக்குள்ளே சொக்கி சந்தோஷப்பட்டுக் கொண்டாள். மானைக் காப்பாற்றிய காரியத்துக்கு வேறொரு பலன்கூட வேண்டுமா? தான் உயிர் தப்பியதே பெரிய புண்ணியந்தானே? இல்லையென்றால் அத்தனை கெட்ட அறிகுறிகள் தோன்றியதற்கு, அன்று எத்தனை பெரிய அபாயம் தனக்கு நேர்ந்திருக்க வேண்டும்!



இப்படியெல்லாம் சொக்கி மன உலகின் நினைவுக் காட்டுக்குள்ளே சென்று அந்தச் சம்பவத்தை எண்ணிப் பார்த்துக் கொண்டாள். இப்பொழுது பழகிப் பண்டாரம் அகவல் மகனை இது குறித்து வாயைத் திண்டாமல் விட்டதுங்கூட அந்தப் புண்ணியத்தின் பலன்தான் என்று நினைத்து மகிழ்ச்சி அடைந்தாள் சொக்கி!

இதற்குள் நாகர் பீடத்துக்கு முன்பு படையலுக்காகச் செய்ய வேண்டிய தீபாராதனைச் சடங்கு ஆரம்பமாயிற்று. நீளமான கொம்பு ஒன்றை ஊதினான் ஒரு பளிஞன். அகவல் மகனுக்காகக் குழல் ஊதுவதை இதுவரை நிறுத்தி யிருந்த குழலர்களும் இப்பொழுது காவடிச் சிந்து போன்ற, ஆனால் இன்னுங்கூட மிக எளிமையான, ஒரு பிரார்த்தனை மெட்டை ஏக காலத்தில் பலர் சேர்ந்து ஊதினார்கள். உறுமி என்ற தாள வாத்தியம் மங்களகரமாக முழங்கியது. இந்த ஒலியிலே கவரப்பட்டு மலை முகட்டிலே காட்டு மயில்கள் எல்லாம் தோகை விரித்தாடின. பளிஞர் குலத்தின் கன்னி ஒருத்தி பீடத்துக்குச் சற்றுத் தொலைவிலேயிருந்த ஒரு விசாலமான பாறையில் ஏறி, கவண் ஒன்றைக் கையில் பிடித்து அதில் கல்லுக்குப் பதிலாக ஒருபொரி உருண்டையை வைத்துச் சுண்டி வீசினாள். வன தேவதைகள் அருவமாக நின்று அதை ஏற்றுக் கொள்ளும் என்று பளிஞரின் சம்பிரதாயம்!

அந்த நேரத்தில், 'யாரோ வர்றாங்கோ!' என்று கதறினான் ஒரு பளிஞன். அப்பொழுது கூட்டத்தை விலக்கிக் கொண்டு மூன்று 'நாகரிக' மனிதர்கள் உள்ளே நுழைந்தார்கள். மூவரில் முன்னால் நடந்து சென்ற வாலிபன் தங்களுக்கு அருகிலே வந்த பிறகுதான் அது யாரென்று பளிஞர்களுக்குத் தெரிந்தது. நகரத்து முறையில் அவன் ஆடை அணிந்திருந்ததுதான் அதற்குக் காரணம்! "கந்தப்பன்" என்றது ஒரு குரல். அடுத்த விநாடி "கந்தப்பா, கந்தையா!" என்று ஏக காலத்தில் நூற்றுக் கணக்கான குரல்கள் எழுந்தன. பளிஞர் குலம் அத்தனையும் அவனைச் சூழ்ந்து பாய்ந்தது. "தயவுசெய்து வழி விடுங்கள்!" என்று பளிஞருக்குச் சொல்லிக் கொண்டே தன் பின்னால் வந்த இரண்டு நண்பர்களையும் "வாருங்கள் உள்ளே" என்று அழைத்தான் கந்தப்பன். ஆச்சரியப்பட்டவர்கள் எல்லாரும் வியப்பிலிருந்து மீளுவதற்குள், மற்றொரு பெரிய ஆச்சரியமாக இரண்டு 'நகர நாகரிக' மனிதர்கள் கந்தப்பனின் பின்னோடு பளிஞர் கூட்டத்துக்குள்ளே வந்தார்கள். அவர்கள் வேறு யாருமில்லை. அப்புலிங்கமும் டாக்டர் சுரேஷ் அவர்களுமே! டாக்டர் சுரேஷின் கழுத்தைச் சுற்றி 'ஸ்டெதஸ்கோப்' தொங்குவதற்குப் பதிலாக, இப்பொழுது ஒரு நீளமான வார் வளைந்து கொண்டு கிடந்தது. அதில் தொங்கிய புகைப்படக் கருவி ஒன்று. ஒரே வியப்போடு கண்களை அகலமாக விழித்துப் பார்த்தது!

(தொடரும்)

Printed & Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10. Editor : Mi. Pa. Somasundaram

ஹிமாலயா
புக்கே
உபயோகித்து
அதன்
அதிகப்படியான
புதுப்பொலிவை
உணருங்கள்
–நாள்முழுவதும்!



# ஹிமாலயா புக்கே

டால்கம் அண்டு டாய்லெட் பவுடர்ஸ்



சிவப்புக் கோடிட்ட ஹிமாலயா பொக்கே
டாய்லெட் பவுடர் டின் ஒரு பவுடர்
பேடுடன் கூடியது.

HBP. 12A-50 TM இராஸ்மிக் கம்பெனி லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரித்தது.

REGISTERED No. M. 4392

Registered as a Newspaper in Ceylon

# "என்ன மென்மையான, மனோகரமான நறுமணம்!"

என்கிறார் **ஜமுனா**

"லக்ஸ் டாய்லட் சோப்பிலுள்ள புது மலர்போன்ற நறுமணத்தை நான் விரும்புகிறேன்."



உலகத்திலுள்ள அழகிய பெண்மணிகள் செய்வதைப் போல் நீங்களும் செய்யுங்கள் — சுத்தமான, வெண்மையான லக்ஸ் டாய்லட் சோப்பை உங்களுடைய தினசரி அழகுசாதனங்களில் ஒன்றாகச் செய்து கொள்ளுங்கள். மிருதுவான, நறுமணமுள்ள அதன் நுரை உங்களுடைய வதனத்தை சுத்தம் செய்து, மென்மையாக்கி, புத்துணர்ச்சியையளித்து, உங்களுடையவனப்பை அதிகப்படுத்தட்டும்.

மேனி அழகிற்கு பெரிய சைஸ் சோப்பை உபயோகியுங்கள்.







## லக்ஸ் டாய்லட் சோப்

சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்

இந்தியாவில் தயாரித்தது

LTS. 452-50 TM